# 13. எழுத்து

எழுத்து

பொது அறிமுகம்

**General Introduction**

அன்புள்ள மாணவர்களே!

தமிழ் மொழி வளமான மொழி. இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு மேற்பட்ட பழமை உடைய மொழி. தமிழ் மொழி 'செம்மொழி' என்னும் சிறப்பு உடையது. தமிழ் மொழியின் வளமைக்கு அம்மொழியில் உள்ள இலக்கண நூல்கள், இலக்கிய நூல்கள் காரணம் ஆகும்.

தமிழின் மொழி அமைப்பை இலக்கண நூல்கள் காப்பாற்றுகின்றன. இதனால் தமிழ் மொழி இரண்டாயிரம் ஆண்டுகளுக்கும் மேலாக வாழ்ந்து வருகின்றது. தமிழ் இலக்கணத்தின் சிறப்புக் கருதி அது குறித்த பாடம் இப்பகுதியில் இடம் பெறுகிறது.

தமிழ் இலக்கணம் பற்றி அறிந்து கொள்ள ஆறு பாடங்கள் இங்குத் தரப் பெறுகின்றன. இப்பாடத்தில் உள்ள செய்திகள் நன்னூல் என்ற இலக்கண நூலின் அடிப்படையில் தரப்படுகின்றன.

எழுத்து

பாட அறிமுகம்

**Introduction to Lesson**

இந்தப் பாடம் தமிழ் மொழியில் உள்ள எழுத்துகள் குறித்த அறிமுகச் செய்திகளை உங்களுக்குத் தருகிறது.

எழுத்து

முதல் எழுத்துகள்

பாடம்

**Lesson**

அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஏ, ஐ, ஒ, ஓ, ஔ = 12 எழுத்துகள்

க், ங், ச், ஞ், ட், ண், த், ந், ப், ம், ய், ர், ல், வ், ழ், ள், ற், ன். = 18 எழுத்துகள்

மேலே உள்ள இரு பட்டியல்களில் உள்ள எழுத்துகள் உங்களுக்குத் தெரியும்.

இவற்றில்

அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஏ, ஐ, ஒ, ஓ, ஔ

என்ற பன்னிரண்டு எழுத்துகளும் உயிர் எழுத்துகள் ஆகும். இவை தமிழ் மொழிக்கு உயிர் போன்ற எழுத்துகள் ஆகும்.

க், ங், ச், ஞ், ட், ண், த், ந், ப், ம், ய், ர், ல், வ், ழ், ள், ற், ன்.

என்ற பதினெட்டு எழுத்துகள் **மெய் எழுத்துகள்** ஆகும். இவை தமிழ் மொழிக்கு **மெய் (உடல்)** போன்ற எழுத்துகள் ஆகும்.

பன்னிரண்டு உயிர் எழுத்துகளும், பதினெட்டு உடல் (மெய்) எழுத்துகளும் சேர்ந்து மொத்தம் 30 எழுத்துகளும் தமிழ் மொழியின் **முதல் எழுத்துகள்** எனப்படுகின்றன.

• **முதல் எழுத்துகளின் வகைகள்**

**(1) உயிர் எழுத்துகளின் வகைகள்**

அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஏ, ஐ, ஒ, ஓ, ஔ = 12 எழுத்துகள்

| குறில் | நெடில் |
|---|---|
| அ | ஆ |
| இ | ஈ |
| உ | ஊ |
| எ | ஏ |
| ஒ | ஐ |
| | ஓ |
| | ஔ |

5 + 7 = 12

பன்னிரண்டு உயிர் எழுத்துகளை இரு வகைகளாகப் பிரிக்கலாம்.

அ இ உ எ ஒ

என்ற எழுத்துகளைச் சொல்லிப் பாருங்கள்.

ஆ ஈ ஊ ஏ ஐ ஓ ஔ

என்ற எழுத்துகளைச் சொல்லிப் பாருங்கள்.

அ, இ, உ, எ, ஒ என்ற எழுத்துகளைச் சொல்லக் குறைந்த முயற்சியும், குறைந்த நேரமும் ஆகிறது. எனவே இவை குறில் (குறுகிய) **எழுத்துகள்** எனப்படுகின்றன.

ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ என்ற எழுத்துகளைச் சொல்ல நிறைந்த முயற்சியும், நிறைய நேரமும் தேவைப்படுகின்றன. எனவே இவை நெடில் (நீண்ட) **எழுத்துகள்** எனப்படுகின்றன.

எனவே இவற்றைக் குறில், நெடில் என்று பிரிக்கலாம்.

சொல்வதற்குக் குறைந்த முயற்சியும் குறைந்த காலமும் தேவைப்படும் அ, இ, உ, எ, ஒ ஆகிய ஐந்து எழுத்துகள் **குறில் எழுத்துகள்** எனப்படும்.

சொல்வதற்கு நிறைந்த முயற்சியும், நிறைய நேரமும் தேவைப்படும் ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ ஆகிய ஏழு எழுத்துகள் **நெடில் எழுத்துகள்** எனப்படும்.

ஓர் எழுத்தைச் சொல்வதற்கு அதாவது, ஒலிப்பதற்கு ஆகும் நேர அளவு **மாத்திரை** எனப்படுகிறது. குறில் எழுத்தின் ஒலிப்பு நேரம் ஒரு மாத்திரை. நெடில் எழுத்தின் ஒலிப்பு நேரம் இரு மாத்திரைகள்.

• மெய் எழுத்துகளின் வகைகள்

க், ங், ச், ஞ், ட், ண், த், ந், ப், ம், ய், ர், ல், வ், ழ், ள், ற், ன்.

| |
|---|
| வல்லினம் - க், ச், ட், த், ப், ற் |
| மெல்லினம் - ங், ஞ், ண், ந், ம், ன் |
| இடையினம் - ய், ர், ல், வ், ழ், ள் |

மெய் (உடல்) எழுத்துகளை மூன்றாகப் பிரிக்கலாம்.

க், ச், ட், த், ப், ற்

என்ற எழுத்துகளைச் சொல்லிப் பாருங்கள். இவ்வெழுத்துகளைச் சொல்லும் பொழுது வயிற்றுள் இருந்து வலிமையாக காற்று மேலே வரும். எனவே இவை **வல்லின எழுத்துகள்** ஆகும்.

ங், ஞ், ண், ந், ம், ன்

என்ற எழுத்துகளைச் சொல்லிப் பாருங்கள். இவ்வெழுத்துகளைச் சொல்ல மென்மையான முயற்சி போதும். எனவே இந்த மென்மையான எழுத்துகள் **மெல்லின எழுத்துகள்** எனப்படுகின்றன.

ய், ர், ல், வ், ழ், ள்

என்ற எழுத்துகளைச் சொல்லிப் பாருங்கள். இவ்வெழுத்துகளைச் சொல்ல மென்மையும், வன்மையும் இல்லாமல் இடைப்பட்ட முயற்சி தேவைப்படுகிறது. எனவே இவை **இடையின எழுத்துகள்** எனப்படுகின்றன. மெய் எழுத்துகள் உயிர்க்குறில் எழுத்துகளைவிடக் குறைவான நேரத்தில் ஒலிக்கப்படுகின்றன.

இவற்றின் (மெய் எழுத்து) ஒலிப்புநேரம் 1/2 மாத்திரை ஆகும்

• **எழுத்துகளின் ஒலி அளவு**

1. குறில்
2. நெடில்

என உயிர் எழுத்துகளையும், உயிர்மெய் எழுத்துகளையும் பிரிக்கிறோம். குறுகிய ஓசை, நெடிய ஓசை என்பதை எதை வைத்து அளவு செய்வது?

| | |
|---|---|
| அ | ஆ |
| க | கா |
| கொ | கோ |
| | |
| குறில் | நெடில் |

இந்த எழுத்துகளைச் சொல்லிப் பாருங்கள். ஒலி அளவில் நீங்கள் வேறுபாட்டை உணர முடியும்.

எழுத்துகள் ஒலிக்கும் அளவை மாத்திரை எனக் குறிப்பிடுவர் இலக்கண ஆசிரியர்கள்.

| | | |
|---|---|---|
| இது ஒரு கை நொடி அளவு : | | (அதாவது கட்டை விரலையும் நடுவிரலையும் சேர்த்துச் சுண்டும் அளவு) |
| | | அல்லது |
| கண்ணிமை அளவு | - | (அதாவது கண் இமைக்கும் அளவு) |

என்று கணக்கிடப்படுகிறது. எனவே,

| | | |
|---|---|---|
| குறில் எழுத்துகள் | - | 1 மாத்திரை அளவின. (அ, க, ச, சி, து) |
| நெடில் எழுத்துகள் | - | 2 மாத்திரை அளவின (ஆ, கா, சா, சீ, தூ) |

மெய் எழுத்துகள் - 1/2 மாத்திரை அளவின.

(க், ங், ச், ஞ்.....ன்)

என்பதை நினைவில் கொள்ளுங்கள்.

• **சார்பெழுத்துகள்**

முதல் எழுத்துகளைச் சார்ந்து வரும் எழுத்துகள் சார்பெழுத்துகள் எனப்படும். அவை,

(1) உயிர்மெய்

(2) ஆய்தம்

(3) உயிரளபெடை

(4) ஒற்றளபெடை

(5) குற்றியலுகரம்

(6) குற்றியலிகரம்

(7) ஐகாரக் குறுக்கம்

(8) ஔகாரக் குறுக்கம்

(9) மகரக் குறுக்கம்

(10) ஆய்தக் குறுக்கம்

என்னும் பத்து ஆகும்.

• உயிர்மெய்

மேற்கண்ட பட்டியலில் உள்ள எழுத்துகள் உயிர்மெய் எழுத்துகள் எனப்படுகின்றன.

மெய்யெழுத்துகளுடன் உயிர் எழுத்துகள் சேர்வதால் உண்டாகும் எழுத்துகளே **உயிர்மெய் எழுத்துகள்** ஆகும். எனவே இவை 18(மெய் எழுத்துகள்)x12(உயிர் எழத்துகள்)=216(உயிர்மெய் எழுத்துகள்) ஆகும்.

எடுத்துக்காட்டிற்கு 'க' என்ற எழுத்தை எடுத்துக் கொள்வோம்.

'க்' என்ற எழுத்து வடிவம் 'க' என்ற எழுத்தில் உள்ளது. எனவே இது மெய் எழுத்தைச் சார்ந்து வருகிறது என்பது தெரிய வருகிறது.

'க' என்ற எழுத்தைச் சொல்லிப் பாருங்கள்.

க் + அ;

க்அ = க.

'க்' என்ற மெய் எழுத்து முதலிலும் 'அ' என்ற உயிர் எழுத்து இரண்டாவதாகவும் இணைந்து ஒலிக்கக் 'க' என்ற எழுத்து கிடைக்கிறது. எனவே 'க' என்ற எழுத்து உயிர், மெய் என்ற இரண்டையும் சேர்ந்து ஒலிக்கும் எழுத்து என்பது தெரிய வருகிறது.

இதுபோலவே மேற்காட்டிய 216 எழுத்துகளும் முதல் எழுத்துகளைச் சார்ந்தே ஒலிக்கின்றன.

**• உயிர்மெய் எழுத்துகளின் வகைகள்**

உயிர்மெய் எழுத்துகளை இரு வகையாகப் பிரிக்கலாம். அவை குறில், நெடில் ஆகியன.

குறுகிய ஒலிகளுடைய எழுத்துகள் குறில் **எழுத்துகள்** எனப்படும்.

நெடிய ஒலிகளுடைய எழுத்துகள் நெடில் **எழுத்துகள்** எனப்படும் என்பது உங்களுக்குத் தெரிந்ததே.

அ, இ, உ, எ, ஒ என்ற குறில் உயிர் எழுத்துச் சார்பாகப் பிறக்கும் உயிர்மெய் எழுத்துகள் குறில் **எழுத்துகள்** ஆகும்.

ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ என்ற நெடில் எழுத்துகளின் சார்பாகப் பிறக்கும் உயிர்மெய் எழுத்துகள் நெடில் **எழுத்துகள்** எனப்படும்.

இது தவிர இந்த எழுத்துகளை அவற்றின் மெய் ஒலிகள் அடிப்படையில் இன்னும் மூன்று வகையாகப் பிரிக்கலாம். அவை **வல்லினம், மெல்லினம், இடையினம்** என்பனவாகும்.

க், ச், ட், த், ப், ற் என்னும் எழுத்துகளைச் சார்ந்து பிறக்கும் உயிர்மெய் எழுத்துகள் **வல்லின உயிர்மெய் எழுத்துகள்** ஆகும்.

ங், ஞ், ண், ந், ம், ன் என்னும் எழுத்துகளைச் சார்ந்து பிறக்கும் உயிர்மெய் எழுத்துகள் **மெல்லின உயிர்மெய் எழுத்துகள்** எனப்படும்.

ய், ர், ல், வ், ழ், ள் என்னும் எழுத்துகளைச் சார்ந்து பிறக்கும் உயிர்மெய் எழுத்துகள் **இடையின உயிர்மெய் எழுத்துகள்** எனப்படும்.

• **ஆய்தம்**



ஆய்த எழுத்து

ஃ என்ற எழுத்து ஆய்தம் எனப்படுகிறது. இதனை அஃகு என்று கூறுவர். ஃ என்ற இந்த எழுத்து 'அ' என்ற உயிர் எழுத்தையும் 'கு' என்ற உயிர்மெய் எழுத்தையும் சேர்த்தே ஒலிக்கப்படும்.

உயிர் எழுத்தை முதலாகவும், வல்லின உயிர்மெய் எழுத்தை இறுதியாகவும் கொண்டு இது இடையில் வரும். தனித்து வராது. எனவே இது சார்பெழுத்து எனப்படுகிறது.

(எ.கா.) அஃது, எஃது.

• குற்றியலுகரம்

**கு, சு, டு, து, பு, று**

என்ற ஆறு எழுத்துகளைச் சற்றுக் கவனியுங்கள்.

இவை, (1)உயிர்மெய்எழுத்துகள்

(2)உயிர்மெய்க்குறில்எழுத்துகள்

(3) வல்லின உயிர்மெய்க் குறில் எழுத்துகள்

என்ன, சரிதானே!

இவற்றைத் தனித்தனியாகச் சொல்லிப் பாருங்கள். இவை ஒரு மாத்திரை ஒலிக்கும்.

ஆனால்,

பாக்கு
காசு
உண்டு
பந்து
பாபு
ஊறு

இந்தச் சொற்களைச் சொல்லிப் பாருங்கள். இவற்றில் இறுதியில் உள்ள கு, சு, டு, து, பு, று ஆகிய எழுத்துகள் குறைந்து ஒலிப்பதாகத் தெரியும். தனித் தனியாகச் சொன்னதைவிட இப்போது இவை குறைவாகவே ஒலிக்கும்.

அதைக் கணக்கிடுவோம் வாருங்கள்.

பா + க் + கு

2 + ½ + 1 = 3 ½ மாத்திரை.

ஆனால் மூன்றரை மாத்திரையைவிட இந்தச் சொல் இன்னும் குறைவாகவே ஒலிக்கும். குறிப்பாக கு என்ற எழுத்து ஒரு மாத்திரையில் இருந்து குறைந்து ஒலிக்கும்.

இது போலவே மேலே உள்ள மற்ற சொற்களிலும் உகரம் குறைந்தே ஒலிக்கும்.

இவ்வாறு குறைந்து ஒலிக்கும் உகரம் **குற்றியலுகரம்** எனப்படுகிறது. இதுவும் ஒரு சார்பு எழுத்து ஆகும்.

• **குற்றியலிகரம்**

தன் மாத்திரை அளவில் இருந்து ஒலி குறைந்து ஒலிக்கும் உகரம் **குற்றியலுகரம்**. அதுபோலத் தன் மாத்திரை அளவில் இருந்து குறைந்து ஒலிக்கும் இகரம் **குற்றியலிகரம்** ஆகும்.

நாகு + யாது = நாகியாது
கொக்கு + யாது = கொக்கியாது

இந்தச் சொற்களில் வரும் 'கி' என்ற இகர எழுத்துகள் தம் ஒரு மாத்திரை அளவினின்று குறைந்து ஒலிக்கின்றன. இதுவே **குற்றியலிகரம்** எனப்படும். இது பெரும்பாலும் சில இடங்களிலே வரும்.

குறைந்து வரும் இயல்பைச் சோதனை செய்வோமா?

நாகு + யாது = நாகியாது
(2+1) + (2+1) = (2+1+2+1) = 6

6 மாத்திரையாக ஒலிக்க வேண்டிய இந்தச் சொல் அதனிலும் குறைந்து ஒலிப்பதை நீங்கள் உணர்ந்திருப்பீர்கள்.

மற்ற சார்பு எழுத்துகளை அடுத்த நிலைப் பாடங்களில் படிக்க உள்ளீர்கள்.

பயிற்சி - 1

**Exercise 1**

I. கீழ்க்காணும் தொடர்களைப் படிக்கவும். அவற்றைச் சரியா? தவறா? என அறிந்து கூறவும். விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Read the following and say whether they are right or wrong. For answers, press the answer button.

1 உயிர் எழுத்துகள் மட்டுமே முதல் எழுத்துகளாகும்.

(விடை : தவறு)

2 மெய் எழுத்துகள் மட்டுமே முதல் எழுத்துகளாகும்.

(விடை : தவறு)

3 உயிர்மெய் எழுத்துகள் முதல் எழுத்துகளாகும்.

(விடை : தவறு)

4 உயிர் 12 எழுத்துகள் மெய் 18 எழுத்துகள் ஆக 30 எழுத்துகளும் முதல் எழுத்துகள் ஆகும்.

(விடை : சரி)

5 உயிர்மெய் எழுத்து சார்பெழுத்துகளுள் ஒன்று.

(விடை : சரி)

6 சார்பெழுத்துகள் மொத்தம் பத்து.

(விடை : சரி)

7 உயிர் எழுத்துகள் குறில், நெடில் என இருவகையின.

(விடை : சரி)

8 உயிர் எழுத்துகள் வல்லினம், மெல்லினம் என இருவகையின.

(விடை : தவறு)

9 வல்லினம், மெல்லினம், இடையினம் என்னும் மூவகையின மெய்யெழுத்துகளாகும்.

(விடை : சரி)

10 இடையினம் என்பது மெய்யெழுத்து வகையுள் ஒன்று.

(விடை : சரி)

## Exercise 2

II. கீழ்க்காணும் கோடிட்ட இடங்களை நிரப்பச் சரியான சொற்களைக் கூறவும். விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Find the right words to fill in the blanks: For answers, press the answer button.

1 அ, இ, உ, எ, ஒ என்பன ------------- எழுத்துகள்.
(விடை : **உயிர்க்குறில்**)

2 ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ என்பன ---------- எழுத்துகள்.
(விடை : **உயிர் நெடில்**)

3 க், ங். ச், ஞ் முதலிய 18 எழுத்துகள் --------- எழுத்துகள்.
(விடை : மெய்)

4 க், ச், ட், த், ப், ற் ஆகிய எழுத்துகள்---------------.
(விடை : **வல்லினம்**)

5 ங், ஞ், ண், ந், ம், ன் ஆகிய எழுத்துகள்---------------.
(விடை : மெல்லினம்)

6 ய், ர், ல், வ், ழ், ள் ஆகிய எழுத்துகள்---------------.
(விடை : **இடையினம்**)

7 உயிர் எழுத்துகள் மொத்தம் ----------.
(விடை : **பன்னிரண்டு**)

8 மெய் எழுத்துகள் மொத்தம் -----------.
(விடை : **பதினெட்டு**)

9 ஆய்தம் என்பது ------------- எழுத்து.
(விடை : **சார்பு**)

10 உயிர்மெய் என்பது ---------- எழுத்து.
(விடை : **சார்பு**)

III. கீழ்க்காணும் வினாக்களுக்குச் சரியான விடையைத் தேர்ந்தெடுத்து எழுதவும். விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Choose the right answer for the following questions. For answers, press the answer button.

1 மாத்திரை என்றால் என்ன?

அ) மருந்து (Tablet)

ஆ) சொல் அளவு

இ) ஒலி அளவு

ஈ) தொடர் அளவு

(விடை : **இ) ஒலி அளவு**)

2 உயிர்க் குறில் எழுத்து (அ, இ, உ, எ, ஒ) எத்தனை மாத்திரை அளவு உடையது?

அ) 1

ஆ) 2

இ) 1/2

ஈ) 3/4

(விடை : **அ) 1**)

3 உயிர் நெடில் எழுத்து (ஆ, ஈ, ஊ, ஏ, ஓ, ஔ) எத்தனை மாத்திரை அளவு உடையது?

அ) 1

ஆ) 2

இ) 1/2

ஈ) 3/4

(விடை : **ஆ) 2**)

4 உயிர்மெய்க் குறில் (க, சி, கு, கெ, கொ...) எத்தனை மாத்திரை அளவு உடையது?

அ) 1

ஆ) 2

இ) 1/2

ஈ) 3/4

(விடை : **அ) 1**)

5 உயிர்மெய் நெடில் (கா, சீ, கூ, கை, கோ...) எத்தனை மாத்திரை அளவு உடையது?

அ) 1

ஆ) 2

இ) 1/2

ஈ) 3/4

(விடை : **ஆ) 2**)

6 மெய்யெழுத்து ஒலி (க், ங், ச், ...) எத்தனை மாத்திரை அளவு உடையது?

அ) 1

ஆ) 2

இ) 1/2

ஈ) 3/4

(விடை : **இ) 1/2**)

7 குற்றியலுகரம் எத்தனை மாத்திரை அளவில் ஒலிக்கும்?

அ) 1

ஆ) 2

இ) 1/2

ஈ) 3/4

(விடை : **ஈ) 3/4**)

8 குற்றியலிகரம் எத்தனை மாத்திரை அளவில் ஒலிக்கும்?

அ) 1

ஆ) 2

இ) 1/2

ஈ) 3/4

(விடை : **ஈ) 3/4**)

9 ஆய்தம் எத்தனை மாத்திரை அளவில் ஒலிக்கும்?

அ) 1

ஆ) 2

இ) 1/2

ஈ) 3/4

(விடை : **ஈ) 3/4**)

10 கா என்ற எழுத்தின் மாத்திரை அளவு என்ன?

அ) 1

ஆ) 2

இ) 1/2

ஈ) 3/4

(விடை : **ஆ) 2**)

எழுத்து

பயிற்சி - 4

**Exercise 4**

IV கீழ்க்காணும் வினாக்களுக்கு ஒருவரியில் விடை தரவும். விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Answer the following questions in a line each: For answers, press the answer button.

1 உயிர்மெய் எழுத்து என்றால் என்ன?

(விடை : **உயிர் எழுத்தும் மெய் எழுத்தும் சேர்ந்து ஒலிப்பது உயிர்மெய் எழுத்து எனப்படும்.**)

2 உயிர்மெய் எத்தனை வகைப்படும்?

(விடை : **உயிர்மெய் எழுத்துகள் குறில், நெடில் என்று இருவகைப் பெறும்.**)

3 மெய் எழுத்துகள் எத்தனை? அவை யாவை?

(விடை : **மெய் எழுத்துகள் 18 ஆகும் அவை க்,ங்,ச்,ஞ்,ட்,ண் த்,ந்,ப்,ம்,ய்,ர்,ல்,வ்,ழ்,ள்,ற்,ன்**)

4 குறில் என்றால் என்ன?

(விடை : **குறுகிய ஒலிகளுடைய எழுத்துகள் குறில் எழுத்துகள் எனப் பெறும்.**)

5 நெடில் எழுத்துகள் என்றால் என்ன?

(விடை : **நீண்ட ஒலிகளையுடைய எழுத்துகள் நெடில் எழுத்துகள் எனப்பெறும்.**)

6 ஆய்த எழுத்து எவ்வாறு ஒலிக்கப் பெறுகிறது?

(விடை : **ஆய்த எழுத்து அஃகு ஒலிக்கப் பெறுகிறது.**)

7 ஆய்த எழுத்து தனித்து வருமா?

(விடை : **ஆய்த எழுத்து தனித்து வராது.**)

8 உயிர் எழுத்துகள் எத்தனை? அவை யாவை?

(விடை : **உயிர் எழுத்துகள் 12 ஆகும் .அவை அ,ஆ,இ,ஈ,உ,ஊ,எ,ஏ,ஐ,ஒ,ஓ,ஔ.**)

9 குற்றியலுகர எழுத்துகள் யாவை?

(விடை : **கு, சு, டு, து, பு, று ஆகியன குற்றியலுகர எழுத்துகள் ஆகும்.**)

10 குற்றியலிகரம் என்றால் என்ன?

(விடை : **தன் மாத்திரை அளவில் இருந்து குறைந்து ஒலிக்கும் இகரம் குற்றியலிகரம் ஆகும்.**)

## 14. சொல்

சொல் பொது அறிமுகம்

**General Introduction**

அன்புள்ள மாணவர்களே!

எழுத்துகள் பற்றி முன்பாடத்தில் படித்தோம். எழுத்துகள் ஒன்று சேர்ந்தால் சொல் கிடைக்கும். அந்தச் சொற்கள் ஒன்று சேர்ந்தால் தொடர் கிடைக்கும். தொடர்கள் ஒன்று சேர்ந்தால் ஒரு பெரிய புத்தகமே நமக்குக் கிடைத்து விடும்.

எழுத்தின் அடுத்த நிலை சொல். சொல் பற்றிய செய்திகளை இந்தப் பாடம் அறிமுகம் செய்கிறது.

சொல் பாட அறிமுகம்

**Introduction to Lesson**

தமிழ்ச் சொற்களின் அமைப்பு, பொருள், பொது இயல்பு ஆகியவைக் குறித்து இப்பாடத்தில் அறிந்து கொள்ளப் போகிறீர்கள்.

சொல் பாடம்

**Lesson**

'ப' என்பது ஓர் எழுத்து.

'ழ' என்பது ஓர் எழுத்து.

'ம்' என்பது ஓர் எழுத்து.

இந்த மூன்று எழுத்துகளை ஒன்று சேர்த்தால் 'பழம்' என்று ஒரு சொல் கிடைக்கும்.



பழம்

'பழம்' என்பது கனிந்துள்ள பயனுடைய நல்ல பழம் என்ற ஒரு பொருளைக் குறிக்கும். 'பழம்' என்ற சொல் ஒரு பொருளைத் தருவதால் அதனைச் சொல் என்று கூறலாம்.

இந்த எழுத்துகளையே பின்வருமாறு எழுதிப் பார்ப்போம்.

1. 'ழம்ப'
2. 'ம்பழ'
3. 'ழபம்'
4. 'பம்ழ'

மேலுள்ள நான்கையும் பாருங்கள். படியுங்கள். படிக்க வேடிக்கையாய் உள்ளது அல்லவா! இவை எழுத்துகள் கூடிச் சொல் போல இருக்கின்றன. இருந்தாலும் இவை பொருள் தரவில்லை. எனவே, இவை சொற்கள் அல்ல.

எழுத்துகள் சேர்ந்து நின்று, பொருள் தந்தால் அதையே சொல் என்று கூறுகிறோம்.

**ஓர் எழுத்து - ஒரு சொல்**



பை



கை

பை, கை இவை ஒற்றை எழுத்துகள். இருந்தாலும் இவை ஒரு பொருளைக் குறிக்கின்றன. இவ்வாறு ஓர் எழுத்தே ஒரு பொருள் குறிப்பதாக இருந்தாலும் அது சொல் என்று கொள்ளப்படும். இவற்றை ஓரெழுத்து ஒருமொழி எனக் கூறுவார்கள்.

திணை, பால், எண், இடம், காலம்

சொல் என்பது ஒரு பொருளைத் தருவதாக இருக்கும் என்பது இப்போது உங்களுக்குத் தெரிந்து இருக்கும். அதனுடன் அது திணை, பால், எண், இடம், காலம் ஆகியவற்றையும் தரும்.

மாணவர்களே! திணை, பால், எண், இடம், காலம் என்றால் என்ன என்று இனித் தெரிந்து கொள்வோமா?

**திணை**



இளங்கோ



செல்வி



மக்கள்



தேவர்

- **உயர்திணை**

படங்களைப் பார்த்தீர்களா? இவர்களுக்கு இதைச் செய்யலாம், இதைச் செய்யக்கூடாது என்பது தெரியும். இவ்வாறு அறிந்து செய்யக் கூடிய இவர்கள் **உயர்திணையில்** அடங்குவர்.

எனவே மக்கள், தேவர் உயர்திணை எனப்படுவர்.

• அஃறிணை







மரம் நாய் மயில்





கல் மண்

மரம், நாய், மயில், கல், மண் - இந்தப் பொருட்களுக்குத் தானாக அறிந்து எதையும் செய்யத் தெரியாது. எனவே இவையெல்லாம் அஃறிணை எனப்படும்.

• உங்களின் கவனத்திற்கு

மக்கள், தேவர் உயர்திணை.

இவர்கள் தவிர, மற்ற உயிர் உள்ளவை, உயிர் இல்லாதவை எல்லாம் அஃறிணை.

• பால்

சொல் என்பது பால் (Gender) என்பதையும் தரும்.



இவன் ஆண்



இவள் பெண்



இவர்கள் பலர்

இது ஒன்று







நாய்

மயில்

மரம்

இவை பல







நாய்கள்

மயில்கள்

மரங்கள்

எனவே



ஆண்



பெண்



பலர்



ஒன்று



பல

என ஐந்து பால்கள் தமிழில் உள்ளன.

அவை,

(1) ஆண் பால் - இவை மூன்றும் உயர்திணை
(2) பெண் பால்
(3) பலர் பால்

(4) ஒன்றன் பால் - இவை இரண்டும் அஃறிணை
(5) பலவின் பால்

• எண்



ஒன்று



பல

எண் என்பது எண்ணிக்கையைக் குறிப்பதாகும்.

| ஒன்று | பல |
|---|---|
| பெண் | பெண்கள் |
| மரம் | மரங்கள் |

ஒருவர் அல்லது ஒன்று மட்டும் இருந்தால் ஒருமை (Singular) என்போம்.

பலர் அல்லது பல இருந்தால் பன்மை (Plural) என்போம். எனவே எண் இருவகைப்படும். அவை,

(1) ஒருமை

(2) பன்மை

• இடம்

திணை, பால், எண் இவற்றோடு இடம் என்பதையும் ஒரு சொல் தரவேண்டும். இந்த இடம் மூன்று நிலைகளில் வரலாம்.

நான் - என்றால் தன்னைத் தானே குறிப்பது.

என், நான், நாங்கள் போன்ற சொற்கள் தன்னைப் பற்றி / தம்மைப் பற்றிக் குறிப்பதால் தன்மை/தன்னிலை இடம் (I person) எனப்படுகின்றன.

நீ - என்றால் முன்னால் இருப்பவரைக் குறிப்பது.

நீ, உன், உனது, நீங்கள் ஆகிய சொற்கள் முன் நிற்பவரைப் பற்றிக் குறிப்பன. இவை முன்னிலை (II person) எனப்படுகின்றன.

இவன் - என்றால் தன்னையும் குறிக்காது.

முன் நிற்பவர்களையும் குறிக்காது. எங்கோ இருப்பவரைக் குறிப்பது. படர்க்கை (III person) இடம் எனப்படும். அவன், இவன், இவர்கள், அவர்கள், இவை, இவைகள். எல்லாம் படர்க்கை இடத்தில் அமைவன.

| இடம் | ஒருமை | பன்மை |
|---|---|---|
| தன்மை **(I person)** | நான் | நாங்கள் |
| முன்னிலை **(II person)** | நீ | நீங்கள் |
| படர்க்கை **(III person)** | இவன்<br>அவன்<br>இது | இவர்கள்<br>அவர்கள்<br>இவை<br>இவைகள். |

இந்த அட்டவணை உங்களுக்கு இடங்களையும் எண்களையும் தெளிவுபடுத்தும்.

• காலம் **(Tense)**

இளங்கோ பிறந்தான் என்பது இளங்கோ குழந்தையாகப் பிறந்ததை உணர்த்தும் தொடர். இது செயல் முடிந்ததைக் கூறும் தொடர் (Past tense). எனவே இது **இறந்தகாலம்** எனப்படும்.

இளங்கோ வளர்கிறான் என்பது இளங்கோ வளர்ந்து வருகின்றதை உணர்த்தும் தொடர். இது செயல் நடந்து கொண்டிருப்பதைக் கூறுவதால் **நிகழ்காலம்** எனப்படுகிறது.

இளங்கோ ஆசிரியராக ஆவான் என்பது இளங்கோ ஆசிரியராக ஆகப் போவதை உணர்த்தும் தொடர். இது செயல் நடக்கப் போவதைக் கூறும் தொடர். இது **எதிர்காலம்** ஆகும்.

**உங்கள் கவனத்திற்கு**

- செயல் முடிவு பெற்றதைக் கூறுவது இறந்தகாலம்.
- செயல் நடைபெறுவதைக் குறிப்பிடுவது நிகழ்காலம்.
- செயல் நடைபெறப் போவதைக் கூறும் காலம் எதிர்காலம்.

• சொல்லின் உறுப்புகள்

சொல் எழுத்துகள் கொண்டது; பொருள் தருவது, திணை, பால், எண், இடம், காலம் உணர்த்துவது என்பது இதுவரை நாம் படித்த செய்தி.

சொல் எழுத்துகள் கூடி அமைந்தாலும் அது பல உறுப்புகளைத் தன்னுள்கொண்டுள்ளது.

காய்கள்

இந்தச் சொல்லில் **'கள்'** என்பது பன்மையைக் குறிப்பது. அது காய் என்பதோடு சேர்ந்து உள்ளது. இதனை ஓர் உறுப்பு எனலாம். அது விகுதி எனப்படுகிறது.

இது போல ஒரு சொல்லைப் பிரிக்க முடிந்தால் அது **பகுபதம்,** பகுக்க முடியும் பதம் எனப்படும். பதம் என்றாலும் சொல் என்றுதான் பொருள்.

விகுதி போலவே பகுதி, இடைநிலை, சாரியை, சந்தி போன்ற பல உறுப்புகள் உள்ளன. இவை பற்றி நீங்கள் அடுத்த அடுத்த வகுப்புகளில் படிப்பீர்கள்.

சொல்

பயிற்சி - 1

**Exercise 1**

I. கீழ்க்காணும் தொடர்களைப் படிக்கவும். அவற்றைச் சரியா? தவறா? என அறிந்து கூறவும். விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Read the following and say whether they are right or wrong. For answers, press the answer button.

1 'இளங்கோ' - உயர்திணை, ஆண்பால், ஒருமைச் சொல்.

(விடை : சரி)

2 'செல்வி' - உயர்திணை, பெண்பால், ஒருமைச் சொல்.

(விடை : சரி)

3 'மக்கள்' - உயர்திணை, பலர்பால், பன்மைச் சொல்.

(விடை : சரி)

4 'மரம்' - அஃறிணை, ஒன்றன் பால், ஒருமைச் சொல்.

(விடை : சரி)

5 'மரங்கள்' - அஃறிணை, பலவின்பால், பன்மைச் சொல்

(விடை : சரி)

6 'தேவர்' - அஃறிணை, பலவின்பால், பன்மைச் சொல்

(விடை : தவறு)

7 இளங்கோ வளர்கிறான். இது நிகழ்காலம்.

(விடை : சரி)

8 செயல் நடைபெறப் போவதைக் கூறும் காலம் எதிர்காலம்.

(விடை : சரி)

9 நீ, உன், உனது, நீங்கள் - முன்னிலைச் சொற்கள்.

(விடை : சரி)

10 பெண்கள் என்ற சொல் ஒருமையைக் குறிக்கிறது.

(விடை : தவறு.)



**பயிற்சி - 2**

**Exercise 2**

II. கீழ்க்காணும் கோடிட்ட இடங்களை நிரப்பச் சரியான சொற்களைக் கூறவும். விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Find the right words to fill in the blanks: For answers, press the answer button.

1 மக்கள், தேவர் -------------- திணை.

(விடை : உயர்)

2 மரம், மரங்கள் -------------.

(விடை : அஃறிணை.)

3 இளங்கோ -------- பால்.

(விடை : ஆண்)

4 செல்வி -------- பால்.

(விடை : **பெண்**)

5 மரங்கள் ---------- பால்.

(விடை : **பலவின்**)

6 வளர்கிறாள் - இச்சொல் சுட்டுவது ...................... காலம்.

(விடை : **நிகழ்**)

7 செயல் நடைபெறப் போவதைக் கூறும் காலம் .....................

(விடை : **எதிர்காலம்**)

8 தன்மை, முன்னிலை ................................ என இடம் மூன்று வகைப் படும்.

(விடை : **படர்க்கை**)

9 பால் .................................... வகைப்படும்.

(விடை : **ஐந்து**)

10 ஆண்கள் என்பது ....................... திணை ஆகும்.

(விடை : **உயர்**)

சொல்

பயிற்சி - **3**

**Exercise 3**

III. கீழ்க்காணும் வினாக்களுக்குச் சரியான விடையைத் தேர்ந்தெடுத்து எழுதவும். விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Choose the right answer for the following questions. For answers, press the answer button.

1 பழம் என்பது ஒரு பொருளைக் குறிப்பதால் அதனை என்ன என்று சொல்லலாம்?

அ) திணை

ஆ) சொல்

இ) பால்

ஈ) எண்

(விடை : **ஆ) சொல்**)

2 ஒருமை, பன்மை என்பன எதன் வகைகள்?

அ) திணை

ஆ) சொல்

இ) பால்

ஈ) எண்

(விடை : **ஈ) எண்**)

3 உயர்திணை, அஃறிணை என்பன எதன் வகைகள்?

அ) திணை

ஆ) சொல்

இ) பால்

ஈ) எண்

(விடை : **அ) திணை**)

4 ஆண்பால், பெண்பால், பலர்பால் ஆகியன எதில் அடங்கும்?

அ) உயர்திணையில்

ஆ) அஃறிணையில்

இ) எண்ணில்

ஈ) இடத்தில்

(விடை : **அ) உயர்திணையில்**)

5 பலவின் பால், ஒன்றன்பால் ஆகியன எதில் அடங்கும்.

அ) உயர்திணையில்

ஆ) அஃறிணையில்

இ) எண்ணில்

ஈ) இடத்தில்

(விடை : **ஆ) அஃறிணையில்**)

6 தன்மை, முன்னிலை, படர்க்கை ஆகியன எதன் வகைகள்?

அ) திணை

ஆ) எண்

இ) இடம்

ஈ) பால்

(விடை : **இ) இடம்**)

7 நீ என்பதன் பன்மைச் சொல் எது?

அ) அவர்கள்

ஆ) இவர்கள்

இ) நீவிர்

ஈ) நீங்கள்

(விடை : **ஈ) நீங்கள்**)

8 'நான்' எவ்விடத்தைக் குறிக்கும்?

அ) முன்னிலை

ஆ) தன்மை

இ) படர்க்கை

ஈ) பொதுவிடம்

(விடை : **ஆ) தன்மை**)

9 சொல் என்பது எதனைக் கொண்டது?

அ) பொருள்

ஆ) எழுத்துகள்

இ) திணை

ஈ) காலம்

(விடை : **ஆ) எழுத்துகள்**)

10 பதம் என்பதன் பொருள் என்ன?

அ) பக்குவம்

ஆ) சொல்

இ) தொடர்

ஈ) வரி

(விடை : **ஆ)** சொல்)

IV கீழ்க்காணும் வினாக்களுக்கு ஒருவரியில் விடை தரவும். விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Answer the following questions in a line each: For answers, press the answer button.

1 மூன்று காலங்கள் எவை?

(விடை : இறந்த காலம், நிகழ்காலம், எதிர்காலம் ஆகியவை மூன்று காலங்களாகும்.)

2 எதிர்காலம் என்பது என்ன?

(விடை : ஒரு செயல் நடக்கப் போவதை உணர்த்துவது எதிர்காலம் எனப்படும்.)

3 நிகழ்காலம் என்பது என்ன?

(விடை : ஒரு செயல் நடந்து கொண்டிருப்பதை உணர்த்துவது நிகழ்காலம் எனப்படும்.)

4 இறந்தகாலம் என்பது என்ன?

(விடை : ஒரு செயல் நடந்து முடிந்ததை உணர்த்துவது இறந்தகாலம் எனப்படும்.)

5 தன்மை இடம் என்பது என்ன?

(விடை : தன்னைப் பற்றியோ அல்லது தம்மைப் பற்றியோ குறிப்பது தன்மை இடம் எனப்படும்.)

6 படர்க்கை இடம் என்பது என்ன?

(விடை : தன்னைப் பற்றியும் பிறரைப் பற்றியும் குறிக்காமல் எங்கோ இருப்பவரைக் குறிப்பது படர்க்கை இடம் எனப்படும்.)

7 முன்னிலை இடம் என்பது என்ன?

(விடை : முன்னால் இருப்பவரைக் குறிப்பது முன்னிலை இடம் எனப்படும்.)

8 காலம் எத்தனை வகைபெறும்?

(விடை : காலம் மூன்று வகைபெறும்.)

9 பால் எத்தனை வகைபெறும்?

(விடை : **பால் ஐந்து வகைபெறும்.**)

10 திணை எத்தனை வகைபெறும்?

(விடை : **உயர்திணை, அஃறிணை எனத் திணை இருவகைபெறும்.**)

# 15. பெயர்ச்சொல், வேற்றுமை, ஆகுபெயர்

பெயர்ச்சொல், வேற்றுமை, ஆகுபெயர்

பொது அறிமுகம்

**General Introduction**

அன்புள்ள மாணவர்களே!

இப்பாடத்தில் பெயர்ச்சொல், இதன் தொடர்பான வேற்றுமை , ஆகுபெயர் குறித்த இலக்கணங்களை அறியப் போகிறோம்.

பெயர்ச்சொல்

பாட அறிமுகம்

**Introduction to Lesson**

தமிழ்மொழிச் சொல் என்பது நான்கு வகைப்படும். அவை,

(1) பெயர்ச்சொல் (Noun)
(2) வினைச்சொல் (Verb)
(3) இடைச்சொல்
(4) உரிச்சொல்

என்பனவாகும்.

இப்பாடத்தில் பெயர்ச்சொல் (Noun) பற்றி அறியப் போகிறோம்.

• பெயர்கள்



மரம்



நாய்



கல்



மண்

படங்களைப் பார்த்தீர்களா?

படங்கள் ஒவ்வொன்றின் கீழும் பெயர்கள் தரப்பட்டுள்ளன.

(1) மரம்

(2) நாய்

(3) கல்

(4) மயில்

இந்தச் சொற்கள் எல்லாம் ஒரு பொருளின் பெயரைத் தருகின்றன. எனவே ஏதாவது ஒன்றின் பெயராக அமையும் சொல் பெயர்ச்சொல் எனப்படுகிறது.

• பெயர் வைக்கப்படும் முறைகள்

ஒரு பொருளுக்கு எப்படி அந்தப் பெயர் ஏற்பட்டது என்று சிந்திப்போமா மாணவர்களே!



மொட்டு



பூ

மொட்டு பூவாகப் பூக்கின்றது.

எனவே பூத்த ஒன்றுக்குப் பூ என்று பெயர் ஏற்பட்டிருக்கிறது.



**பறவை**

பறக்கின்ற ஒன்றுக்குப் **பறவை** எனப் பெயர் வைத்திருக்கிறார்கள்.

இவ்வாறு ஒரு காரணம் கருதிப் பெயர் வைக்கும் முறை தமிழ் மொழியில் உண்டு. இவ்வாறு வைக்கப்படும் பெயர்கள் **காரணப் பெயர்கள்** எனப்படுகின்றன.



**மரம்**



**மண்**

மரம், மண் இது போன்ற பல சொற்கள் காரணம் இல்லாமல் வைக்கப் பட்டுள்ளன. இவ்வாறு காரணம் இல்லாமல் தமிழ்மொழியில் பெயர்கள் உள்ளன.அவை **இடுகுறிப் பெயர்கள்** எனப்படுகின்றன.

ஒரு பொருளுக்கு எப்படிப் பெயர் ஏற்பட்டது என்பதை நாம் அறிந்து கொண்டோம்.

நமக்கு ஒரு பெயர் உண்டு அல்லவா? அது காரணப் பெயரா? இடுகுறிப் பெயரா? சிறிது சிந்தித்துப் பாருங்கள்.

**• பெயர்ச்சொல்லின் வகைகள்**

பெயர்ச்சொற்கள் ஆறு வகைப்படும். அவை,

1. பொருளின் பெயர் - பொருட்பெயர்
2. இடத்தின் பெயர் - இடப்பெயர்
3. காலத்தின் பெயர் - காலப் பெயர்
4. ஒரு முழுப்பொருளினது சிறுபகுதியின் பெயர் - சினைப்பெயர்
5. பண்பின் பெயர் - பண்புப்பெயர்
6. தொழிலின் பெயர் - தொழிற்பெயர்

| | | |
|---|---|---|
| கோவில் | பள்ளி | - இடப்பெயர் |
| கோடை (காலம்) | மே 2007<br>நாட்காட்டி | - காலப்பெயர் |

| | | |
|---|---|---|
| இலை | - சினைப்பெயர் | |
| வடிவம் | பசுமை வண்ணம் | - பண்புப்பெயர் |
| படித்தல் | எழுதுதல் | - தொழிற்பெயர் |

இவ்வாறு ஆறுவகைப் பட்ட பெயர்ச்சொற்கள் தமிழில் உள்ளன.

பயிற்சி - 1

**Exercise 1**

I. கீழ்க்காணும் தொடர்களைப் படிக்கவும். அவற்றைச் சரியா? தவறா? என அறிந்து கூறவும். விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Read the following and say whether they are right or wrong. For answers, press the answer button.

1 மரம் என்பது காரணப் பெயர்.

(விடை : தவறு)

2 பறவை என்பது இடுகுறிப்பெயர்.

(விடை : தவறு)

3 படித்தல் என்பது சினைப் பெயர்.

(விடை : தவறு)

4 ஓடுதல் என்பது தொழிற்பெயர்.

(விடை : சரி )

5 காரணம் இல்லாமல் வைக்கப்படுவது இடுகுறிப்பெயர்.

(விடை : சரி)

பெயர்ச்சொல்

பயிற்சி - 2

**Exercise 2**

II. கீழ்க்காணும் கோடிட்ட இடங்களை நிரப்பச் சரியான சொற்களைக் கூறவும். விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Find the right words to fill in the blanks: For answers, press the answer button.

1 வட்டம், பச்சை வண்ணம் முதலியன ------------- பெயர்.

(விடை : **பண்புப்**)

2 இலை, பழம், காய் முதலியன --------- பெயர்.

(விடை : **சினைப்**)

3 மரம், கல் முதலியன -------- பெயர்.

(விடை : **பொருட்**)

4 கோயில், பள்ளிக்கூடம் முதலியன --------- பெயர்.

(விடை : **இடப்**)

5 கோடை, நாட்காட்டி .................... பெயர்.

(விடை : **காலப்**)

பெயர்ச்சொல்

பயிற்சி - **3**

**Exercise 3**

III. கீழ்க்காணும் வினாக்களுக்குச் சரியான விடையைத் தேர்ந்தெடுத்து எழுதவும். விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Choose the right answer for the following questions. For answers, press the answer button.

1 ஆண்டு என்பது என்ன பெயர்?

அ) காலப் பெயர்

ஆ) இடப்பெயர்

இ) பொருட்பெயர்

ஈ) சினைப் பெயர்

(விடை : **அ) காலப்பெயர்**)

2 பூ என்பது என்ன பெயர்?

அ) காலப் பெயர்

ஆ) இடப்பெயர்

இ) பொருட்பெயர்

ஈ) சினைப் பெயர்

(விடை : **ஈ) சினைப்பெயர்**)

3 படித்தல் என்பது என்ன பெயர்?

அ) காலப் பெயர்

ஆ) தொழிற்பெயர்

இ) பொருட்பெயர்

ஈ) சினைப் பெயர்

(விடை : **ஆ) தொழிற்பெயர்**)

4 மரம் என்ன பெயர்?

அ) காலப் பெயர்

ஆ) இடப்பெயர்

இ) பொருட்பெயர்

ஈ) சினைப் பெயர்

**(விடை : இ) பொருட்பெயர்)**

5 ஓடுதல் என்பது என்ன பெயர்?

அ) பண்புப்பெயர்

ஆ) சினைப்பெயர்

இ) தொழிற்பெயர்

ஈ) ஆகுபெயர்

**(விடை : இ) தொழிற்பெயர்)**



## பயிற்சி - 4
## Exercise 4

IV கீழ்க்காணும் வினாக்களுக்கு ஒருவரியில் விடை தரவும். விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Answer the following questions in a line each: For answers, press the answer button.

1 பெயர்ச் சொல் என்றால் என்ன?

**(விடை : பெயர்களைக் குறிக்கும் சொல் பெயர்ச்சொல் எனப்படும்.)**

2 இடுகுறிப் பெயருக்குச் சில எடுத்துக்காட்டுகள் தருக.

**(விடை : மண், மரம், கல் போன்றவை இடுகுறிப் பெயருக்கு எடுத்துக்காட்டுகளாகும்.)**

3 காரணப் பெயர் என்பது என்ன?

**(விடை : ஒரு காரணம் கருதி வைக்கப்படும் பெயர்கள் காரணப் பெயர்கள் எனப்படும்.)**

4 பெயர்ச்சொல்லின் வகைகள் யாவை?

(விடை : பெயர்ச்சொல் ஆறு வகைப்படும். அவை,
(1) பொருட்பெயர்
(2) இடப்பெயர்
(3) சினைப் பெயர்
(4) பண்புப் பெயர்
(5) தொழிற்பெயர்
(6) காலப் பெயர் )

5 சினைப்பெயர் என்றால் என்ன?

(விடை : ஒரு முழுப் பொருளினது சிறுபகுதியின் பெயர் சினைப் பெயர் எனப்படும்.)

## பெயர்ச்சொல் 2 - வேற்றுமை

பாட அறிமுகம்

**Introduction to Lesson**

இப்பகுதி' 'வேற்றுமை' என்பதை அறிமுகம் செய்கிறது. தமிழில் வேற்றுமைகள் மொத்தம் எட்டு. வேற்றுமைகள் மற்ற எல்லா மொழிகளிலும் இதைவிடக் குறைவாகவே உள்ளன. வேற்றுமைகளின் அளவுகள் அதிகமாக இருப்பது தமிழ் மொழிக்கு ஒரு பெருமையே!

ஏதேனும் ஒன்றின் பெயராக அமைவது பெயர்ச்சொல். அந்தப் பெயர்ச்சொல் வேற்றுமை என்பதை ஏற்கும். அவ்வாறு ஏற்கும்பொழுது பெயர்ச்சொல்லின் பொருளை வேறுபடுத்திக் காட்டுவது வேற்றுமை எனப்பெறும்.

## பெயர்ச்சொல் 2 - வேற்றுமை

பாடம்

**Lesson**

பெயர்ச்சொல்லுடன் சேர்ந்து அச்சொல்லின் பொருளை வேறுபடுத்திக் காட்டுவது இலக்கணத்தில் வேற்றுமை எனப்பெறுகிறது என்பதை முன்பே பார்த்தோம் அல்லவா?

இவ்வேற்றுமைகள் தமிழில் எட்டு வகைபெறும். அவை, முதல் வேற்றுமை (எழுவாய் அல்லது பெயர் வேற்றுமை), இரண்டாம் வேற்றுமை, மூன்றாம் வேற்றுமை, நான்காம் வேற்றுமை, ஐந்தாம் வேற்றுமை, ஆறாம் வேற்றுமை, ஏழாம்

**வேற்றுமை**, **எட்டாம் வேற்றுமை** (விளி வேற்றுமை : விளி=அழைத்தல்) என்பனவாகும்.

இங்கே பெயர்ச்சொல்லின் பொருளை வேறுபடுத்திக் காட்டுவதற்குப் பெயர்ச்சொல்லின் இறுதியில் வரும் உருபுகள் (எழுத்துகள்) **வேற்றுமை உருபுகள்** எனப்பெறும்.

முதல் வேற்றுமைக்கும், எட்டாம் வேற்றுமைக்கும் வேற்றுமை உருபுகள் இல்லை. இரண்டாம் வேற்றுமைக்கு உருபு **ஐ**. மூன்றாம் வேற்றுமைக்கு உருபு **ஆல்**. நான்காம் வேற்றுமைக்கு உருபு **கு**. ஐந்தாம் வேற்றுமைக்கு உருபு **இன்**. ஆறாம் வேற்றுமைக்கு உருபு **அது**. ஏழாம் வேற்றுமைக்கு உருபு **கண்**.

இவை குறித்து விளக்கமாக, மேல்நிலைப் பாடங்களில் பயில்வீர்கள்.

**பெயர்ச்சொல் 2 - வேற்றுமை**

**பயிற்சி - 1**
**Exercise 1**

I. கீழ்க்காணும் தொடர்களைப் படிக்கவும். அவற்றைச் சரியா? தவறா? என அறிந்து கூறவும். விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.
Read the following and say whether they are right or wrong. For answers, press the answer button.

1 பெயர்ப் பொருளை வேறுபடுத்துவது வேற்றுமை.
(விடை : சரி)

2 வேற்றுமை மொத்தம் எட்டு.
(விடை : சரி)

3 வினைச்சொல்லுக்கும் வேற்றுமை உண்டு.
(விடை : தவறு)

4 வேற்றுமை பெயர்ச்சொல்லோடு மட்டுமே வரும்.
(விடை : சரி)

5 எட்டாம் வேற்றுமைக்கு விளி வேற்றுமை என்ற பெயரும் உண்டு.
(விடை : சரி)

II. கீழ்க்காணும் கோடிட்ட இடங்களை நிரப்பச் சரியான சொற்களைக் கூறவும். விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Find the right words to fill in the blanks: For answers, press the answer button.

1 பெயர்ச்சொல்லின் பொருளை வேறுபடுத்திக் காட்டுவது ---------- எனப் பெறுகிறது.

(விடை : **வேற்றுமை**)

2 வேற்றுமை மொத்தம் ------------ வகைபெறும்.

(விடை : **எட்டு**)

3 முதல் வேற்றுமைக்கு ------------ இல்லை.

(விடை : **உருபு**)

4 ஆறாம் வேற்றுமை உருபு ------------

(விடை : **அது**)

5 இரண்டாம் வேற்றுமை உருபு -----------

(விடை : **ஐ**)



III. கீழ்க்காணும் வினாக்களுக்குச் சரியான விடையைத் தேர்ந்தெடுத்து எழுதவும். விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Choose the right answer for the following questions. For answers, press the answer button.

1 இரண்டாம் வேற்றுமை உருபு எது?

அ) ஐ

ஆ) ஆல்

இ) கு

ஈ) இல்

(விடை : **அ) ஐ**)

2 மூன்றாம் வேற்றுமை உருபு எது

அ) ஐ

ஆ) ஆல்

இ) கு

ஈ) இல்

(விடை : **ஆ) ஆல்**)

3 நான்காம் வேற்றுமை உருபு எது?

அ) ஐ

ஆ) ஆல்

இ) கு

ஈ) இல்

(விடை : **இ) கு**)

4 ஐந்தாம் வேற்றுமை உருபு எது?

அ) ஐ

ஆ) ஆல்

இ) கு

ஈ) இல்

(விடை : **ஈ) இல்**)

5 ஆறாம் வேற்றுமை உருபு எது?

அ) அது

ஆ) இடம்

இ) ஐ

ஈ) கு

(விடை : **அ) அது**)

IV கீழ்க்காணும் வினாக்களுக்கு ஒருவரியில் விடை தரவும். விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Answer the following questions in a line each: For answers, press the answer button.

1 வேற்றுமை என்பது என்ன?

(விடை : **வேற்றுமை என்றால் பெயரைப் பொருள் வேறுபடுத்திக் காட்டுவதாகும்.**)

2 வேற்றுமை மொத்தம் எத்தனை?

(விடை : **வேற்றுமை மொத்தம் எட்டு ஆகும்.**)

3 தமிழில் வரும் வேற்றுமைகளின் பெயர்களைத் தருக.

(விடை : **தமிழில் வரும் வேற்றுமைகளின் பெயர்கள்**

**(1) முதல் வேற்றுமை**

**(2) இரண்டாம் வேற்றுமை**

**(3) மூன்றாம் வேற்றுமை**

**(4) நான்காம் வேற்றுமை**

**(5) ஐந்தாம் வேற்றுமை**

**(6) ஆறாம் வேற்றுமை**

**(7) ஏழாம் வேற்றுமை**

**(8) எட்டாம் வேற்றுமை**)

4 ஆறாம் வேற்றுமை உருபு எது?

(விடை : **ஆறாம் வேற்றுமை 'அது' ஆகும்.**)

5 மூன்றாம் வேற்றுமை உருபு எது?

(விடை : **மூன்றாம் வேற்றுமை உருபு 'ஆல்' ஆகும்.**)

## பாட அறிமுகம்

## Introduction to Lesson

இது பெயர்ச் சொல்லில் மற்றொரு முக்கியமான பகுதி ஆகும். ஒன்றுக்கு வைக்கப் பெற்ற பெயர் வேறு ஒன்றுக்கு ஆகிவருவதை ஆகுபெயர் என்று கூறுவர். அது பற்றி இப்பகுதி விளக்குகிறது.

ஆகுபெயர்

## பாடம்

## Lesson



தேர்த் திருவிழா

'கோயிலில் தேர்த் திருவிழா நடைபெற்றது. ஊரே தேர்த் திருவிழா பார்க்க வந்தது' என்ற தொடரில்

'ஊரே வந்தது' என்பதைக் கவனிக்க.

ஊர் வரவில்லை. ஊரில் உள்ள மக்கள்தாம் திருவிழாவிற்கு வந்தனர். ஊர் என்ற இடப்பெயர் ஊரில் உள்ள மக்களைக் குறிப்பதாக ஆகிவந்தது. எனவே இது ஆகுபெயர் ஆகும். இவ்வாறு ஒன்றன் பெயர் மற்றொன்றனுக்கு ஆகிவருவது **ஆகுபெயர்** எனப்படும்.

ஊர் என்ற இடம் ஊரில் உள்ள மக்களுக்கு ஆகி வந்ததால் இடம் + ஆகுபெயர் = இடவாகுபெயர் எனப்படும்.

ஆகுபெயர் பல வகைப்படும். அவற்றில் பின்வரும் ஆறும் முக்கியமானவை. அவை,

(1) பொருளாகு பெயர்

(2) இடவாகு பெயர்

(3) காலவாகு பெயர்

(4) சினையாகு பெயர்

(5) பண்பாகு பெயர்

(6) தொழிலாகு பெயர்

என்பனவாகும்.

• பொருள் ஆகுபெயர்



வாழை மரம்



வாழைப் பழங்கள்

வாழை இனிப்பானது.

'வாழை' என்பது வாழைமரம் முழுவதையும் குறிப்பது. ஆனால் இங்கு இனிப்பானது எனச் சொல்வதன் மூலம் வாழைப் பழம் என்பது தெரிய வருகிறது. எனவே வாழை என்ற முழு மரத்தையும் குறிக்கும் சொல் வாழைப் பழத்திற்கு மட்டும் ஆகி வருவதால் இது பொருள் ஆகுபெயர் ஆகும்.

• இட ஆகுபெயர்



பட்டுச்சேலை

சேலைகளில் காஞ்சிபுரம் மிக அழகு.

இங்குக் காஞ்சிபுரம் என்பது காஞ்சிபுரம் என்ற இடத்தில் தயாராகும் பட்டுச் சேலைகளைக் குறிக்கிறது. இடத்தின் பெயர் பொருளுக்கு (சேலைக்கு) ஆகிவருவதால் இது இடவாகு பெயர் ஆகும்.

• கால ஆகுபெயர்

டிசம்பர் 2006

| Sunday | Monday | Tuesday | Wednesday | Thursday | Friday | Saturday |
|---|---|---|---|---|---|---|
| | | | | | 1 | 2 |
| 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 |
| 10 | 11 | 12 | 13 | 14 | 15 | 16 |
| 17 | 18 | 19 | 20 | 21 | Winter 22 Begins | 23 |
| 24 / 31 | Christmas 25 | 26 | 27 | 28 | 29 | 30 |



டிசம்பர் பூத்தது

பூக்களில் டிசம்பர் ஒரு குறிப்பிட்ட மாதத்தில் பூக்கும்.

இங்கு டிசம்பர் என்ற ஆங்கில மாதத்தின் பெயர் அம்மாதத்தில் பூக்கும் பூவிற்கு ஆகி வந்ததால் இது காலவாகு பெயர் ஆகும்.

• சினை ஆகுபெயர்

தலைக்கு ஒரு மாம்பழம் கொடு.

இதில் 'தலை' என்பது மனிதன் என்பதைக் குறிக்கிறது. தலை என்பது ஒரு (சினைப் பெயர்) உறுப்பின் பெயர். அது முழு உருவத்திற்கும் ஆகி வருவதால் (சினையே ஒரு முழுப் பொருளுக்கு ஆகிவருவதால்) இது சினை ஆகுபெயர் எனப்படுகிறது.

• பண்பாகு பெயர்

வீட்டிற்கு வெள்ளை அடித்தான்.

இங்கு வெள்ளை என்பது ஒரு பொருள் அன்று, ஒரு பண்பு. வீட்டிற்குச் சுண்ணாம்பு அடித்தான் என வர வேண்டும். அதற்குப் பதிலாகச் சுண்ணாம்பின் பண்பான வெள்ளை நிறம் சுண்ணாம்பு என்பதற்குப் பதிலாக ஆகிவருவதால் இது பண்பாகு பெயர் எனப்படுகிறது.

• தொழில் ஆகுபெயர்

வற்றல் நன்றாக இருக்கும். வற்றல் என்பது ஒரு தொழில். அதாவது காயில் உள்ள நீரெல்லாம் வற்றச் செய்ததால் அது வற்றல் என்ற பெயர் பெற்றது. வற்றல் என்னும் தொழில் அந்தப் பொருளைக் குறிப்பதால் இது தொழில் ஆகுபெயர் ஆனது.

பெயர்ச்சொல் - ஆகுபெயர்

பயிற்சி - 1

**Exercise 1**

I. கீழ்க்காணும் தொடர்களைப் படிக்கவும். அவற்றைச் சரியா? தவறா? என அறிந்து கூறவும். விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Read the following and say whether they are right or wrong. For answers, press the answer button.

1 ஒன்றின் பெயர் மற்றொன்றிற்கு ஆகி வருவது ஆகுபெயர்.

(விடை : சரி)

2 ஆகுபெயர் பல வகைப்படும்.

(விடை : சரி)

3 சேலைகளில் காஞ்சிபுரம் மிக அழகு என்பது சினையாகு பெயர்.

(விடை : தவறு)

4 வாழை இனிப்பானது என்பது பொருளாகு பெயர்

(விடை : சரி)

5 பண்பாகு பெயர் என்பது ஆகுபெயர் வகைகளுள் ஒன்று.

(விடை : சரி)

பெயர்ச்சொல் - ஆகுபெயர்

பயிற்சி - 2

**Exercise 2**

II. கீழ்க்காணும் கோடிட்ட இடங்களை நிரப்பச் சரியான சொற்களைக் கூறவும். விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Find the right words to fill in the blanks: For answers, press the answer button.

1 வற்றல் நன்றாக இருக்கிறது என்பதில் வற்றல் என்பது ............. ஆகும்.

(விடை : தொழிலாகு பெயர்)

2 வீட்டிற்கு வெள்ளை அடித்தான் என்பதில் வெள்ளை என்பது ............. ஆகும்.

(விடை : பண்பாகு பெயர்)

3 தலைக்கு ஒரு மாம்பழம் கொடு என்பதில் தலை என்பது ................ ஆகும்.

(விடை : சினையாகு பெயர்)

4 வாழை இனிப்பானது என்பதில் வாழை என்பது ......................... ஆகும்.

(விடை : பொருளாகு பெயர்.)

5 'ஊரே வந்தது' என்பதில் ஊரே என்பது ............... ஆகும்.

(விடை : இடவாகு பெயர்.)

பெயர்ச்சொல் - ஆகுபெயர்

பயிற்சி - 3

**Exercise 3**

III. கீழ்க்காணும் வினாக்களுக்குச் சரியான விடையைத் தேர்ந்தெடுத்து எழுதவும். விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Choose the right answer for the following questions. For answers, press the answer button.

1 'ஊரே வந்தது' - என்ன ஆகுபெயர்?

அ) இடவாகு பெயர்

ஆ) காலவாகு பெயர்

இ) பொருளாகு பெயர்

ஈ) சினையாகு பெயர்

(விடை : **அ) இடவாகு பெயர்**)

2 'டிசம்பர் பூத்தது' - என்ன ஆகுபெயர்?

அ) இடவாகு பெயர்

ஆ) காலவாகு பெயர்

இ) பொருளாகு பெயர்

ஈ) சினையாகு பெயர்

(விடை : **ஆ) காலவாகு பெயர்**)

3 'வீட்டில் வெள்ளை அடித்தான்' - என்ன ஆகுபெயர்?

அ) இடவாகு பெயர்

ஆ) காலவாகு பெயர்

இ) பொருளாகு பெயர்

ஈ) பண்பாகு பெயர்

(விடை : **ஈ) பண்பாகு பெயர்**)

4 'தலைக்கு ஒரு மாம்பழம் கொடு' - என்ன ஆகுபெயர்?

அ) இடவாகு பெயர்

ஆ) காலவாகு பெயர்

இ) பொருளாகு பெயர்

ஈ) சினையாகு பெயர்

(விடை : **ஈ) சினையாகு பெயர்**)

5 'வற்றல் உண்டான்' - என்ன ஆகுபெயர்?

அ) இடவாகு பெயர்

ஆ) காலவாகு பெயர்

இ) பொருளாகு பெயர்

ஈ) தொழிலாகு பெயர்

(விடை : **ஈ) தொழிலாகு பெயர்**)

## பெயர்ச்சொல் - ஆகுபெயர்

**பயிற்சி - 4**

**Exercise 4**

IV கீழ்க்காணும் வினாக்களுக்கு ஒருவரியில் விடை தரவும். விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Answer the following questions in a line each: For answers, press the answer button.

1 ஆகுபெயர் என்றால் என்ன?

(விடை : **ஒன்றுக்கு வைக்கப் பெற்ற பெயர் வேறு ஒன்றுக்கு ஆகிவருவதை ஆகுபெயர் என்பர்.**)

2 'ஊரே வந்தது' - என்ன ஆகுபெயர்?

(விடை : **'ஊரே வந்தது' என்பது இடவாகு பெயர் ஆகும்.**)

3 'காஞ்சிபுரம் மிக அழகு' - என்ன ஆகுபெயர்?

(விடை : **'காஞ்சிபுரம் மிக அழகு' என்பது பொருளாகு பெயர் ஆகும்.**)

4 பண்பாகு பெயரை விளக்குக.

(விடை : **வீட்டிற்கு வெள்ளை அடித்தான் என்பதில் வெள்ளை என்பது சுண்ணாம்புக்கு ஆகி வருவதால் இது பண்பாகு பெயர்ஆகும்.**)

5 வற்றல் உண்டான் என்பதில் - 'வற்றல்' என்ன ஆகுபெயர்?

(விடை : வற்றல் உண்டான் என்பதில் -'வற்றல்' என்பது தொழிலாகு பெயர் ஆகும்.)

# 16. வினைச்சொல்

வினைச்சொல்

பொது அறிமுகம்

**General Introduction**

அன்புள்ள மாணவர்களே!

சொல்வகைகளுள் முதன்மையான ஒன்று வினைச்சொல். இந்தச் சொல் மூலமாகத்தான் ஒரு செயல் நடைபெறுவதை நாம் உணர முடியும். இந்த வினைச்சொல் குறித்த பல செய்திகளை இப்பாடம் தருகிறது.

வினைச்சொல்

பாட அறிமுகம்

**Introduction to Lesson**

வினை என்பதற்குச் செயல் என்று பொருள். ஒரு செயல் நடைபெறுவதைக் குறிப்பிடுவது வினைச் சொல் ஆகும்.

தமிழில் உள்ள வினைச் சொற்களின் வாயிலாக திணை, பால், எண், இடம், காலம் ஆகியவற்றை உணர முடியும்.

வினைச்சொல்

பாடம்

**Lesson**

'Elango Runs'

'இளங்கோ ஓடுகிறான்'

| | | |
|---|---|---|
| Elango | - | Name / Noun |
| இளங்கோ | - | பெயர்ச்சொல் |
| Runs | - | Action / Verb |
| ஓடுகிறான் | - | வினைச்சொல் |

'Runs' என்ற ஆங்கில வினைச்சொல் வழியாக அது 'III Person' Singular, present Tense என்பவை மட்டும் தெரியவரும்.

ஆனால் 'ஓடுகிறான்' என்ற தமிழ் வினைச் சொல்லின் மூலம்

ஓடுகிறான் - (1) உயர்திணை

(2) ஆண்பால்

(3) ஒருமை

(4) படர்க்கை

(5) நிகழ்காலம்

(1) ஓடுபவன் இளங்கோ (பையன்) எனவே அவன் உயர்திணை.

(2) அவன் ஆண் எனவே ஆண்பால்.

(3) அவன் ஒருவன் அதனால் அவன் ஒருமை

(4) அவன் ஓடுவதைப் பிறர் ஒருவர் கூறுகிறார். எனவே படர்க்கை இடம்.

(5) அவன் தற்போது ஓடுகிறான் என்பதால் நிகழ்காலம்.

இவ்வாறு ஐந்து செய்திகளைப் பெற முடியும். ஆங்கில மொழியைக் காட்டிலும் தமிழ்மொழி வினைச் சொற்கள் வாயிலாகப் பல கூடுதல் செய்திகளை இவ்வாறு பெற முடியும்.

இவை தவிர மேலும் சில செய்திகளையும் நாம் பெற இயலும்.

**ஓடுகிறான்:**

என்ற சொல் வழியாக

(1) ஓடுபவன் யார்? என்ற கேள்விக்குப் பதில் பெற இயலும். ஓடுபவன் 'அவன்'. அதாவது செயலைச் **செய்பவன்** யார் எனத் தெரியும்.

(2) அடுத்து ஓடுவதற்கு அவனுக்கு உதவியது எது? என்ற கேள்விக்குப் பதில் பெற இயலும். கால்கள் அவனுக்கு ஓடுவதற்கு உதவின. இதற்குக் கருவி எனப் பெயர்.

(3) எதன்மீது ஓடினான்? என்ற கேள்விக்கு அவன் மண்மீது ஓடினான் எனப் பதில் கூறமுடியும். இதற்கு **'இடம்'** அல்லது **'நிலம்'** (place) என்று பெயர்.

(4) அடுத்து நடைபெற்ற செயல் என்ன எனக் கேட்டால் ஓடுதல் என்ற பதில் கிடைக்கும். இதற்குச் **செயல்** (Action) என்று பெயர்.

(5) ஓடி அவன் பெற்ற பயன் என்ன? எனக் கேட்டால் 'அவன் விரைவாய்ச் செயலை முடித்தான்' என்று பதில் தரலாம். இதற்குச் செய்பொருள் என்று பெயர்.

இவ்வாறு பல செய்திகளை ஒரே வினைச்சொல் தந்து விடும்.

இப்போது வினைச்சொல் என்பதன் முக்கியத்துவம் உங்களுக்குத் தெரிந்து இருக்கும்.

**• வினைச்சொல்லின் பகுதிகள்**

வினைச் சொல்லில், திணை, எண், பால், இடம், காலம் காட்டும் பகுதி எது என்று சிந்திப்போம்.

**ஓடுகிறான்**

இதில், 'றான்' - என்பதை (ற்+ஆன்) ஆன் என எடுத்துக் கொள்வோம். 'ஆன்' என்பதுதான் பால், காலம் என்பனவற்றைக் காட்டுகிறது.

(1) உயர்திணை (திணை)
(2) ஆண்பால் (பால்)
(3) படர்க்கை (இடம்)
(4) ஒருமை (எண்)

ஓடுகிறான் என்பதில் 'ஆன்' என்ற இறுதிப் பகுதி இச்செய்திகளைக் காட்டும்.

'ஓடுகிறாள்' என்பதில் 'ஆள்' என்ற இறுதிப் பகுதி இச்செய்திகளைக் காட்டும்.

(1) உயர்திணை
(2) பெண்பால்
(3) படர்க்கை
(4) ஒருமை

என்பவற்றைத் தருகிறது. எனவே, வினைச்சொல்லின் இறுதிப் பகுதிதான் திணை, பால், இடம், எண் ஆகியவற்றைப் பெற வைக்கிறது.

| இடம் | எண் | முடிவு |
|---|---|---|
| தன்மை இடம் | ஒருமை - நான் | செய்தேன் - (ஏன்) |
| | பன்மை - நாங்கள் | செய்தோம் - (ஓம்) |
| முன்னிலை இடம் | ஒருமை – நீ | செய்தாய் - (ஆய்) |
| | பன்மை - நீவீர் | செய்தீர் - (ஈர்) |
| | | செய்தீர்கள் - (ஈர்கள்) |
| படர்க்கை | | |
| உயர்திணை | ஒருமை - அவன், இவன், உவன், அவள், இவள், உவள் | அவன் செய்தான் - (ஆன்) அவள் செய்தாள் - (ஆள்) |
| | பன்மை - அவர்கள், இவர்கள் | அவர்கள் செய்தார்கள் - (ஆர், கள்) |
| அஃறிணை | ஒருமை – அது | அது செய்தது - (து) |
| | பன்மை – அவை | அவை செய்தன - (ன) |

இந்த முடிவுகள் கொண்டே திணை, பால், எண், இடம், காலம் ஆகியன கண்டு பிடிக்கப்படுகின்றன.

• **வினைச்சொல்லில் காலம்**

காலம் மூன்று வகைப்படும் என முன்னர் பார்த்தோம். அவை இறந்த காலம், நிகழ்காலம், எதிர்காலம் என்பனவாகும்.

ஒரு வினைச்சொல் என்பதன் சிறந்த அடையாளம் அது காலம் காட்டுவதே ஆகும். வினைச்சொல்லின் நடுவில் வரும் சில எழுத்துகள் காலம் காட்டும். அவற்றைக் காலம் காட்டும் இடைநிலைகள் என்பர்.

| வினைச்சொல் | | |
| --- | --- | --- |
| ஓடினான் | - | இறந்தகாலம் |
| ஓடுகிறான் | - | நிகழ்காலம் |
| ஓடுவான் | - | எதிர்காலம் |

ஓடினான் - ஓடு + இன்+ஆன்

ஓடுகிறான் - ஓடு+கிறு+ஆன்

ஓடுவான் - ஓடு+வ்+ஆன்

இந்த எழுத்துகள்தான் காலத்தைக் காட்டுகின்றன. இதுபோன்ற சில எழுத்துகள் வெவ்வேறு காலங்களைக் காட்டுகின்றன அவை பின்வருமாறு:

| காலம் | இடைநிலை | எடுத்துக்காட்டு |
| --- | --- | --- |
| இறந்த காலம் | த் | பார்த்தான் |
| | ட் | கேட்டான் |
| | ற் | சென்றான் |
| | ன் | சொன்னான் |
| நிகழ்காலம் | கிறு | வாழ்கிறான் |
| | கின்று | வாழ்கின்றான் |
| | ஆநின்று | வாழா நின்றான் (வழக்கில் இல்லை) |
| எதிர்காலம் | ப் | கேட்பான் |
| | வ் | செல்வான் |

• **வினைச்சொல்லின் வகைகள்**

வினைச்சொல் இரண்டு வகைப்படும். அவை,

(1) முற்று
(2) எச்சம்

இந்த இரண்டு தொடர்களையும் கவனியுங்கள்.

இளங்கோ சாப்பிட்டான்' என்ற தொடரில் 'இளங்கோ' என்பது பெயர்ச்சொல். 'சாப்பிட்டான்' என்பது வினைச்சொல்.

இதில் சாப்பிடுதல் என்ற தொழில் முடிவு பெற்று விட்டது. எனவே இதனை **வினைமுற்று** என்பர்.

அடுத்த தொடர் **சாப்பிடும் இடம்**

என்பதில் இடம் - என்பது பெயர்ச்சொல். சாப்பிடும் என்பது செயல் முடிவு பெறாத வினைச்சொல்.

**சாப்பிடும்** என்பதை மட்டும் படித்தால், அதன் பிறகு என்ன ஆயிற்று? யார் சாப்பிட்டார்கள்? என்ன நடந்தது?' எனப் பல கேள்விகள் எழும்.

எனவே, **சாப்பிடும்** என்ற சொல் முடிவு பெறாத வினைச்சொல் ஆகும். இதனை **வினையெச்சம்** என்பர்.

இந்த எச்சமும் இருவகைப்படும். அவை,

(1) பெயரெச்சம்
(2) வினையெச்சம் என்பன.

• பெயரெச்சம்

செயல் முடிவு பெறாத வினைச்சொல், பெயர்ச் சொல்லைக் கொண்டு முடிந்தால் அது **பெயரெச்சம்** எனப்படும்.

எடுத்துக்காட்டு - சாப்பிடும் இடம்

**'சாப்பிடும்'** - என்ற முடிவு பெறாத வினைச்சொல். **இடம்** என்ற பெயரோடு முடிவதால் இது பெயரெச்சமாகும்.

• வினையெச்சம்

செயல் முடிவு பெறாத வினைச்சொல், மற்ற ஒரு செயல் முடிவு பெற்ற வினைச்சொல் கொண்டு முடிந்தால் அது **வினையெச்சம்** எனப்படும்.

எடுத்துக்காட்டு - சாப்பிட்டு முடித்தான்

இதில் சாப்பிட்டு என்ற சொல் முடிவு பெறாத வினைச்சொல்.

முடித்தான் என்பது செயல் முடிவு பெற்ற வினைச்சொல். சாப்பிட்டு என்ற எச்சம் முடித்தான் என்ற முற்றுடன் முடிந்துள்ளது. இது வினையெச்சம் எனப்படும்.

வினைச்சொல்

பயிற்சி - 1

**Exercise 1**

I. கீழ்க்காணும் தொடர்களைப் படிக்கவும். அவற்றைச் சரியா? தவறா? என அறிந்து கூறவும். விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Read the following and say whether they are right or wrong. For answers, press the answer button.

1 வினைச்சொல் காலம் காட்டும்.

(விடை : சரி)

2 ‘ஓடுகிறான்’ என்பது வினைச்சொல்.

(விடை : சரி)

3 ‘இளங்கோ’ என்பது வினைச்சொல்.

(விடை : தவறு)

4 ‘ப், வ்’ ஆகியன எதிர்காலம் காட்டும் வினைச்சொல்லின் பகுதிகள்.

(விடை : சரி)

5 எச்சம் என்பது செயல் முற்றுப் பெறாத வினைச்சொல்.

(விடை : சரி)

6 வினைச்சொல்லில் திணை, பால், இடம் காலம் காட்டுவது சொல்லின் முதற்பகுதி ஆகும்.

(விடை : தவறு)

7 இலக்கணத்தில் இடம் மூன்று வகை பெறும்.

(விடை : சரி)

8 வினைச் சொல்லின் சிறந்த அடையாளம் காலம் காட்டுவது ஆகும்.

(விடை : சரி)

9 இறந்த காலத்தின் இடை நிலைகள் நான்கு ஆகும்.

(விடை : சரி)

10 வினைச் சொல் இரண்டு வகை பெறும்.

(விடை : சரி)

வினைச்சொல்

பயிற்சி - 2

**Exercise 2**

II. கீழ்க்காணும் கோடிட்ட இடங்களை நிரப்பச் சரியான சொற்களைக் கூறவும். விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Find the right words to fill in the blanks: For answers, press the answer button.

1 'இளங்கோ ஓடினான்' என்பதில் ‘இளங்கோ’ என்பது --------- .

(விடை : செய்பவன்)

2 'இளங்கோ ஓடினான்' என்பதில் அவன் கால்களால் ஓடினான் என்பது தெரியவருகிறது. அது ---------.

(விடை : கருவி)

3 'இளங்கோ ஓடினான்' என்பதில் அவன் மண்மீது ஓடினான் என்பது தெரிய வருகிறது அது --------.

(விடை : நிலம்)

4 'இளங்கோ ஓடினான்' என்பதில் ஓடுதல் என்ற செயல் நடைபெற்றது தெரிய வருகிறது. 'ஓடுதல்' என்பது ----------.

(விடை : செயல்)

5 'இளங்கோ ஓடினான்' என்பதில் ஓடியதால் செயல் விரைவில் முடியும் என்பது தெரியவருகிறது. அது -------.

(விடை : செய்பொருள்)

6 வினைச்சொல் -----------, -----------, ---------- , ---------- காட்டும்.

(விடை : திணை, பால், இடம், காலம்.)

7 இலக்கணத்தில் இடம் -------- ------ -------- என்று மூன்று வகைபெறும்.

(விடை : தன்மை, முன்னிலை, படர்க்கை)

8 வினைச்சொல்லின் சிறந்த அடையாளம் -------- காட்டுவது ஆகும்.

(விடை : காலம்)

9 இறந்த காலத்தின் இடைநிலைகள் --------- ------ ----- --------- ஆகும்.

(விடை : த், ட், ற், ன்.)

10 வினைச்சொல் ------- --------- என இரண்டு வகைபெறும்.

(விடை : வினைமுற்று, வினையெச்சம்.)

வினைச்சொல் பயிற்சி - 3

**Exercise 3**

III. கீழ்க்காணும் வினாக்களுக்குச் சரியான விடையைத் தேர்ந்தெடுத்து எழுதவும். விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Choose the right answer for the following questions. For answers, press the answer button.

1 வினைச்சொல்லின் தன்மை ஒருமை எவ்வாறு முடியும்?

அ) ஏன்

ஆ) ஓம்

இ) ஆய்

ஈ) ஈர்

(விடை : அ) ஏன்)

2 வினைச்சொல்லின் தன்மை பன்மை எவ்வாறு முடியும்?

அ) ஏன்

ஆ) ஓம்

இ) ஆய்

ஈ) ஈர்

(விடை : **ஆ) ஓம்**)

3 வினைச்சொல்லில் முன்னிலை ஒருமை எவ்வாறு முடியும்?

அ) ஏன்

ஆ) ஓம்

இ) ஆய்

ஈ) ஈர்

(விடை : **இ) ஆய்**)

4 வினைச்சொல்லில் முன்னிலைப் பன்மை எவ்வாறு முடியும்?

அ) ஏன்

ஆ) ஓம்

இ) ஆய்

ஈ) ஈர்

(விடை : **ஈ) ஈர்**)

5 வினைச்சொல்லில் படர்க்கை அஃறிணை ஒருமை எவ்வாறு முடியும்?

அ) து

ஆ) ஓம்

இ) ஆய்

ஈ) ஈர்

(விடை : **அ) து**)

6 வினைச்சொல் காட்டுவது எதை?

அ) பொருள்

ஆ) தொழில்

இ) பண்பு

ஈ) காலம்

(விடை : **ஈ) காலம்**)

7 இறந்த காலத்தின் இடைநிலை எத்தனை?

அ) ஐந்து

ஆ) மூன்று

இ) நான்கு

ஈ) எட்டு

(விடை : **இ) நான்கு**)

8 வினைச் சொல்லின் வகைகள் யாவை?

அ) மூன்று

ஆ) ஐந்து

இ) நான்கு

ஈ) இரண்டு

(விடை : **ஈ) இரண்டு**)

9 இலக்கணத்தில் இடம் எத்தனை வகை பெறும்?

அ) இரண்டு

ஆ) மூன்று

இ) ஏழு

ஈ) நான்கு

(விடை : **ஆ) மூன்று**)

10 எதிர்கால இடைநிலைகள் யாவை?

அ) ப், வ்

ஆ) ப், ன்

இ) ப், ர்

ஈ) ப், ல்

(விடை : **அ) ப், வ்**)

IV கீழ்க்காணும் வினாக்களுக்கு ஒருவரியில் விடை தரவும். விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Answer the following questions in a line each: For answers, press the answer button.

1 வினைச்சொல்லின் வகைகள் யாவை?

(விடை : **வினைச்சொல்லின் வகைகள் இரண்டு .அவை, (1) முற்று, (2) எச்சம்.**)

2 வினையெச்சங்கள் எத்தனை? அவை யாவை?

(விடை : **வினையெச்சங்கள் இரண்டு வகைப்படும் .அவை, (1) பெயரெச்சம், (2) வினையெச்சம்.**)

3 வினைச்சொல் எவற்றைக் காட்டும்?

(விடை : **திணை, எண், பால், இடம், காலம், செய்பவன், கருவி, செயல், செய்பொருள் ஆகியவற்றை வினைச்சொல் காட்டும்.**)

4 இளங்கோ ஓடுகிறான் என்ற சொற்றொடரில் வந்துள்ளது என்ன பால்?

(விடை : **இளங்கோ ஓடுகிறான் என்ற சொற்றொடரில் வந்துள்ளது ஆண்பால் ஆகும்.**)

5 இளங்கோ ஓடுகிறான் என்ற சொற்றொடரில் வந்துள்ளது என்ன திணை?

(விடை : **இளங்கோ ஓடுகிறான் என்ற சொற்றொடரில் வந்துள்ளது உயர்திணை ஆகும்.**)

6 வினைச்சொல்லின் சிறந்த அடையாளம் எது?

(விடை : **வினைச்சொல்லின் சிறந்த அடையாளம் காலம் காட்டுவது ஆகும்.**)

7 இறந்த காலத்தின் இடைநிலைகளைச் சுட்டுக.

(விடை : **இறந்த காலத்தின் இடைநிலைகள் த், ட், ற், ன்.**)

8 எதிர்காலத்தின் இடைநிலைகள் யாவை?

(விடை : **எதிர்காலத்தின் இடைநிலைகள் ப், வ் என்பன.**)

9 நிகழ்காலத்தின் இடைநிலை எவை?

(விடை : **நிகழ்காலத்தின் இடைநிலைகள் கிறு, கின்று, ஆநின்று என்பன.**)

10 இலக்கணத்தில் இடம் எத்தனை வகைபெறும்?

(விடை : இலக்கணத்தில் இடம் தன்னிலை, முன்னிலை, படர்க்கை என்று மூன்று வகைபெறும்.)

# 17. புணர்ச்சி

புணர்ச்சி

பொதுஅறிமுகம்

**General Introduction**

அன்புள்ள மாணவர்களே!

எழுத்துகள் பற்றியும், சொற்கள் பற்றியும் சென்ற பாடங்களில் படித்தோம். எழுத்துகள் சேர்ந்து நின்று பொருள் தருவது சொல். சொற்கள் சேர்ந்து நின்று முழுப்பொருளை உணர்த்துவது சொல் தொடர் (சொற்றொடர்).

சொற்கள் சேர்ந்து நிற்கும் முறையைப் புணர்ச்சி என்பர். புணர்தல் என்றால் சேர்தல் என்பது பொருள்.

புணர்ச்சி

பாட அறிமுகம்

**Introduction to Lesson**

எவ்வாறு தமிழ்ச் சொற்கள் ஒன்றுடன் ஒன்று சேர்ந்து நிற்கின்றன? சேர்ந்து நிற்கும் போது ஏற்படும் மாற்றங்கள் எவை? எந்த எந்தச் சொற்கள் சேரும்? - என்பன போன்ற செய்திகள் இப்பாடத்தில் இடம்பெறுகின்றன.

புணர்ச்சி

பாடம்

**Lesson**

இளங்கோ + புத்தகம்
இளங்கோ + படித்தான்
வந்தான் + இளங்கோ
ஓடி + விழுந்தான்

இந்த நான்கு தொடர்களையும் பாருங்கள்.

இளங்கோ, புத்தகம் - இவை பெயர்ச் சொற்கள்

படித்தான், வந்தான்

ஓடி, விழுந்தான் - இவை வினைச்சொற்கள்

பெயர்ச் சொற்களும் வினைச்சொற்களும் ஒன்றோடு ஒன்று சேரமுடியும் என்பது இதன்மூலம் தெரிய வருகிறது. மேலும்,

(1) பெயர்ச்சொல்லோடு + பெயர்ச்சொல்,

(2) பெயர்ச்சொல்லோடு + வினைச்சொல்,

(3) வினைச்சொல்லோடு + பெயர்ச்சொல்,

(4) வினைச்சொல்லோடு + வினைச்சொல்

என்ற வகையில் சொற்கள் சேரலாம். முன்னர்க் கண்ட எடுத்துக்காட்டுகளை இவற்றுடன் இப்பொழுது பொருத்திப் பார்ப்போம்.

(1) பெயர்ச்சொல்லோடு + பெயர்ச்சொல்,

எடுத்துக்காட்டு : இளங்கோ + புத்தகம்

(2) பெயர்ச்சொல்லோடு + வினைச்சொல்,

எடுத்துக்காட்டு : இளங்கோ + படித்தான்

(3) வினைச்சொல்லோடு + பெயர்ச்சொல்,

எடுத்துக்காட்டு : வந்தான் + இளங்கோ

(4) வினைச்சொல்லோடு + வினைச்சொல்

எடுத்துக்காட்டு : ஓடி + விழுந்தான்

இவற்றில்,

(1) இளங்கோ - ஆகியன நிலைமொழிகள் எனப்படுகின்றன.

(2) இளங்கோ

(3) வந்தான்

(4) ஓடி

புத்தகம் - ஆகியன வருமொழிகள் எனப்படுகின்றன.

வந்தான்

இளங்கோ

விழுந்தான்

நிலைமொழி, வருமொழி இரண்டிலும் பெயர்ச்சொற்களும் வினைச்சொற்களும் வரும் என்பதை மேல் உள்ள எடுத்துக்காட்டுகள் விளக்குகின்றன.

இது புணர்ச்சியில் ஒரு முறை.

புணர்ச்சி முறை - **2**

உயிர் + மெய் - எழுத்துகளின் சேர்க்கை

இங்கு நான்கு எடுத்துக்காட்டுகளை எடுத்துக்கொள்வோம்.

பனை + மரம்

பனை + ஓலை

மலர் + மாலை

மலர் + அடி

இவற்றில் நிலைமொழிகள்

பனை

மலர்

வருமொழிகள்

மரம்

ஓலை

மாலை

அடி

என்பனவாகும்.

இந்த ஆறு சொற்கள் பற்றிச் சற்றுச் சிந்திப்போம்.

பனை

இந்தச் சொல்லின் முதல் எழுத்து 'ப'.

அதனை (ப் + அ) எனப் பிரிக்கலாம். 'ப' முதலில் இருந்தாலும் அந்தச் சொல்லின் முதல் எழுத்து 'ப்'.

கடைசி எழுத்து (னை)

'னை' இறுதியில் இருந்தாலும் அது ன்+ஐ தானே? எனவே, இந்தச் சொல்லின் இறுதி எழுத்து 'ஐ'. இப்போது பனை என்ற சொல் 'உயிர்' எழுத்தை இறுதியாகக் கொண்டு முடிந்துள்ளது. அதுபோலவே

மலர் என்ற சொல்லில் முதல் எழுத்து ம் (ம் + அ = ம) – மெய் இறுதி எழுத்து ர் (மெய்)

மரம் என்ற சொல்லில் முதல் எழுத்து ம் (ம் + அ = ம) - மெய்
இறுதி எழுத்து ம் (மெய்)

ஓலை என்ற சொல்லில் முதல் எழுத்து ஓ (உயிர்)
இறுதி எழுத்து ல் + ஐ - ஐ (உயிர்)

மாலை என்ற சொல்லில் முதல் எழுத்து ம் (ம் + ஆ = மா) - மெய் இறுதி எழுத்து ல் + ஐ - ஐ (உயிர்)

அடி என்ற சொல்லில் முதல் எழுத்து அ (உயிர்)
இறுதி எழுத்து ட் + இ - இ (உயிர்)

மாணவர் கவனத்திற்கு

புணர்ச்சியில் ஒரு சொல்லின் முதலிலும், இறுதியிலும் உயிர் எழுத்தோ அல்லது மெய் எழுத்தோ மட்டும்தான் வர முடியும்.

உயிர்மெய் எழுத்து ஒரு சொல்லின் முதலில் வந்தால் அது மெய்யெழுத்தில் தொடங்குவதாகக் கொள்ள வேண்டும்.

எடுத்துக்காட்டு : பனை

ப் + அ முதல் எழுத்து 'ப்' (மெய்) என்றே கருத வேண்டும்.

உயிர்மெய் எழுத்து ஒரு சொல்லின் இறுதியில் வந்தால் அது உயிர் எழுத்தில் முடிவதாகக் கொள்ள வேண்டும்.

எடுத்துக்காட்டு : பனை

ன் + ஐ = இறுதி எழுத்து ஐ உயிர்.

எனவே உயிர்மெய் எழுத்து மெய் எழுத்தில் உச்சரிப்பைத் தொடங்கி உயிர் எழுத்தில் முடிவு பெறுகிறது.

நிலைமொழி இறுதியில் உயிர் எழுத்து அல்லது மெய் எழுத்து இருக்கும்.

வருமொழி முதலில் உயிர் எழுத்து அல்லது மெய் எழுத்து வந்து சேரும்.

இவ்வாறு சொற்கள் சேர (புணர) வாய்ப்பு உண்டு. இவ்வகையில் இரு சொற்கள் சேரும் போது,

உயிர் + உயிர்
உயிர் + மெய்
மெய் + மெய்

மெய் + உயிர்

என எழுத்துகள் சேர வாய்ப்புகள் தமிழ்மொழியில் உள்ளன. இது புணர்ச்சியில் மற்றொரு முறை.

**• புணர்ச்சியின் வகைகள்**

நிலைமொழியும் வருமொழியும் ஒன்றோடு ஒன்று சேர்வது புணர்ச்சி. இது இரண்டு வகைப்படும். அவை,

(1) இயல்பு புணர்ச்சி

(2) விகாரப் புணர்ச்சி

**• இயல்பு புணர்ச்சி**

நிலைமொழி, வருமொழி இரண்டும் சேரும் போது எவ்வித மாற்றமும் ஏற்படாமல் அப்படியே சேர்ந்து கொள்ளும். இது இயல்பு புணர்ச்சியாகும்.

பனை + மரம் = பனைமரம்

மலர் + மாலை = மலர்மாலை

இந்தச் சொற்கள் சேர்ந்த பின்னும் எழுத்துகளில் எந்த மாற்றமும் ஏற்படவில்லை, அல்லவா?

**• விகாரப் புணர்ச்சி**

நிலைமொழி வருமொழி இரண்டும் சேரும் போது சிலச்சில மாற்றங்கள் ஏற்பட்டால் அது விகாரப் புணர்ச்சி எனப்படும். விகாரம் என்றால் மாற்றம் என்று பொருள். விகாரம் மூன்று வகைப்படும்.

(1) தோன்றல்

(2) திரிதல்

(3) கெடுதல்

• தோன்றல் விகாரப் புணர்ச்சி

மா + காய் = மாங்காய்

மா + காய் = மாங்காய்

'மா' என்பது நிலைமொழி, 'காய்' என்பது வருமொழி. 'ங்' என்ற எழுத்து புதிதாகத் தோன்றியுள்ளது. எனவே, இது தோன்றல் விகாரப் புணர்ச்சி.

• திரிதல் விகாரப் புணர்ச்சி

பல் + பொடி = பற்பொடி

பல் + பொடி = பற்பொடி

பல் என்பது நிலை மொழி, பொடி என்பது வருமொழி. 'ல்' என்பது 'ற்' ஆகத் திரிந்ததால் இது திரிதல் விகாரப் புணர்ச்சி.

• கெடுதல் விகாரப் புணர்ச்சி

மரம் + வேர் = மரவேர்

மரம் +வேர் = மரவேர்

மரம் என்பது நிலைமொழி, வேர் என்பது வருமொழி.

நிலைமொழியில் உள்ள 'ம்', வருமொழியுடன் சேர்ந்து வரும்போது மறைந்து விட்டது. இதனால், இது கெடுதல் விகாரப் புணர்ச்சி ஆகும்.

இது போன்ற பல புணர்ச்சி செய்திகளை நீங்கள் அடுத்த அடுத்த நிலைகளில் படிக்கலாம்.

புணர்ச்சி

பயிற்சி - 1

**Exercise 1**

I. கீழ்க்காணும் தொடர்களைப் படிக்கவும். அவற்றைச் சரியா? தவறா? என அறிந்து கூறவும். விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Read the following and say whether they are right or wrong. For answers, press the answer button.

1 'கண்ணன் வந்தான்' என்ற தொடரில் கண்ணன் என்பது நிலைமொழி.

(விடை : சரி)

2 'கண்ணன் வந்தான்' என்ற தொடரில் வந்தான் என்பது வருமொழி.

(விடை : சரி)

3 'கண்ணன் வந்தான்' என்பதில் பெயர்ச்சொல்லும் பெயர்ச் சொல்லும் சேர்ந்து நிற்கின்றன.

(விடை : தவறு)

4 'கண்ணன் வந்தான்' என்பதில் பெயர்ச் சொல்லும் வினைச்சொல்லும் சேர்ந்து நிற்கின்றன.

(விடை : சரி)

5 'கண்ணன் வந்தான்' என்பதில் நிலைமொழியின் இறுதியில் மெய்யெழுத்து உள்ளது.

(விடை : சரி)

6 'கண்ணன் வந்தான்' என்பதில் வருமொழியின் முதலில் மெய்யெழுத்து உள்ளது.

(விடை : சரி)

7 புணர்ச்சியின் மற்றொரு முறை நிலைமொழியின் உயிர் எழுத்து முன் வருமொழியின் உயிர் எழுத்து சேர்தல்.

(விடை : சரி)

8 புணர்ச்சியின் மற்றொரு முறை நிலைமொழியின் உயிர் எழுத்து முன் வருமொழியின் மெய்யெழுத்து சேர்தல்.

(விடை : சரி)

9 புணர்ச்சியின் மற்றொரு முறை நிலைமொழியில் மெய் எழுத்து முன் வருமொழியின் மெய் எழுத்து சேர்தல்.

(விடை : சரி)

10 புணர்ச்சியின் மற்றொரு முறை நிலைமொழியில் மெய்எழுத்து முன் வருமொழியின் உயிர் எழுத்து சேர்தல்.

(விடை : சரி)



## பயிற்சி - 2
## Exercise 2

II. கீழ்க்காணும் கோடிட்ட இடங்களை நிரப்பச் சரியான சொற்களைக் கூறவும். விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Find the right words to fill in the blanks: For answers, press the answer button.

1 நிலைமொழியின் இறுதியில் -----------, --------- எழுத்துகள் வரலாம்.

(விடை : **உயிர்,மெய்**)

2 வருமொழியின் முதலில் ----------, --------- எழுத்துகள் வரலாம்.

(விடை : **உயிர்,மெய்**)

3 நிலைமொழியில் ----------, ----------- சொற்கள் வரலாம்.

(விடை : **பெயர்ச்,வினைச்**)

4 வருமொழியில் --------, ---------- சொற்கள் வரலாம்.

(விடை : **பெயர்ச்,வினைச்**)

5 இளங்கோ + புத்தகம் என்பது ----------- சொல் முன் -------- சொல் புணரும் புணர்ச்சி முறையாகும்.

(விடை : **பெயர்ச், பெயர்ச்**)

6 இளங்கோ + படித்தான் என்பது -------- சொல் முன் --------- சொல் புணரும் புணர்ச்சி முறையாகும்.

(விடை: **பெயர்ச், வினைச்**)

7 வந்தான் + இளங்கோ என்பது ----------- சொல் முன் ------- சொல் புணரும் புணர்ச்சி முறையாகும்.

(விடை : **வினைச், பெயர்ச்**)

8 ஓடி + விழுந்தான் என்பது -------- சொல் முன் --------- சொல் புணரும் புணர்ச்சி முறையாகும்.

(விடை : **வினைச், வினைச்**)

9 புணர்ச்சியின் இருவகைகள் -----------, ---------.

(விடை : **இயல்பு புணர்ச்சி, விகாரப் புணர்ச்சி** .)

10 இரு சொற்களின் சேர்க்கையின் போது ஏதேனும் ஓர் எழுத்து புதிதாகப் பிறந்தால் அது ------ விகாரப் புணர்ச்சி எனப்படும்.

(விடை : **தோன்றல்**)

புணர்ச்சி

**பயிற்சி - 3**

**Exercise 3**

III. கீழ்க்காணும் வினாக்களுக்குச் சரியான விடையைத் தேர்ந்தெடுத்து எழுதவும். விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Choose the right answer for the following questions. For answers, press the answer button.

1 புணர்ச்சி என்றால் என்ன பொருள்?

அ) சேர்தல்

ஆ) பிரிதல்

இ) சிரித்தல்

ஈ) அழுதல்

(விடை : **அ) சேர்தல்**)

2 பனை + மரம் என்பது எம்முறைப் புணர்ச்சிக்கு எடுத்துக்காட்டு?

அ) உயிர் எழுத்து முன் உயிரெழுத்து

ஆ) உயிர் எழுத்து முன் மெய் எழுத்து

இ) மெய் எழுத்து முன் மெய்யெழுத்து

ஈ) மெய் எழுத்து முன் உயிர் எழுத்து

(விடை : **ஆ) உயிர் எழுத்து முன் மெய் எழுத்து**)

3 பனை + ஓலை என்பது எவ்வாறு வரும்?

அ) உயிர் எழுத்து முன் உயிரெழுத்து

ஆ) உயிர் எழுத்து முன் மெய் எழுத்து

இ) மெய் எழுத்து முன் மெய்யெழுத்து

ஈ) மெய் எழுத்து முன் உயிர் எழுத்து

(விடை : **அ) உயிர் எழுத்து முன் உயிரெழுத்து)**

4 மலர் + மாலை என்பது எம்முறைப் புணர்ச்சிக்கு எடுத்துக்காட்டு?

அ) உயிர் எழுத்து முன் உயிரெழுத்து

ஆ) உயிர் எழுத்து முன் மெய் எழுத்து

இ) மெய் எழுத்து முன் மெய்யெழுத்து

ஈ) மெய் எழுத்து முன் உயிர் எழுத்து

(விடை : **இ) மெய் எழுத்து முன் மெய்யெழுத்து)**

5 மலர் + அடி என்பது எம்முறைப் புணர்ச்சிக்கு எடுத்துக்காட்டு?

அ) உயிர் எழுத்து முன் உயிரெழுத்து

ஆ) உயிர் எழுத்து முன் மெய் எழுத்து

இ) மெய் எழுத்து முன் மெய்யெழுத்து

ஈ) மெய் எழுத்து முன் உயிர் எழுத்து

(விடை : **ஈ) மெய் எழுத்து முன் உயிர் எழுத்து)**

6 மா + காய் = மாங்காய் என்பது எவ்வகை விகாரப் புணர்ச்சி?

அ) தோன்றல்

ஆ) கெடுதல்

இ) திரிதல்

ஈ) இயல்பு

(விடை : **அ) தோன்றல்)**

7 பல் + பொடி = பற்பொடி என்பது எவ்வகை விகாரப் புணர்ச்சி?

அ) தோன்றல்

ஆ) கெடுதல்

இ) திரிதல்

ஈ) இயல்பு

(விடை : **இ) திரிதல்)**

8 மரம் + வேர் = மரவேர் என்பது எவ்வகை விகாரப் புணர்ச்சி?

அ) தோன்றல்

ஆ) கெடுதல்

இ) திரிதல்

ஈ) இயல்பு

(விடை : ஆ) கெடுதல்)

9 பனை + மரம் என்பது எவ்வகைப் புணர்ச்சி?

அ) தோன்றல்

ஆ) கெடுதல்

இ) திரிதல்

ஈ) இயல்பு

(விடை : ஈ) இயல்பு)

10 புணர்ச்சியின் வகைகள் எத்தனை?

அ) மூன்று

ஆ) ஐந்து

இ) இரண்டு

ஈ) ஆறு

(விடை : இ) இரண்டு)

புணர்ச்சி

பயிற்சி - 4

**Exercise 4**

IV கீழ்க்காணும் வினாக்களுக்கு ஒருவரியில் விடை தரவும். விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Answer the following questions in a line each: For answers, press the answer button.

1 பெயர்ச்சொல் முன் பெயர்ச்சொல் சேர்வதற்கு எடுத்துக்காட்டுத் தருக.

(விடை : பெயர்ச்சொல் முன் பெயர்ச்சொல் சேர்வதற்கு எடுத்துக்காட்டு : இளங்கோ + புத்தகம்)

2 பெயர்ச்சொல் முன் வினைச்சொல் சேர்வதற்கு எடுத்துக்காட்டுத் தருக.

(விடை : பெயர்ச்சொல் முன் வினைச்சொல் சேர்வதற்கு எடுத்துக்காட்டு : இளங்கோ + படித்தான்)

3 வினைச்சொல் முன் பெயர்ச்சொல் சேர்வதற்கு எடுத்துக்காட்டுத் தருக.

(விடை : **வினைச்சொல் முன் பெயர்ச்சொல் சேர்வதற்கு எடுத்துக்காட்டு : வந்தான் + இளங்கோ**)

4 வினைச்சொல் முன் வினைச்சொல் சேர்வதற்கு எடுத்துக்காட்டுத் தருக.

(விடை : **வினைச்சொல் முன் வினைச்சொல் சேர்வதற்கு எடுத்துக்காட்டு : ஓடி + விழுந்தான்.**)

5 உயிர் எழுத்து முன் உயிர் எழுத்து வந்து சேர்வதற்கு எடுத்துக்காட்டுத் தருக.

(விடை : **உயிர் எழுத்து முன் உயிர் எழுத்து வந்து சேர்வதற்கு எடுத்துக்காட்டு : பனை + ஓலை**)

6 உயிர் எழுத்து முன் மெய் எழுத்து வந்து சேர்வதற்கு எடுத்துக்காட்டுத் தருக.

(விடை : **உயிர் எழுத்து முன் மெய் எழுத்து வந்து சேர்வதற்கு எடுத்துக்காட்டு : பனை + மரம்**)

7 மெய் எழுத்து முன் உயிர் எழுத்து வந்து சேர்வதற்கு எடுத்துக்காட்டுத் தருக.

(விடை : **மெய் எழுத்து முன் உயிர் எழுத்து வந்து சேர்வதற்கு எடுத்துக்காட்டு : மலர் + அடி**)

8 மெய் எழுத்து முன் மெய் எழுத்து வந்து சேர்வதற்கு எடுத்துக்காட்டுத் தருக.

(விடை : **மெய் எழுத்து முன் மெய் எழுத்து வந்து சேர்வதற்கு எடுத்துக்காட்டு : மலர் + மாலை**)

9 கெடுதல் விகாரப் புணர்ச்சிக்கு எடுத்துக்காட்டுத் தருக.

(விடை : கெடுதல் விகாரப் புணர்ச்சிக்கு எடுத்துக்காட்டு : மரம் + வேர் = மரவேர்.)

10 திரிதல் விகாரப் புணர்ச்சிக்கு எடுத்துக்காட்டுத் தருக.

(விடை : திரிதல் விகாரப் புணர்ச்சிக்கு எடுத்துக்காட்டு : பல் + பொடி = பற்பொடி.)

# 18. யாப்பு, அணி

யாப்பு, அணி

பொது அறிமுகம்

**General Introduction**

அன்புள்ள மாணவர்களே!

தமிழில் இலக்கணம் ஐந்து வகைப்படும். அவை எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்பனவாகும். எழுத்து இலக்கணம், சொல் இலக்கணம் பற்றி முன் பாடங்களில் படித்தோம். பொருள் இலக்கணம் குறித்து அடுத்த பாடநிலைகளில் படிக்கலாம். யாப்பு இலக்கணம், அணி இலக்கணம் குறித்து அறிமுகம் செய்வதாக இப்பாடம் அமைகிறது.

யாப்பு

பாட அறிமுகம்

**Introduction to Lesson**

யாப்பு இலக்கணம் என்பது பாடல் (செய்யுள்) பாடுவதற்கான (இயற்றுவதற்கான) இலக்கணம்.யாப்பு இலக்கணத்தின்படி எழுதப்படும் கவிதைகள் மரபுக்கவிதைகள் ஆகும்.

யாப்பு

பாடம்

**Lesson**

'யாப்பு' - என்றால் கட்டுதல் என்று பொருள். செய்யுள் பாடுவதற்கான உறுப்புகள் (பகுதிகள்) பல. அவை எழுத்து, அசை, சீர், தளை, அடி தொடை என்பன. இவை கொண்டு எழுதப்படுவது, யாக்கப்படுவது (கட்டப்படுவது) மரபுக்கவிதையாகும்.

மரபுக்கவிதை மொத்தம் நான்கு வகைப்படும்.

அவை
1. வெண்பா
2. ஆசிரியப்பா
3. கலிப்பா
4. வஞ்சிப்பா என்பன.

நம் பாடப்பகுதியில் உள்ள செய்யுள்பகுதியில் வெண்பா, ஆசிரியப்பா ஆகியவற்றில் அமைந்த பாடல்கள் உள்ளன.

தாயே! உயிரே! தமிழே! நினைவணங்கும்
சேயேன் பெறற்குஅரிய செல்வமே - நீயே
தலைநின்றாய் இவ்வுலகில் தாள்பணிந்தேன் நீயிங்கு
இலைஎன்றால் இன்பம்எனக்கேது

வெண்பா

தாயே! உயிரே! தமிழே! நினைவணங்கும்
சேயேன் பெறற்குஅரிய செல்வமே - நீயே
தலைநின்றாய் இவ்வுலகில் தாள்பணிந்தேன் நீயிங்கு
இலைஎன்றால் இன்பம்எனக்கேது

நாடா கொன்றோ; காடா கொன்றோ;
அவலா கொன்றோ; மிசையா கொன்றோ;
எவ் வழி நல்லவர் ஆடவர்,
அவ் வழி நல்லை; வாழிய நிலனே!

ஆசிரியப்பா

நாடா கொன்றோ; காடா கொன்றோ;
அவலா கொன்றோ; மிசையா கொன்றோ;
எவ் வழி நல்லவர் ஆடவர்,
அவ் வழி நல்லை; வாழிய நிலனே!

வெண்பா, ஆசிரியப்பா என்று கண்டறிவது எவ்வாறு என்பதை அடுத்த பாடநிலைகளில் அறியலாம்.

## பாட அறிமுகம்
## Introduction to Lesson

பொம்மைகள் அழகு. அவை அணிகள் அணிந்து இருந்தால் இன்னும் அழகு.

அதுபோல பாடல்கள் இனிமையானவை அவற்றிற்கு மேலும் இனிமை சேர்ப்பவை அணிகள். அவை பலவகைப்படும் அவற்றில் உவமை அணியை மட்டும் இப்பாடம் விளக்குகிறது.

அணி

## பாடம்
## Lesson





ஓர் ஓட்டப்போட்டி நடப்பதாக வைத்துக் கொள்வோம். அதில் ஒருவர் மிகவேகமாக ஓடுகிறார். பார்ப்பவர்கள் கைதட்டுகிறார்கள்

'அவர் குதிரைமாதிரி ஓடுகிறார்'
'அவர் பறவைப் போல பறக்கிறார்'

என்று சொல்லுகிறார்கள்.

“குதிரை மாதிரி”
“பறவைப் போல”

உவமை அணி என்பது இதுதான். ஒன்றுக்கு உவமையாக ஒன்றைச் சொல்வது என்பது உவமையணி. இது செய்யுளுள் வந்தால் மிக இனிமை தரும்.

'நவில்தொறும் நூல்நயம் போலும் பயில்தொறும்
பண்பு உடையாளர் தொடர்பு'

(திருக்குறள்- நட்பு)

என்பது நம் செய்யுள் பகுதியில் வந்த ஒரு குறள். இதில் நல்லவர்களின் நட்பு படிக்க படிக்க புது இன்பம், சுவை தரும் நூலைப் போன்றது எனக் குறிப்பிடப்படுகிறது. இதில் உவமை அணி உள்ளது என்பது உங்களுக்குத் தெரிந்து இருக்கும்.

உவமை அணிக்கு மொத்தம் நான்கு பகுதிகள் தேவை.

அவை

1. உவமை ஒப்பாகச் சொல்லப்படும் பொருள்
2. உண்மைப் பொருள்
3. பொதுப்பண்பு
4. இணைப்புச் சொல் உவம உருபு

என்பன.

அவர் குதிரை போல ஓடினார் என்பதில்

| | |
|---|---|
| ஒப்பாகச் சொல்லப்படும் பொருள் | - குதிரை |
| உண்மைப்பொருள் | - ஓடியவர் |
| பொதுப்பண்பு | - குதிரைக்கும் ஓடிய மனிதனுக்கும் பொதுவான பண்பு வேகமாக ஓடுதல் |
| உவம உருபு | - போல. |

'நவில்தொறும் நூல்நயம் போலும் பயில்தொறும்
பண்பு உடையாளர் தொடர்பு'

(திருக்குறள்- நட்பு)

என்பதில்

| | |
|---|---|
| ஒப்பாகச் சொல்லப்படும் பொருள் | - புத்தகம் |
| உண்மைப்பொருள் | - நட்பு |
| பொதுப்பண்பு | - படிக்கப்படிக்க இனிமை பழகப்பழக இனிமை |
| உவம உருபு | - போலும். |

என்ன மாணவர்களே?

இப்போது நீங்கள் உவமைஅணி பற்றி அறிந்திருப்பீர்கள்.

நம்பாடத்தில் வந்த சில உவமைஅணிகள். - பின் வருமாறு வருகின்றன.

1. கல்வி போல் மம்மர் அறுக்கும் மருந்து
2. பொய்கையும் போன்றதே ஈசன் எந்தை இணைஅடி நீழலே

யாப்பு, அணி

பயிற்சி - 1

**Exercise 1**

I. கீழ்க்காணும் தொடர்களைப் படிக்கவும். அவற்றைச் சரியா? தவறா? என அறிந்து கூறவும். விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Read the following and say whether they are right or wrong. For answers, press the answer button.

1 தமிழில் இலக்கணம் ஐந்து வகைப்படும்.
(விடை : சரி,)

2 யாப்பு என்ற சொல்லுக்குக் கட்டுதல் என்று பொருள்.
(விடை : சரி,)

3 யாப்பு இலக்கணப்படி அமைவது புதுக்கவிதை.
(விடை : தவறு)

4 யாப்பு இலக்கணப்படி அமைவது மரபுக்கவிதை.
(விடை : சரி)

5 அணி என்பது ஒருவகை இலக்கணம்.

(விடை : சரி)

6 உவம உருபுகள் கொண்டது உவமை அணி.

(விடை : சரி)

7 ஆசிரியப்பா இலக்கண வரம்பு இல்லாத கவிதை.

(விடை : தவறு)

8 போல என்பது உவம உருபுகளில் ஒன்று.

(விடை : சரி)

9 செய்யுள் பாடுவதற்கு யாப்பு இலக்கணம் தேவை.

(விடை : சரி)

10 செய்யுளில் மேலும் அழகும் இனிமையும் சேர்ப்பது பொருள் இலக்கணம்.

(விடை : தவறு)

யாப்பு, அணி

பயிற்சி - 2

**Exercise 2**

II. கீழ்க்காணும் கோடிட்ட இடங்களை நிரப்பச் சரியான சொற்களைக் கூறவும். விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Find the right words to fill in the blanks: For answers, press the answer button.

1 மரபுக்கவிதை ------------ வகைப்படும்.

(விடை : **நான்கு**)

2 மரபுக்கவிதையின் வகைகள் ------------, -------------, ----------, ---------- என்பனவாகும்.

(விடை : **வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா**)

3 உவமை அணி என்பது ஒரு பொருளுக்கு -------------- மற்றொரு பொருளைச் சொல்வது.

(விடை : **உவமையாக**)

4 உவமை அணி -------------, ------------, ------------, ---------- நான்கு பகுதிகளைக் கொண்டது.

(விடை : **ஒப்பாகச் சொல்லப்படும் பொருள், உண்மைப்பொருள் பொதுப்பண்பு, உவம உருபு**)

5 போல என்பது ------------ ஆகும்.

(விடை : **உவம உருபு**)

6 தமிழில் இலக்கணம் ------------ வகைப்படும்.

(விடை : **ஐந்து**)

7 செய்யுளில் யாப்பு என்றால் ------------ என்று பொருள்.

(விடை : **கட்டுதல்**)

8 செய்யுளில் மேலும் இனிமை சேர்ப்பது ----------- ஆகும்.

(விடை : **அணி இலக்கணம்,**)

9 வெண்பா என்பது --------- அடிகளைக் கொண்ட செய்யுளாகும்.

(விடை : **நான்கு**)

10 கல்வி ----------. மம்மர் அறுக்கும் மருந்து.

(விடை : **போல்**)

யாப்பு, அணி

பயிற்சி - 3

Exercise 3

III. கீழ்க்காணும் வினாக்களுக்குச் சரியான விடையைத் தேர்ந்தெடுத்து எழுதவும். விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Choose the right answer for the following questions. For answers, press the answer button.

1 செய்யுள் பாடுவதற்கான இலக்கணம் எது?

அ) அணி இலக்கணம்

ஆ) சொல் இலக்கணம்

இ) பொருள் இலக்கணம்

ஈ) யாப்பு இலக்கணம்

(விடை : **ஈ) யாப்பு இலக்கணம்**)

2 பாடலுக்கு மேலும் அழகும் இனிமையும் சேர்ப்பது எவ்வகை இலக்கணம்?

அ) அணி இலக்கணம்

ஆ) சொல் இலக்கணம்

இ) பொருள் இலக்கணம்

ஈ) யாப்பு இலக்கணம்

(விடை : **அ) அணி இலக்கணம்**)

3 மாதிரி, போல, போன்று என்பன என்ன?

அ) உவம உருபுகள்

ஆ) பொதுப்பண்புகள்

இ) உண்மைப்பொருள்கள்

ஈ) ஒப்பாகக் கூறப்படும் பொருள்

(விடை : **அ) உவம உருபுகள்**)

4 குதிரை போல ஓடினார் என்பதில் குதிரை என்பது என்ன?

அ) அணி இலக்கணம்

ஆ) சொல் இலக்கணம்

இ) பொருள் இலக்கணம்

ஈ) யாப்பு இலக்கணம்

(விடை : **அ) சொல் இலக்கணம்**)

5 உவமை அணியின் பகுதிகள் எத்தனை?

அ) மூன்று

ஆ) ஐந்து

இ) ஆறு

ஈ) நான்கு

(விடை : **ஈ) நான்கு**)

6 மரபுக்கவிதையின் வகைகள் யாவை?

அ) வெண்பா, ஆசிரியப்பா, தாழிசைப்பா, விருத்தப்பா

ஆ) வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா

இ) விருத்தப்பா, வெண்பா, கலிப்பா, வஞ்சிப்பா

ஈ) வெண்பா, கலிப்பா, ஆசிரியப்பா, எண்சீர்விருத்தம்

(விடை : **ஆ) வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா**)

7 யாப்பு என்றால் என்ன?

அ) இசைத்தல்

ஆ) உண்டாக்குதல்

இ) கட்டுதல்

ஈ) வடித்தல்

(விடை : **இ) கட்டுதல்**)

8 தமிழில் இலக்கணம் எத்தனை வகைபெறும்?

அ) எட்டு

ஆ) ஒன்பது

இ) நான்கு

ஈ) ஐந்து

**(விடை : ஈ) ஐந்து)**

9 செய்யுளுக்கு மேலும் இனிமை சேர்ப்பது எது?

அ) யாப்பு

ஆ) பொருள்

இ) அணி

ஈ) உவமை

**(விடை : இ) அணி)**

10 செய்யுளின் உறுப்புகள் எவை?

அ) எழுத்து, சீர், தளை

ஆ) எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடை

இ) எழுத்து, பொருள், தளை, அடி, சீர்

ஈ) எழுத்து, சொல்,அசை, தளை, அடி

**(விடை : ஆ) எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடை)**



## பயிற்சி - 4

## Exercise 4

IV. கீழ்க்காணும் வினாக்களுக்கு ஒருவரியில் விடை தரவும். விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Answer the following questions in a line each: For answers, press the answer button.

1 உவமை அணி என்றால் என்ன?

**(விடை : செய்யுளில் ஒன்றுக்கு உவமையாக மற்றொன்றைச் சொல்வது உவமை அணி எனப்படும்.)**

2 செய்யுள் உறுப்புகள் சிலவற்றைக் கூறுக.

**(விடை : எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடை என்பன செய்யுள் உறுப்புகளாகும்.)**

# 13.எழுத்தும் சொல்லும்

எழுத்தும் சொல்லும் பொது அறிமுகம்

**General Introduction**

**அன்புள்ள மாணவர்களே! வணக்கம்**

தமிழ் இலக்கணம் ஐந்து வகைபெறும். அவற்றுள் முதலாவது எழுத்து இலக்கணம் என்பதைச் சான்றிதழ்க்கல்வி முதல்நிலைப் பாடங்களில் நீங்கள் கற்று உணர்ந்திருப்பீர்கள். ஒலியானது உள்ளே இருந்து **எழுந்து** வருவது;அதுவே எழுத்து என ஆகின்றது. அவ்வாறே எழுதப்படுவது என்பதாலும் **எழுத்து** என்ற பெயர் பொருத்தமாகின்றது. எனவே, **எழுவது, எழுதுவது** என்னும் இரண்டுமே எழுத்து எனக் கொள்ளலாம். எழுத்துகளை **முதல் எழுத்து, சார்புஎழுத்து** என வகைப்படுத்திய நிலையும் நீங்கள் அறிந்ததே. இப்பாடம் சார்பெழுத்துகளில் சில வகைகளைப் பற்றியதாக அமைகின்றது.

எழுத்தும் சொல்லும் பாட அறிமுகம்

**Introduction to Lesson**

முதல் - சார்பு என்னும் இரு வகைகளுக்கான விளக்கம் அப்பெயர்களிலேயே அமைந்துள்ளன. முதன்மையுடையதே **முதல் எழுத்து** ஆகும் . தனக்கெனத் தனித்தன்மை இல்லாதது **சார்பெழுத்து** ஆகும். தனித்து இயங்கும் ஆற்றல் முதல் எழுத்துகளுக்கு உண்டு. அவ்வாறே தனித்து இயங்கும் ஆற்றல் இல்லாதவை **சார்பெழுத்துகள்** ஆகும். தாமே தனித்து நடக்க முடியாதவர் ஓர் ஊன்றுகோலைச் சார்ந்துதான் நடப்பார். நடக்கவோ, நிற்கவோ முடியாதவர் தூணிலோ, சுவரிலோ சார்(ய்)ந்துதான் இருப்பார். அத்தகு, சார்பு / சாய்வுத் தன்மைதான் சார்பெழுத்திலும் அமைகின்றது. இவை **சார்பெழுத்து** என்னும் பெயர் அமைந்ததற்கான விளக்கங்கள் ஆகும்.

⊕ சார்பெழுத்தின் வகைகள்

சார்பெழுத்துகள் மொத்தம் பத்து ஆகும். **உயிர்மெய், ஆய்தம், உயிரளபெடை, ஒற்றளபெடை, குற்றியலிகரம், குற்றியலுகரம், ஐகாரக்குறுக்கம், ஒளகாரக்குறுக்கம், மகரக்குறுக்கம், ஆய்தக் குறுக்கம்** என்பனவே அவை.

இவற்றுள், **உயிர்மெய், ஆய்தம், குற்றியலுகரம், குற்றியலிகரம்** என்னும் நான்கின் விளக்கங்களை சான்றிதழ்க் கல்வி முதல் நிலையில் கற்று உணர்ந்தீர்கள்.

இப்பாடப் பகுப்பு எஞ்சிய ஆறு வகைச் சார்பெழுத்துகளைப் பற்றியதாக அமைகிறது. அவற்றைப் பொதுநிலையில் இரண்டு பிரிவுகளுக்குள் அடக்கிக் காணலாம்.

### I. அளபெடை

- ⊕ உயிரளபெடை
- ⊕ ஒற்றளபெடை

### II. குறுக்கம்

- ⊕ ஐகாரக் குறுக்கம்
- ⊕ ஒளகாரக் குறுக்கம்
- ⊕ மகரக் குறுக்கம்
- ⊕ ஆய்தக் குறுக்கம்

### III. அளபெடை

தமிழ் எழுத்துகள் ஒவ்வொன்றுக்கும் உச்சரிப்பதற்குரிய காலஅளவு உண்டு. அதனை மாத்திரை என்று குறிப்பிடுவர். அத்தகு மாத்திரை தன் அளவுடன் அதிகமாகி ஒலிப்பது அளபெடை எனப்பெறும். உயிர், மெய் என்னும் இருவகை

எழுத்துகளும் அவ்வாறு இயல்பான அளவில் இருந்து அதிகரித்து ஒலிக்கும். அதுவே அளபெடை எனப்பெறும். எனவே, அளபெடை இரண்டாகிறது. அவை

- உயிரளபெடை
- ஒற்றளபெடை

### உயிரளபெடை

உயிரெழுத்துகளில் குறில், நெடில் என்னும் இரு வகைகள் உண்டு. குறில் எழுத்துக்குரிய அளவு ஒரு மாத்திரையாகும். அவ்வாறே நெடில் எழுத்துக்குரிய அளவு இரண்டு மாத்திரையாகும். சில நேரங்களில் ஓர் உயிர் எழுத்தை இரண்டு மாத்திரை அளவிற்கு, அதிகமாக ஒலிக்கவேண்டியத் தேவை ஏற்படும். அப்போது நெடில் உயிர்எழுத்துகளை மேலும் நீட்டி ஒலிப்பர். அதுவே **உயிர்** அளபெடை எனப்பெறும். அளபெடை அமைந்ததற்கு அடையாளமாக **உயிர்**நெடில் எழுத்துக்கு அருகில் **உயிர்**க்குறில் எழுத்து கூடுதலாக இடம்பெறும்.

### உயிரளபெடை வகைகள்

நெடில் உயிர்எழுத்துகளை நீட்டி ஒலிக்கும் அளபெடை மூன்று காரணங்களால் அமைகிறது. எனவே **உயிர**ளபெடை மூன்று வகைபெறும்.

| வ. எண் | காரணம் | வகை | எடுத்துக்காட்டு | விளக்கம் |
|---|---|---|---|---|
| 1. | செய்யுள் இலக்கணத்திற்குரிய ஓசை குறையும் போது, அதனை நிறைவு செய்வது. | இசைநிறை அளபெடை | ஏரின் உழாஅர் உழவர் நற்றாள் தொழாஅர் எனின் | உழார், தொழார் என்று அமைந்தால் ஓரசையாகி இலக்கணப் பிழை ஏற்படும். அதை மாற்றி ஈரசையாக்க அளபெடை அமைந்தது. |
| 2. | செய்யுள் இலக்கணத்திற்குரிய ஓசை குறையாத போதும் இனிய இசையை ஏற்படுத்துவது | இன்னிசை அளபெடை | கெடுப்பதூஉம் எடுப்பதூஉம் | கெடுப்பதும், எடுப்பதும் என்று அமைந்தாலும் இலக்கணப் பிழை ஏதும் இல்லை. எனினும் இனிய இசைக்காக அளபெடை அமைந்தது. |
| 3. | பெயர்ச்சொல்லை வினையெச்சமாகப் பொருள் மாற்றம் செய்வது | சொல்லிசை அளபெடை | நசை - நசைஇ | நசை என்னும் பெயர்ச்சொல்லுக்கு விருப்பம் என்று பொருள். அதனை 'விரும்பி' என்னும் வினையெச்சமாக மாற்ற அளபெடை அமைந்தது. |

### ஒற்றளபெடை

| | |
|---|---|
| கலங்கு நெஞ்சம் | கலங்ங்கு நெஞ்சம். |

மேற்கண்ட எடுத்துக்காட்டுகள் இரண்டையும் உற்று நோக்கவும்.

முதல் எடுத்துக்காட்டில் ஒருமுறை இடம்பெற்ற ங் என்னும் ஒற்று (மெய்) எழுத்து அடுத்த எடுத்துக்காட்டில் இருமுறை இடம்பெற்றுள்ளது.

மேற்கண்ட கலங்கு என்னும் சொல் செய்யுளில் இடம்பெறும்போது ஓசை அளவு குறைவாக அமையும். அதை மாற்றி ஓசையை நிறைவு செய்வதற்காக, கலங்ங்கு என்று இருமுறை மெய்யெழுத்தை அமைத்தனர்.

ங் என்னும் மெய்யெழுத்து இரண்டாம்முறை இடம்பெற்றதே அளபெடை அமைந்ததற்கான அடையாளமாகும்.

இவ்வாறு செய்யுளின் ஓசைக்காக மெய்யெழுத்துகளும் தமக்குரிய அரைமாத்திரை அளவினைவிட அதிகமாக ஒலிப்பதை **ஒற்றளபெடை** என்பர்.

### ⊕ குறுக்கம்

ஓர் எழுத்து தனக்குரிய மாத்திரை அளவினைவிட அதிகமாக ஒலிப்பதை அளபெடை என்று கண்டோம். அவ்வாறே ஓர் எழுத்து தனக்குரிய மாத்திரைஅளவினைவிடக் குறைவாக ஒலிப்பதைக் **குறுக்கம்** என்பர்.

### ⊕ குறுக்கம் - வகைகள்

உயிர் எழுத்து, மெய்யெழுத்து, ஆய்த எழுத்து என்னும் மூவகை எழுத்துகளும் குறுகி ஒலிப்பது உண்டு. எனவே **குறுக்கம்** என்னும் சார்பெழுத்தை ஆறு வகையாக வழங்குவர். அவையாவன:

(1) குற்றியலிகரம்
(2) குற்றியலுகரம்
(3) ஐகாரக் குறுக்கம்
(4) ஔகாரக் குறுக்கம்
(5) மகரக் குறுக்கம்
(6) ஆய்தக் குறுக்கம்

குறிப்பு: மேற்கண்ட ஆறு வகைகளுள் முதல் இரண்டையும் பற்றி சான்றிதழ் முதல் நிலையில் கற்று உணர்ந்தோம். இப்பாடப்பகுப்பில் எஞ்சிய நான்கையும் பற்றி அறிவோம்.

### ⊕ ஐகாரக் குறுக்கம்

ஐந்து வளையல் கலை

மேற்கண்ட மூன்று சொற்களையும் உற்று நோக்குங்கள். ஒலித்துப் பாருங்கள்.

மூன்றிலும் ஐ என்னும் எழுத்து இடம்பெற்றுள்ளது.

முதல் எடுத்துக்காட்டில் சொல்லின் தொடக்கத்தில் ஐ அமைந்துள்ளது.

இரண்டாம் எடுத்துக்காட்டில் சொல்லின் இடையில் ஐ **(ளை = ள்+ஐ)** அமைந்துள்ளது.

மூன்றாம் எடுத்துக்காட்டில் சொல்லின் இறுதியில் ஐ **( லை = ல் + ஐ )** அமைந்துள்ளது.

ஐ என்னும் எழுத்துக்கு உரிய அளவு இரண்டு மாத்திரை ஆகும்.

ஆனால், இம் மூன்று எடுத்துக்காட்டுகளிலும் இடம்பெற்ற ஐ என்னும் உயிர்நெடில் தனக்குரிய இரண்டு மாத்திரை அளவினைவிடக் குறைந்து ஒலிக்கிறது. அதுவே ஐகாரக் குறுக்கம் ஆகும். மொழி முதல், மொழி இடை, மொழி இறுதி என்னும் மூன்று இடங்களிலும் இடம்பெறும் ஐகாரம் குறுகி ஒலிப்பதால் அது மூவகைபெறும்.

⊕ ஔகாரக் குறுக்கம்

ஔவை கௌவை

மேற்கண்ட இரண்டு சொற்களையும் உற்று நோக்குங்கள். ஒலித்துப் பாருங்கள்.

இரண்டிலும் ஔ என்னும் எழுத்து இடம்பெற்றுள்ளது.

முதல் எடுத்துக்காட்டில் சொல்லின் தொடக்கத்தில் ஔ அமைந்துள்ளது.

இரண்டாம் எடுத்துக்காட்டில் சொல்லின் முதலில் மெய்யெழுத்துடன் கூடி **(க்+ஔ=கௌ)** ஔ அமைந்துள்ளது.

இவ்விரு இடங்களிலும் இடம்பெற்றது ஒள என்னும் உயிர்நெடில் ஆகும். அதனை **ஒளகாரம்** என்பர்.

அது தனக்குரிய இரண்டுமாத்திரை அளவில் குறுகி (குறைந்து) ஒலித்துள்ளது. எனவே, அதற்கு **ஒளகாரக் குறுக்கம்** என்று பெயர்.

### ⌖ மகரக் குறுக்கம்

| | |
|---|---|
| போலும் - போன்ம் மருளும் - மருண்ம் | வரும் வளவன் |

மேற்கண்ட இரண்டு வகைகளையும் உற்று நோக்குங்கள்.

இரண்டிலும் ம் என்னும் எழுத்து இடம்பெற்றுள்ளது.

முதல் எடுத்துக்காட்டில் **போலும், மருளும்** என்னும் சொற்கள் மாற்றம் பெற்று **போன்ம், மருண்ம்** என்று திரிந்து வழங்குகின்றன.

அவ்வாறு திரிபு அடைந்த சொற்களின் இறுதியில் இடம்பெற்ற **ம்** என்னும் மெய்யெழுத்து தனக்குரிய மாத்திரை அளவினைவிட குறைந்து ஒலிப்பதை நீங்கள் ஒலித்துப் பார்த்து உணரலாம்.

இரண்டாம் வகையில் இடம்பெற்ற **வரும்** என்னும் சொல்லின் இறுதியில் அமைந்த **ம்** என்னும் மெய்யெழுத்து வருமொழியில் **வ** என்னும் எழுத்து வந்ததால் தனக்குரிய அரை மாத்திரை அளவில் இருந்து குறைந்து ஒலிப்பதை நீங்கள் ஒலித்துப் பார்த்து உணரலாம்.

இவ்வாறு இரண்டு வகைகளிலும் இடம்பெற்ற ம் (மகரம்) குறுகி ஒலிப்பதையே **மகரக்குறுக்கம்** என்பர்.

### ⌖ ஆய்தக் குறுக்கம்

அல் + திணை = அஃறிணை

முள் + தீது = முஃடீது

மேற்கண்ட இரண்டு வகைகளையும் உற்று நோக்குங்கள்.

இரண்டிலும் ஃ என்னும் ஆய்த எழுத்து இடம்பெற்றுள்ளது.

நிலைமொழி, வருமொழி இரண்டும் சேர்ந்த புணர்ச்சியில் அமையும் புதிய சொல்லில் ஆய்த எழுத்து புதிதாக இடம் பெற்றுள்ளது.

அவ்வாறு புணர்ச்சியில் சொல்லின் இடையில் புதியதாகத் தோன்றும் ஆய்த எழுத்து தனக்குரிய அரை மாத்திரை அளவினைவிடக் குறைந்து ஒலிக்கும். அதனை **ஆய்தக் குறுக்கம்** என்பர்.

### ⊕ பதம்

இது சொல் என்பதைக் குறிக்கும் பிறிதோர் சொல்லாகும்.

ஒரு சொல்லுக்குரிய பொருளைக் காண்பதன் முன்னர் அதன் புற வடிவத்தை வைத்துச் சொல்லப்படுகின்ற சில இலக்கணங்கள் **பதவியல்** அல்லது **சொல்லியல்** எனப்பெறும்.

### ⊕ வகை

**பதவியல்** என்னும் பிரிவினை **நன்னூல்** என்னும் இலக்கண நூலின் ஆசிரியர் **பவணந்தி** முனிவர் அமைத்துள்ளார். அவ்விலக்கணப்படி **பதம்** இரு வகைபெறும்.

ஒன்று - சில கூறுகளாகப் **பிரிக்கக்கூடியது.**

மற்றொன்று அவ்வாறு **பிரிக்கமுடியாதது.**

பிரிக்கக்கூடியதைப் **பகுபதம்** என்பர்.

பிரிக்க முடியாததைப் **பகாப்பதம்** என்பர்.

கீழ்க்காணும் சொற்களை உற்று நோக்கவும்.

| | | | | |
|---|---|---|---|---|
| நிலம் | மண் | கல் | வா | போ |

இவற்றை இதற்கு மேலும் சிறியக் கூறுகளாகப் பிரிக்க முடியாது. எனவே பகாப்பதம் எனப்படுகின்றது. (பகா - பிரிக்கமுடியாத; பதம்- சொல்)

| | | |
|---|---|---|
| பொன்னன் | வாழ்க | செய்தான் |

இவற்றை ஒன்றுக்கும் மேற்பட்ட சிறு சிறு கூறுகளாகப் பிரிக்க முடியும். எனவே **பகுபதம்** எனப்பெறுகிறது. (பகு - பிரி(க்கக்கூடிய); பதம் - சொல்)

| | | |
|---|---|---|
| பொன்னன் என்பதனை | பொன் + அன் | எனப் பிரிக்கலாம். |
| வாழ்க என்பதனை | வாழ் + க | எனப் பிரிக்கலாம். |
| செய்தான் என்பதனை | செய் + த்+ ஆன் | எனப் பிரிக்கலாம். |

### ⌖ பகுபத உறுப்புகள்

சில கூறுகளாகப் பிரிக்கக் கூடிய சொற்களைப் **பகுபதம்** என்று கண்டோம். அவ்வாறு பிரிக்கக் கூடிய கூறுகளையே பகுபத உறுப்புகள் என்பர். அவை ஆறு வகைபெறும். அவையாவன:

(1) பகுதி
(2) விகுதி
(3) இடைநிலை
(4) சந்தி
(5) சாரியை
(6) விகாரம்

பகுபத உறுப்புகளைப் பற்றிய விளக்கங்களை இனிக் காண்போம்.

- பகுதி - இயல்பாக முதலில் நிற்பது.
- விகுதி - பகுதியை வேறுபடுத்தி இறுதியில் நிற்பது.

⊕ இடைநிலை - பகுதிக்கும் விகுதிக்கும் இடையில் நிற்பது.

⊕ சந்தி - பகுதியும் இடைநிலையும் சந்திக்கும்போது தோன்றுவது. சிறுபான்மை வேறு இடங்களில் வரலாம்.

⊕ சாரியை - இடைநிலையையும் விகுதியையும் சார்ந்து அவற்றின் இடையில் வருவது. சிறுபான்மை வேறு இடங்களிலும் வரலாம்.

⊕ விகாரம் - பகுதி, சந்தி முதலியன விகாரப்பட்டு (மாறி) வருவது.

பகுபத உறுப்புகள் சொற்களில் அமையும் நிலையை அறியக் கீழ்க்காணும் எடுத்துக்காட்டுகளை உற்று நோக்கவும்.

| | |
|---|---|
| மாதிரி - 1 பகுதி + விகுதி | வாழ்க = வாழ் + க |
| மாதிரி - 2 பகுதி + இடைநிலை + விகுதி | செய்தான் = செய் + த் + ஆன் |
| மாதிரி - 3 பகுதி + சந்தி + இடைநிலை + விகுதி | பார்த்தான் = பார் + த் + த் + ஆன் |
| மாதிரி - 4 பகுதி + சந்தி + விகாரம் + இடைநிலை + விகுதி | வாழ்ந்தான் = வாழ் + த் (ந்) + த் + ஆன் |
| மாதிரி - 5 பகுதி + சந்தி + விகாரம் + இடைநிலை + சாரியை + விகுதி | நடந்தனன் - நட + த் (ந்) + த் + அன் + அன் |

இவ்வெடுத்துக்காட்டுகள் ஒவ்வொன்றிலும் பகுபத உறுப்பு இனங்களின் வளர்ச்சியை நீங்கள் உணரலாம்.

## ⊕ மூவகை மொழி

மொழி என்பது சொல்லைக் குறிக்கும்.

ஒரு சொல் பொருள்தரும் அமைப்பை வைத்து அதனைத் தனிமொழி, தொடர் மொழி, பொது மொழி என மூன்றாக வகைப்படுத்துவர்.

கீழ்க்காணும் மூன்று நிலை எடுத்துக்காட்டுகளையும் நோக்குக.

| I | II | III |
| --- | --- | --- |
| மலர் | மலர் சூடினாள் | தாமரை தா + மரை |

முதல் நிலையில் ஒரு சொல் தனித்து நின்று பொருளை உணர்த்தியது. எனவே, அதனைத் **தனிமொழி** என்பர்.

இரண்டாம் நிலையில் இரண்டு சொற்கள் ஒன்றன்பின் ஒன்றாகத் தொடர்ந்து நின்று ஒரு பொருளை உணர்த்தின. எனவே, அதனைத் தொடர்மொழி என்பர்.

மூன்றாம் நிலையில் ஒரே சொல் இரண்டு வகையாகவும் அமைகின்றது.

முதலில், ஒரு சொல்லாக நின்று தாமரை என்னும் மலரை உணர்த்தியது.

பின்னர் தா + மரை எனப் பிரிந்து நின்று **தாவுகின்ற மான்** என்னும் வேறு பொருளை உணர்த்தியது.

இவ்வாறு ஒரு சொல்லே தனி மொழியாகவும் தொடர் மொழியாகவும்

எனவே, அதனைப் **பொது**மொழி என்பர்.

எழுத்தும் சொல்லும்

மையக் கருத்து

**General Idea**

இலக்கணப் பாடத்தொகுப்பின் முதல் பாடமாகிய எழுத்தும் சொல்லும் என்னும் பிரிவில் ஆறு வகையான சார்பெழுத்துகள், இருவகைப் பதங்கள், ஆறுவகைப் பகுபத உறுப்புகள், மூவகை மொழிகள் முதலான இலக்கணச் செய்திகள் உள்ளன.

பயிற்சி - 1

**Exercise 1**

I. கீழ்க்காணும் தொடர்களைப் படிக்கவும். அவற்றைச் சரியா? தவறா? என அறிந்து கூறவும். விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Read the following and say whether they are right or wrong. For answers, press the answer button.

1 சார்பெழுத்துகள் தனித்து இயங்கும்.
(விடை: தவறு)

2 ஓர்எழுத்து தனக்குரிய மாத்திரையிலும் அதிகமாக ஒலிப்பது அளபெடை.
(விடை: சரி)

3 உயிரில் குறில் எழுத்துகள் அளபெடுக்கும்.
(விடை: தவறு)

4 மெய் எழுத்து அளபெடுப்பது ஒற்றளபெடை
(விடை: சரி)

5 பதம் இருவகைபெறும்.
(விடை: சரி)

6 பகுபதம் இரண்டு உறுப்புகளை உடையது.
(விடை: தவறு)

7 விகுதி சொல்லின் இறுதியில் இடம் பெறும்.
(விடை: சரி)

8 சாரியை பகுதிக்கும் இடைநிலைக்கும் இடையில் வரும்.
(விடை: தவறு)

9 மொழி மூன்று வகைபெறும்.
(விடை: சரி)

10 சொற்கள் தொடர்ந்து வருவதைப் பொதுமொழி என்பர்.
(விடை: தவறு)

**Exercise 2**

II. கீழ்க்காணும் கோடிட்ட இடங்களை நிரப்பச் சரியான சொற்களைக் கூறவும். விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Find the right words to fill in the blanks: For answers, press the answer button.

1 தனித்து இயங்கும் ஆற்றல் ----------- எழுத்துகளுக்கே உண்டு.

(விடை: முதல்)

2 சார்பெழுத்துகளில் ஒரு பிரிவாகிய அளபெடை என்பது --------- வகைகளை உடையது.

(விடை: இரண்டு)

3 உயிரெழுத்துகளில் --------- எழுத்துகள் அளபெடுக்கும்.

(விடை: நெடில்)

4 ஓசை குறையாத போதும் அளபெடை அமைந்தால் அதனை --------- அளபெடை என்பர்.

(விடை: இன்னிசை)

5 மாத்திரை குறைந்து ஒலிப்பது ------------ ஆகும்.

(விடை: குறுக்கம்)

6 ஐந்து என்பதில் ---------- அமைந்துள்ளது.

(விடை: ஐகாரக் குறுக்கம்)

7 ஔகாரக் குறுக்கம் மொழி ----------- மட்டும் இடம்பெறும்.

(விடை: முதலில்)

8 போலும் என்பது போன்ம் என மாறினால் -------- குறுகும்.

(விடை: மகரம்)

9 பிரிக்க முடியாத சொல் ----------- ஆகும்.

(விடை: பகாப்பதம்)

10 மொழி என்பது --------- என்பதைக் குறிக்கும்.

(விடை: சொல்)

III. கீழ்க்காணும் வினாக்களுக்குச் சரியான விடையைத் தேர்ந்தெடுத்து எழுதவும். விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Choose the right answer for the following questions. For answers, press the answer button.

1 தமிழ் இலக்கண வகைகள்

அ) இரண்டு

ஆ) மூன்று

இ) நான்கு

ஈ) ஐந்து

(விடை: **ஈ) ஐந்து**)

2 எழுத்துகளின் வகைகள்

அ) இரண்டு

ஆ) மூன்று

இ) நான்கு

ஈ) ஐந்து

(விடை: **அ) இரண்டு**)

3 சார்பெழுத்துகளின் எண்ணிக்கை

அ) பத்து

ஆ) மூன்று

இ) ஆறு

ஈ) எட்டு

(விடை: **அ) பத்து**)

4 ஓர்எழுத்து தனக்குரிய மாத்திரைஅளவிலும் அதிகமாக ஒலிப்பது

அ) குறுக்கம்

ஆ) ஆய்தம்

இ) அளபெடை

ஈ) உயிர்மெய்

(விடை: இ) அளபெடை)

5 மகரக் குறுக்கம் என்பது

அ) ம குறுகுவது

ஆ) ம் குறுகுவது

இ) மு குறுகுவது

ஈ) மி குறுகுவது

(விடை: ஆ) ம் குறுகுவது)

6 எஃகு என்பது

அ) ஒரு பொருள்

ஆ) தனிச் சொல்

இ) ஆய்தக் குறுக்கம் அமைந்த சொல்

ஈ) உயிரளபடை

(விடை: இ) ஆய்தக் குறுக்கம் அமைந்த சொல்)

7 பதவியல் என்னும் இலக்கணம் வகுத்தவர்

அ) தொல்காப்பியர்

ஆ) இளங்கோவடிகள்

இ) பவணந்தி முனிவர்

ஈ) திருவள்ளுவர்

(விடை: இ) பவணந்தி முனிவர்)

8 பகுபத உறுப்புகள்

அ) ஆறு வகைபெறும்

ஆ) மூன்று வகைபெறும்

இ) ஐந்து வகைபெறும்

ஈ) பத்து வகைபெறும்

(விடை: அ) ஆறு வகைபெறும்)

9 ஒரு சொல் தனித்து வருவது

அ) முதல் சொல்

ஆ) தனிமொழி

இ) தொடர்மொழி

ஈ) பொதுமொழி

(விடை: ஆ) தனிமொழி)

10 தாமரை என்பது

அ) மலர்

ஆ) தனிமொழி

இ) தொடர்மொழி

ஈ) பொதுமொழி

(விடை: ஈ) பொதுமொழி)

எழுத்தும் சொல்லும்

பயிற்சி - 4

**Exercise 4**

IV கீழ்க்காணும் வினாக்களுக்கு ஒருவரியில் விடை தரவும். விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Answer the following questions in a line each: For answers, press the answer button.

1 சார்பெழுத்துகள் தனித்து இயங்குமா?

(விடை: சார்பெழுத்துகள் தனித்து இயங்கா(து).)

2 உயிர்நெடில் மாத்திரைஅதிகமாக ஒலித்தால் அதன் பெயர் என்ன?

(விடை: உயிர்நெடில் மாத்திரைஅதிகமாக ஒலித்தால் அதன் பெயர் உயிரளபெடை.)

3 ஏரின்உழாஅர் - இது எவ்வகை அளபெடை?

(விடை: ஏரின்உழாஅர் என்பது இசைநிறை அளபெடை.)

4 நசை என்பது சொல்லிசை அளபெடையில் எவ்வாறு மாறிவரும்?

(விடை: நசை என்பது சொல்லிசை அளபெடையில் நசைஇ என்று மாறிவரும்.)

5 மருளும் - மருண்ம் - இவ்விரண்டில் எது மகரகுறுக்கத்திற்கு எடுத்துக்காட்டு?

(விடை: மருண்ம் என்பது மகரக்குறுக்கத்திற்கு எடுத்துக்காட்டு ஆகும்.)

6 பிரிக்கக் கூடியப் பதத்தின் பெயர் என்ன?

(விடை: பிரிக்கக் கூடியப் பதத்தின் பெயர் பகுபதம்.)

7 பகுபதத்தின் முதல் உறுப்பு எது?

(விடை: பகுபதத்தின் முதல் உறுப்பு பகுதி.)

8 தனிமொழி, தொடர்மொழி இவற்றைத் தொடர்ந்து இடம் பெறுவது எம்மொழி?

(விடை: தனிமொழி, தொடர்மொழி இவற்றைத் தொடர்ந்து இடம் பெறுவது பொதுமொழி.)

9 மலர் சூடினாள் - இது எவ்வகை மொழி?

(விடை: மலர் சூடினாள் என்பது தொடர்மொழி.)

10 தாமரை - இது தா + மரை எனப் பிரிந்து பொருள் தந்தால் எவ்வகை மொழியில் அடங்கும்?

(விடை: **தாமரை - இது தா + மரை எனப் பிரிந்து பொருள் தந்தால் இது பொதுமொழியில் அடங்கும்.**)

# 14.பெயரும் வினையும்

பெயரும் வினையும்

பொது அறிமுகம்
**General Introduction**

**அன்புள்ள மாணவர்களே! வணக்கம்**

எழுத்துகளின் சேர்க்கை சொல்லாகும். அது இலக்கண முறையில் பெயர்ச்சொல், வினைச்சொல், இடைச்சொல், உரிச்சொல் என நான்கு ஆகும்.

ஏதேனும் ஒன்றனுக்குப் பெயராய் அமையும் சொல்லைப் பெயர்ச்சொல் என்று அழைப்பர். அது காரணமின்றி ஓர் அடையாளக் குறியீடாகவோ அல்லது ஒரு காரணத்தின் அடிப்படையிலோ அமையும். அவ்வாறே ஒரு பெயரின் அல்லது பொருளின் செயலைக் குறிக்கும் சொல் வினைச்சொல் எனப்பெறும்.

பெயர்,வினை என்னும் இவ்விரு சொற்கள் தொடர்பான சில அடிப்படை இலக்கணக் கூறுகளைச் சான்றிதழ்க் கல்வி முதல் நிலைப் பாடப்பகுதிகளில் கற்றுணர்ந்தீர்கள். அவற்றின் வளர் நிலையாகப் பெயர்ச்சொல், வினைச்சொல் பற்றிய சில இலக்கணக் கூறுகள் இவ்விரண்டாம் பாடப்பகுதியில் இடம் பெறுகின்றன.

பெயரும் வினையும்

பாட அறிமுகம்
**Introduction to Lesson**

முன்னர் அறுவகைப் பெயர்ச்சொற்கள் பற்றிப் பொதுவாக அறிந்த நீங்கள் இப்பாடப் பகுப்பில் பண்புப் பெயர், தொழிற்பெயர், வினையால் அணையும் பெயர், ஆகுபெயர் முதலான வகைகளைப் பற்றிய இலக்கணங்களைக் கற்று உணர உள்ளீர்கள். அவ்வாறே வினை முற்று வகைகளான உடன்பாடு, எதிர்மறை, ஏவல், வியங்கோள் பற்றியும், முற்றெச்சம், எச்ச வாய்பாடுகள் பற்றியும் இப்பாடத் தொகுப்பில் கற்றுத் தெளியலாம்.

## ⊕ பெயர்ச்சொல் வகைகள்

எவரேனும் ஒருவருக்கு அல்லது ஏதேனும் ஒன்றனுக்குப் பெயராய் அமைவது பெயர்ச்சொல். அது **பொருட்பெயர், இடப்பெயர், காலப் பெயர், சினைப் பெயர், பண்புப் பெயர், தொழிற் பெயர்** என ஆறுவகைபெறும். இவைஅன்றி **வினையால் அணையும் பெயர், ஆகுபெயர்** என்பனவும் குறிப்பிடத்தக்கன.

## ⊕ பண்புப் பெயர்

பெயர்ச்சொற்கள் அமைவதற்கான அடிப்படைகள் ஆறு என்று கண்டோம். அவற்றுள் **பண்பு** என்பதும் ஒன்று. அதனைக் குணம் என்றும் கூறுவர்.

கீழ்க்காணும் எடுத்துக்காட்டுகளை உற்று நோக்கவும்.

நீல வானம்

**இனிப்புக்** கட்டி

குறு முனிவன்

**வட்டப்** பலகை

மேற்கண்ட எடுத்துக்காட்டுகள் ஒவ்வொன்றும் இருசொற்களின் சேர்க்கையாய் அமைந்துள்ளன. அவற்றுள் முதலில் அமைந்த சொல் பண்பைக் குறிப்பது. அப்பண்புடைய பொருள் அடுத்து இடம் பெற்றுள்ளது. எனவே, இவற்றைப் **பண்புப் பெயர்** என்பர்.

இவற்றைக் கீழ்க்காணுமாறு பட்டியலிட்டுப் புரிந்து கொள்ளலாம்.

| பொருள் | பண்பு | வகை |
|---|---|---|
| வானம் | நீலம் | நிறம் (அ) வண்ணம் |
| கட்டி | இனிப்பு | சுவை |
| முனிவன் | குறுமை | அளவு |
| வட்டம் | வட்டம் | வடிவம் |

இவ் எடுத்துக்காட்டுவழி நமக்குச் சில விளக்கங்கள் கிடைக்கின்றனை. அவை,

- பண்புப் பெயர்கள் **நிறம், சுவை, அளவு, வடிவம்** என்னும் நான்கு வகைகளாய் அமைகின்றன.
- பெரும்பாலானப் பண்புப பெயர்கள் இறுதியில் **மை விகுதி** பெற்று நிற்கும்.
- நீலம், வட்டம் என்பன போலச் சில சொற்கள் **மை விகுதி** பெறாமலும் அமைந்து பொருளின் பண்பை உணர்த்தும்.

### தொழிற் பெயர்

ஆறுவகைப் பெயர்ச்சொற்களில் தொழிற் பெயர் என்பதும் ஒன்றாகும். அது பற்றிய விளக்கத்தை அறிய, கீழ்க்காணும் எடுத்துக்காட்டுகளை கூர்ந்து நோக்குக.

பாம்பின் ஆட்டம்
நல்ல படிப்பு
மாலை விளையாட்டு
ஓவியம் வரைதல்
வில் வளைதல்

மேற்கண்ட எடுத்துக்காட்டுகளில் இரட்டைச் சொற்களாய் அமையும் ஒவ்வொன்றிலும் இரண்டாவதாக இடம்பெற்ற சொற்கள் ஒரு செயலைப் பற்றியன. செயல் என்பதைத் தொழில் என்றும் குறிப்பிடுவர். அவ்வாறு ஒரு தொழிலைக் குறிக்கும் பெயரே **தொழிற்பெயர்** எனப்பெறுகிறது.

### ⊕ தொழிற் பெயர் விகுதிகள்

தொழிற்பெயர்கள் பெரும்பான்மையும், அல் அல்லது தல் என்னும் விகுதியைப் பெற்றுவரும். உண்ணல், உறங்கல், பாடுதல், ஆடுதல் என்பவற்றை எண்ணிப்(கருதிப்)பார்க்கவும். அவற்றிற்கும் மலோக வேறு பல தொழிற் பெயர் விகுதிகளும் உண்டு. அவைபற்றி அறிந்து உணரக் கீழ்க்காணும் பட்டியல் உதவும்.

| தொழிற் பெயர் | பகுதி | விகுதி |
|---|---|---|
| உண்ணல் | உண் | அல் |
| சுடுதல் | சுடு | தல் |
| ஆட்டம் | ஆடு | அம் |
| கொலை | கொல் | ஐ |
| அழுகை | அழு | கை |
| பார்வை | பார் | வை |
| துறவு | துற | வு |
| தோல்வி | தோல் | வி |

### ⊕ தொழிற் பெயர் வகை

தொழிற் பெயர்களைப் பகுதி, விகுதியாகப் பிரித்துக்காட்டும் அட்டவணையைக் கண்டு உணர்ந்தீர்கள். அவற்றில் பகுதிகளை அடிப்படையாக வைத்துத் தொழிற் பெயரை வகைபடுத்துவர்.

| | | |
|---|---|---|
| விடுதல் | விடு + தல் | வீடு |

இவ் எடுத்துக்காட்டினை ஆழ்ந்து நோக்குக.

இதில் முதலில் உள்ளது தொழிற் பெயர் ஆகும்.

இரண்டாம் நிலையில் முதல் கூறாக உள்ள விடு என்பது தொழிற்பெயரின் பகுதி ஆகும். அதனை முதல்நிலை என்பர்.

மூன்றாம் நிலையில் உள்ள சொல் விடு என்னும் பகுதி திரிந்து **வீடு** என அமைந்துள்ளதை அறிக.

'விடு' என்பது திரிபு அடையாத முதல்நிலை ஆகும்.

எனவே, அதனை **முதல்நிலைத் தொழிற்பெயர்** என்பர்.

'வீடு' என்பதோ முதல் எழுத்து குறில், நெடிலாக (வி = வீ) திரிந்துள்ள நிலை ஆகும். எனவே அதனை **முதல்நிலைத் திரிந்த தொழிற்பெயர்** என்பர்.

## ⊕ வினையால் அணையும் பெயர்

**வளவன்** இனிமையாகப் **பாடினான்**
**பாடியவன்** பரிசு பெற்றான்.

மேற்கண்ட எடுத்துக்காட்டினை உற்று நோக்குக.

வளவன்
பாடினான்
பாடியவன்

என்னும் மூன்று சொற்களையும் எடுத்துக் கொள்க.

முதல் சொல் ஒருவனது பெயரைக் குறிப்பதாகும்.

இரண்டாம் சொல் ஒருவன் செய்த செயலைக் குறிப்பதாகும்.

மூன்றாம் சொல் அவன் என்னும் ஒருவனை அவன் செய்த செயலால் (வினையால்) சுட்டிக் காட்டுகின்றது.

இவ்வாறு, ஒருவனுக்கு அவன் செய்த செயலால் (வினையால்) ஒரு பெயர் வந்துசேருமானால் அதனையே **வினையால் அணையும் பெயர்** என்கின்றோம்.

## ⊕ தொழிற்பெயர் - வினையால் அணையும் பெயர் வேறுபாடுகள்

| தொழிற் பெயர் | வினையால் அணையும் பெயர் |
| --- | --- |
| செயலை மட்டும் குறிப்பிடும் | செயல் செய்தவரைக் குறிக்கும். |
| காலம் காட்டாது. | காலம் காட்டும். |
| படர்க்கையில் மட்டும் வரும். | தன்மை, முன்னிலை, படர்க்கை மூன்றிலும் வரும். |

## ⊕ ஆகுபெயர்

ஊர் சிரித்தது

காளையை அடக்கியக் காளை

இவ் எடுத்துக்காட்டுகள் இரண்டையும் ஆராய்ந்து நோக்குக.

இவற்றை முன்னரே கற்று இருக்கலாம்.

'ஊர் சிரித்தது' என்று படித்தவுடனேயே ஊரில் உள்ள மக்கள் சிரித்தார்கள் என்று புரிந்துகொள்கிறோம். அவ்வாறே, 'காளையை அடக்கியக் காளை' என்று படித்தவுடனேயே, முதலில் வரும் காளை என்பது மாடு என்றும், அடுத்து வரும் காளை, 'மனிதன்' என்றும் தெளிவாகவும் எளிதாகவும் புரிகிறது.

இங்கெல்லாம் சொன்னது ஒரு பெயர். நாம் புரிந்து கொண்டது வேறொரு பெயர். அவ்வாறு புரிந்து கொண்டது வேறுபெயர் என்றாலும் இரண்டிற்கும் இடையில் ஒரு தொடர்பு இருப்பதையும் எண்ணிப் பார்க்கவும்.

இவ்வாறு ஒரு பெயர், தொடர்புடைய வேறு ஒன்றிற்கு ஆகி வருவது ஆகுபெயர் ஆகும்.

## ⊕ ஆகுபெயர் வகைகள்

ஆகுபெயர் பதினாறு வகைபெறும். அவையாவன:

பொருளாகு பெயர்

இடவாகு பெயர்

காலவாகு பெயர்

சினையாகு பெயர்

பண்பாகு பெயர்

தொழிலாகு பெயர்

எண்ணல் அளவையாகு பெயர்

எடுத்தல் அளவையாகு பெயர்

முகத்தல் அளவையாகு பெயர்

நீட்டல் அளவையாகு பெயர்

சொல்லாகு பெயர்

தானியாகு பெயர்

கருவியாகு பெயர்

காரியவாகு பெயர்

கருத்தாவாகு பெயர்

உவமையாகு பெயர்

குறிப்பு: மேற்கண்ட ஆகுபெயர் வகைகள் பதினாறில் முதல் ஆறு வகைகளைப் பற்றிச் சான்றிதழ்க்கல்வி முதல் நிலையில் கற்றுணர்ந்தீர்கள். எஞ்சிய வகைகளுக்கான எடுத்துக்காட்டுகளையும், விளக்கங்களையும் இனிக் காண்போம்.

### 1. எண்ணல் அளவை ஆகுபெயர்

- நாலும் இரண்டும் சொல்லுக்கு உறுதி

பொதுவாக நான்கு, இரண்டு என்பன எண்ணிக்கையைக் குறிப்பிடுவன. ஆனால் அவை இங்கு **நாலடியார், திருக்குறள்** என்னும் இரண்டனுக்கும் ஆகிவந்தன.

**2.** எடுத்தல் அளவை ஆகுபெயர்

- ஐந்து கிலோ கொடு

'கிலோ' என்பது நிறுத்துக் கொடுக்கும் எடுத்தல் அளவினைக் குறிப்பது. ஆனால், இங்கு அது குறிப்பிட்ட எடையுள்ள ஒரு பொருளுக்கு குறித்தது.

**3.** முகத்தல் அளவை ஆகுபெயர்

- இரண்டு படி கொடு

'படி' என்பது முகந்து அளக்கும் ஓர் தமிழ் அளவுக் கருவியின் பெயர் ஆகும். ஆனால், அது இங்கு அவ்வாறு முகந்து அளக்கும் பால் அல்லது எண்ணெய்க்கு ஆகி வந்தது. ('படி' = 'இலிட்டர்' போன்றது)

**4.** நீட்டல் அளவை ஆகுபெயர்

- எட்டு முழம் கொடு

முழம் என்பது ஒரு பொருளை நீட்டி அளக்கும் தமிழ் அளவின் பெயர். ஆனால் அது இங்கு அந்த அளவுடைய துணிக்கு அல்லது பூவிற்கு ஆகி வந்தது. (முழம் = 'மீட்டர்' போன்றது)

**5.** சொல் ஆகுபெயர்

- நண்பன் என் சொல்லைக் கேட்பான்

இங்கு இடம்பெற்ற சொல் என்பது எழுத்துகளால் ஆன சொல்லைக் குறிப்பது. ஆனால் 'நண்பன் என் சொல்லைக் கேட்பான்' என்னுமிடத்தில் சொல் என்பது அறிவுரையைக் குறித்து நிற்கிறது.

**6.** தானி ஆகுபெயர்

⌖ விளக்கு முறிந்தது

இவ்வெடுத்துக்காட்டில் முறிந்துபோனது ஒளிவீசும் விளக்கின் ஒரு பகுதியாகிய **தண்டு** ஆகும்.

விளக்கு என்பது இங்குத் தானி எனப்படும். அந்தத் தானி, அதற்கு உட்பட்ட ஓர் இடத்திற்கு ஆகி வந்தது.

**7.** கருவி ஆகுபெயர்

⌖ குழல் கேட்டு மகிழ்ந்தேன்

குழல் என்பது இசையை வெளிப்படுத்தும் ஒரு கருவியாகும்.

இங்குக் குழல் கேட்டு மகிழ்ந்தேன் என்றால், அக்கருவியின் வழியாக வெளியான இசையைக் கேட்டு மகிழ்ந்தேன் என்று பொருள்.

**8.** காரியவாகு பெயர்

⌖ அலங்காரம் படித்தேன்

அலங்காரம் என்பது ஒரு காரியத்தின் பெயர். (காரியம் - செயல்)

இங்கு அலங்காரம் என்பது அக்காரியத்தைக் குறிக்காமல் ஒரு நூலைக் குறித்தது.

**9.** கருத்தா ஆகுபெயர்

⌖ கம்பனைக் கற்றேன்

இவ்வெடுத்துக்காட்டில் கம்பன் என்பது கருத்தா (ஆள்) ஆகும்.

அந்த ஆளையே கற்றல் இயலாது . மாறாக அவர் படைத்த நூலாகிய கம்பராமாயணத்தைக் கற்றேன் என்பதே பொருளாகும். கருத்தாவின் பெயர் அவர் செய்த நூலுக்கு ஆகிவிடுகிறது.

### 10. உவமை ஆகுபெயர்

- மயில் ஆடினாள்

மயில் ஆடியது என்று இருந்தால் அது பறவையைக் குறிக்கும்.

ஆனால், **மயில் ஆடினாள்** என்று வந்திருப்பதால் மயில் என்பது ஒரு பெண்ணுக்கு உவமையாக அமைவதை உணரவேண்டும்.

இவ்வாறு ஓர்உவமை பொருளுக்கு (பெண்ணுக்கு) ஆகி வருவது உவமை ஆகுபெயர்.

## வினைமுற்று வகைகள்

சொற்களைப் பெயர்ச்சொல், வினைச்சொல் என்று வகைபடுத்திக் கண்டோம். அதன் தொடர்ச்சியாய் வினைச்சொல்லிலும் பல வகைகள் உள்ளன. அவற்றுள் **உடன்பாட்டு வினை, எதிர்மறை வினை, ஏவல் வினை, வியங்கோள் வினை** முதலானவற்றைப் பற்றிய இலக்கண விளக்கங்களை இப்பாடத்தொகுப்பில் காண்போம்.

## உடன்பாட்டு - எதிர்மறை வினை முற்றுகள்

**சொல்லுக** சொல்லில் பயனுடைய; **சொல்லற்க**
சொல்லில் பயனிலாச் சொல்

என்பது **திருக்குறள்.** இப்பாடலில் தடித்த எழுத்தில் உள்ள சொற்கள் இரண்டனையும் ஆழ்ந்து நோக்குக. **சொல்லுக** என்னும் முதல் சொல் உடன்பாட்டிலும், **சொல்லற்க** என்னும் அடுத்தச் சொல் எதிர்மறையிலும் பொருள் தந்து நிற்பதை நீங்கள் உணரலாம்.

இனி, கீழ்க்காணும் அட்டவணையில் இணையிணையாக அமைந்த எடுத்துக்காட்டுகளையும் நோக்குக.

| | |
|---|---|
| சான்றோர் நல்லன செய்வார். | அறிவிலார் நல்லன செய்யார். |
| மணிமொழி மாலை தொடுத்தாள். | மணிமொழி மாலை தொடுத்திலள். |
| அறவாழி கவிதை எழுதினான். | அறவாழி கவிதை எழுதிலன். |

முதல் வரிசையில் **செய்வார், தொடுத்தாள், எழுதினான்** என்னும் மூன்று வினைமுற்றுகள் அமைந்துள்ளன. அவை ஒரு செயல் நிகழ்வதை உணர்த்துவன. எனவே, அவற்றை **உடன்பாட்டு வினை** என்பர்.

இரண்டாம் வரிசையில் **செய்யார், தொடுத்திலள், எழுதிலன்** என்னும் மூன்று **வினை முற்றுகள்** அமைந்துள்ளன. அவையாவும் செயல் நிகழாமையை வெளிப்படுத்துவன. எனவே, அவற்றை **எதிர்மறை வினை முற்றுக்கள்** என்பர்.

ஒரு செயல் நிகழ்வதைக் காட்டும் வினைமுற்று - **உடன்பாட்டு வினைமுற்று.**

ஒரு செயல் நிகழாமையைக் குறிப்பது - **எதிர்மறை வினைமுற்று.**

⊕ ஏவல் வினைமுற்று - வியங்கோள் வினைமுற்று

முதலில் ஏவல் வினைமுற்றைப் பற்றி அறிந்து கொள்ளலாம்.

| | | | |
|---|---|---|---|
| நீ போ | நீ ஆடுவாய் | நீவிர் பாடுவீர் | நீங்கள் பாடுங்கள் |

மேற்கண்ட கட்டங்களில் இடம்பெற்ற எடுத்துக்காட்டுகளை நோக்குக.

அனைத்தும் எதிரில் இருப்பவர்களை நோக்கிக் கட்டளையிடும் அமைப்பில் உள்ளன. அக்கட்டளைகள் எதிர்காலத்தில் நிகழ வேண்டியவை.

அவ்வாறு முன்னிலை இடத்தில் உள்ளவரை நோக்கி ஒரு செயலைச் செய்யுமாறு ஏவுவதே **ஏவல் வினைமுற்று** என்று உணர்க.

இனி, வியங்கோள் வினைமுற்றுப் பற்றிய விளக்கம் தெரிவோம்.

| | | | |
|---|---|---|---|
| வாழ்க | அழிக | அருளுக | செல்க |

மேற்கண்ட கட்டங்களில் இடம்பெற்ற எடுத்துக்காட்டுகளை ஆழ்ந்து நோக்குக.

அவை ஒவ்வொன்றும் ஓர் அடிப்படையில் உருவானவை. அவ்வடிப்படையைக் கீழ்க்காணும் அட்டவணை இனிது விளக்கும்.

| | |
|---|---|
| வாழ்க | வாழ்த்துதல் |
| அழிக | வைதல் |
| அருளுக | வேண்டுதல் |
| செல்க | விதித்தல் |

இவ்வாறு நான்கு பொருள் நிலைகளில் அமையும் வினைமுற்றுகளை **வியங்கோள் வினைமுற்று** என்பர். இவை யாவும் முன்னர்க் கண்ட ஏவல் வினைமுற்றைப் போல வெளிப்படையாகக் கட்டளை இடாமல் அமைந்திருப்பதை உணர்க.

### ⌖ ஏவல் - வியங்கோள் வேறுபாடு

| ஏவல் வினைமுற்று | வியங்கோள் வினைமுற்று |
|---|---|
| கட்டளையிடும் பொருளில் மட்டும் அமையும். | வாழ்த்துதல், வைதல், வேண்டுதல், விதித்தல் என்னும் நான்கு பொருள் நிலைகளில் அமையும். |
| எதிரில் இருப்பவர்களை நோக்கிக் கூறும் வகையில் முன்னிலை இடத்தில் மட்டும் வரும். | தன்மை, முன்னிலை, படர்க்கை என்னும் மூன்று இடங்களிலும் அவற்றின் மேலாக இரு திணை, ஐந்து பால்களிலும் வரும். |
| ஒருமை பன்மை வேறுபாடு உண்டு. | ஒருமை பன்மை வேறுபாடு இன்றிப் பொதுவாக அமையும். |

## ⊕ முற்றெச்சம்

வினையெச்சத்தில் ஒரு வகையாக அமைவது **முற்றெச்சம்** ஆகும்.

கீழ்க்காணும் இரண்டுத் தொடர்களையும் நோக்கு.

குமரன் மரத்தில் **ஏறினான்.**
**ஏறினான்** விழுந்தான்.

முதல் தொடரில் **ஏறினான்** என்னும் வினைச்சொல் இறுதியில் அமைந்துள்ளது. அது **வினைமுற்று** ஆகும்.

இரண்டாம் தொடரில் **ஏறினான்** என்னும் வினைமுற்று முதலில் அமைந்து, அதைத் தொடர்ந்து **விழுந்தான்** என்னும் வேறொரு வினைமுற்று அமைந்துள்ளது. அதனால் ஏறினான் என்னும் சொல் புறவடிவத்தில் வினைமுற்றாக விளங்கி, பொருள் நிலையில் ஏறி (விழுந்தான்) என்று எச்சப் பொருளையே தருகிறது.

இவ்வாறு ஓர் முற்று, **எச்சப்பொருள் தருவதையே** முற்றெச்சம் என்பர்.

## ⊕ எச்சங்கள்

கீழ்க்காணும் எடுத்துக்காட்டுகளை கூர்ந்து நோக்குக.

| 1 | 2 | 3 |
|---|---|---|
| மாணவன் **படித்தான்** | **படித்த** மாணவன் | **படித்து** முடித்தான் |

இவ் எடுத்துக்காட்டுகளில் மூன்று நிலைகளில் படித்தல் என்னும் சொல் அமைந்துள்ளது.

முதல் எடுத்துக்காட்டில் அமைந்த, **படித்தான்** என்னும் சொல் முற்றுப் பெற்றுள்ளது. எனவே அதனை **வினைமுற்று** என்பர்.

அடுத்த, இரண்டு எடுத்துக்காட்டுகளிலும் அமைந்த **படித்த, படித்து** என்னும் சொற்கள் வினையைக் குறித்தாலும் முற்றுப் பெறாமல் உள்ளன. எனவே அவற்றை **எச்சம்** என்பர். (எச்சம் - முடிவு பெறாதவை)

**படித்த** என்பது **மாணவன்** என்னும் பெயரைக் கொண்டு முடிந்ததால் **பெயரெச்சம்.**

**படித்து** என்பது **முடித்தான்** என்னும் வினையைக் கொண்டு முடிந்ததால் **வினையெச்சம்.**

### ⊕ எச்ச வாய்பாடுகள்

எச்சம் இருவகைபெறும் என்று கண்டோம். அவை இரண்டனுக்குமுரிய அடிப்படைச் சொற்களை, வாய்பாடுகள் என்று குறிப்பர். அவ்வகையில் பெயரெச்சம், வினையெச்சம் இரண்டனுக்கும் தனித்தனி வாய்பாடுகள் இருக்கின்றன.

### ⊕ பெயரெச்ச வாய்பாடுகள்

செய்த, செய்கின்ற, செய்யும் என்பன பெயரெச்சத்திற்கு அடிப்படையாக அமையும் வாய்பாடுகள் ஆகும். இவற்றை உரிய எடுத்துக்காட்டுகளுடன் பொருத்திப் பார்க்கலாம்.

| பெயரெச்சம் | வாய்பாடு |
|---|---|
| படித்த மாணவன் | செய்த |
| ஓடுகின்ற ஆறு | செய்கின்ற |
| தேடும் பொருள் | செய்யும் |

குறிப்பு: இவ்வாய்பாடுகள் மூன்று காலத்திற்கும் பொதுவானவை.

### ⊕ வினையெச்ச வாய்பாடுகள்

பெயரெச்சத்திற்கு அமைந்தது போலவே வினையெச்சத்திற்கும் வாய்பாடுகள் உள்ளன. அவை மூன்று காலத்திற்கும் தனித்தனியாக உள்ளன. அவற்றை எடுத்துக்காட்டுகளுடன் விளக்குவதாகக் கீழ்க்காணும் அட்டவணை அமைகின்றது.

| காலம் | வினையெச்ச வாய்பாடு | எடுத்துக்காட்டு |
|---|---|---|
| இறந்த காலம் | செய்து | படித்து முடித்தான் |
| | செய்பு | உண்ணுபு வந்தான் |
| | செய்யா | பெய்யாக் கொடுக்கும் |
| | செய்யு | காணுச் சென்றான் |
| | செய்தன | பசித்தென உண்டான் |
| நிகழ்காலம் | செய | மழை பெய்ய பயிர் வளர்கின்றது. |
| எதிர்காலம் | செயின் | உண்டால் உயிர் வாழலாம் |
| | செயிய | உண்பதற்காக வாங்கினான் |
| | செய்யியர் | காணியர் வந்தார் |
| | வான் | கொல்வான் முடிவு செய்தான் |
| | பான் | அலைப்பான் பிற உயிரை ஆக்குவான் |
| | பாக்கு | தருபாக்குச் செல்வான் |

பெயரும் வினையும்

பயிற்சி - 1

**Exercise 1**

I. கீழ்க்காணும் தொடர்களைப் படிக்கவும். அவற்றைச் சரியா? தவறா? என அறிந்து கூறவும். விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Read the following and say whether they are right or wrong. For answers, press the answer button.

1 ஒன்றன் செயலைக் குறிப்பது வினைச்சொல்.

(விடை: சரி)

2 பண்புப் பெயர்கள் இரண்டு வகைபெறும்.

(விடை: தவறு)

3 தொழிலைக் குறிக்கும் பெயர் தொழிற்பெயர்.

(விடை: சரி)

4 அழுகை என்பது வினைமுற்று.

(விடை: தவறு)

5 தொழிற் பெயர் காலம் காட்டாது.

(விடை: சரி)

6 கம்பனைக் கற்றேன் என்பது கருத்தா ஆகுபெயர்.

(விடை: சரி)

7 சொல்லற்க என்பது உடன்பாட்டு வினை.

(விடை: தவறு)

8 போ, வா என்பன ஏவல் வினைமுற்றுகள்.

(விடை: சரி)

9 மாணவன் படித்தான் என்பது பெயரெச்சம்.

(விடை: தவறு)

10 படித்து என்பது எதிர்கால வினையெச்சம்.

(விடை: தவறு)



## பயிற்சி - 2
## Exercise 2

II. கீழ்க்காணும் கோடிட்ட இடங்களை நிரப்பச் சரியான சொற்களைக் காண்க. விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Find the right words to fill in the blanks: For answers, press the answer button.

1 பண்பு என்பதை ------------ என்றும் கூறுவர்.

(விடை: குணம்)

2 பெரும்பாலான பண்புப்பெயர்கள் ----------- விகுதி பெறும்.

(விடை: மை)

3 அல், தல் என்பன ------------ விகுதிகள்.

(விடை: தொழிற்பெயர்)

4 ஒருவனுக்கு அவன் செய்த செயலால் அமையும் பெயர் -------- ஆகும்.

(விடை: வினையால் அணையும் பெயர்)

5 ஓர் உவமை பொருளுக்கு ஆகிவருவது ------------ ஆகும்.

(விடை: உவமையாகு பெயர்)

6 செயல் நிகழ்வதை உணர்த்துவது ----------- ஆகும்.

(விடை: உடன்பாட்டு வினை)

7 பாடுவீர் என்பது ------------- வினைமுற்று ஆகும்.

(விடை: ஏவல் வினை)

8 ஏவல் வினைமுற்றுக்கு ஒருமை, பண்மை வேறுபாடு ---------.

(விடை: உண்டு)

9 படித்த என்பது ------------- ஆகும்.

(விடை: பெயரெச்சம்)

10 செய்து என்பது ------------ வாய்பாடு ஆகும்.

(விடை: வினையெச்ச)



## பயிற்சி - 3
## Exercise 3

III. கீழ்க்காணும் வினாக்களுக்குச் சரியான விடையைத் தேர்ந்தெடுத்து எழுதவும். விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Choose the right answer for the following questions. For answers, press the answer button.

1 பெயர்ச்சொல்லின் அடிப்படைகள்

அ) ஆறு

ஆ) மூன்று

இ) நான்கு

ஈ) ஐந்து

(விடை: **அ) ஆறு**)

2 நீலவானம் என்பது

அ) நிறப்பண்பு

ஆ) சுவைப் பண்பு

இ) அளவுப் பண்பு

ஈ) வடிவப் பண்பு

(விடை: **அ) நிறப்பண்பு**)

3 வில் வளைதல் என்பது

அ) வினைமுற்று

ஆ) வினையெச்சம்

இ) ஏவல் வினை

ஈ) தொழிற்பெயர்

(விடை: **ஈ) தொழிற்பெயர்**)

4 விடு = வீடு என்பது

அ) தொழிற்பெயர்

ஆ) முதல்நிலைத் தொழிற்பெயர்

இ) முதல்நிலைத் திரிந்த தொழிற்பெயர்

ஈ) வியங்கோள் வினைமுற்று

(விடை: **இ) முதல்நிலைத் திரிந்த தொழிற்பெயர்**)

5 காலம் காட்டும் பெயர்ச்சொல்

அ) ஆகுபெயர்

ஆ) வினையால் அணையும் பெயர்

இ) தொழிற்பெயர்

ஈ) இடுகுறிப் பெயர்

(விடை: **ஆ) வினையால் அணையும் பெயர்**)

6 ஒன்றன் பெயர் வேறொன்றிற்கு ஆகிவருவது

அ) தொழிற்பெயர்

ஆ) இயற்பெயர்

இ) ஆகுபெயர்

ஈ) காரணப்பெயர்

(விடை: **இ) ஆகுபெயர்**)

7 சொல்லுக என்பது

அ) உடன்பாட்டு வினை

ஆ) எதிர்மறை வினை

இ) ஏவல் வினை

ஈ) எச்சவினை

(விடை: **ஆ) வியங்கோள் வினைமுற்று**)

8 அருளுக என்பது

அ) தொழிற் பெயர்

ஆ) வியங்கோள் வினைமுற்று

இ) ஏவல் வினைமுற்று

ஈ) எதிர்மறை வினைமுற்று

(விடை: **ஆ) வியங்கோள் வினைமுற்று**)

9 ஏவல் வினை என்பது

அ) முன்னிலையில் மட்டும் வரும்

ஆ) தன்மையில் வரும்

இ) படர்க்கையில் வரும்

ஈ) மூன்று இடங்களில் வரும்

(விடை: அ) முன்னிலையில் மட்டும் வரும்)

10 படித்த என்னும் பெயரெச்சத்திற்குரிய வாய்பாடு

அ) செய்த

ஆ) செய்கின்ற

இ) செய்யும்

ஈ) செய்யா

(விடை: அ) செய்த)

பெயரும் வினையும் பயிற்சி - 4

**Exercise 4**

IV கீழ்க்காணும் வினாக்களுக்கு ஒருவரியில் விடை தரவும். விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Answer the following questions in a line each: For answers, press the answer button.

1 பண்புப் பெயர்கள் எத்தனை வகைகளில் அமைகின்றன?

(விடை: பண்புப் பெயர்கள் ஆறு வகைகளில் அமைகின்றன.)

2 தொழிற்பெயரின் இரு நிலைகளைக் கூறுக?

(விடை: தொழிற்பெயரின் இருநிலைகள்

(1) முதல்நிலைத் தொழிற் பெயர்

(2) முதல் நிலைத் திரிந்தத் தொழிற்பெயர்.)

3 செயல் செய்தவரைக் குறிக்கும் பெயர் எது?

(விடை: செயல் செய்தவரைக் குறிக்கும் பெயர் வினையாலணையும் பெயர்.)

4 ஆகு பெயர் எத்தனை வகைபெறும்?

(விடை: ஆகுபெயர் பதினாறு வகைபெறும்.)

5 நாலும், இரண்டும் என்பன எவற்றிற்கு ஆகிவந்தன?

(விடை: நாலும், இரண்டும் என்பன முறையே நாலடியாருக்கும் திருக்குறளுக்கும் ஆகிவந்தன.)

6 செயல் நிகழாமையை வெளிப்படுத்தும் வினை எது?

(விடை: செயல் நிகழாமையை வெளிப்படுத்தும் வினை எதிர்மறை வினை.)

7 வியங்கோள் வினைமுற்று எந்தெந்தப் பொருள்களில் வரும்?

(விடை: வியங்கோள் வினைமுற்று வாழ்த்துதல், வைதல், வேண்டுதல், விதித்தல் என்னும் பொருள்களில் வரும்.)

8 எச்சம் எத்தனை வகைபெறும்?

(விடை: எச்சம் இரண்டு வகைபெறும்.)

9 பெயரெச்ச வாய்பாடுகள் எத்தனை?

(விடை: பெயரெச்ச வாய்பாடுகள் மூன்று ஆகும்.)

10 செய என்பது எதற்குரிய வாய்பாடு?

(விடை: செய என்பது நிகழ்கால வினையெச்ச வாய்பாடு ஆகும்.)

# 15. புணர்ச்சி

புணர்ச்சி

பொது அறிமுகம்
**General Introduction**

**அன்புள்ள மாணவர்களே!**

வணக்கம்

தமிழ் இலக்கணத்தின் முதல் மூன்று பிரிவுகளாகிய எழுத்து, சொல், பொருள் பற்றிய வரையறைகள் பலவற்றை முதல் மூன்று பாடங்களில் கற்று உணர்ந்தீர்கள். சொற்கள் தனித்து வருவது ஒரு நிலை. ஒன்றுக்கு மேற்பட்ட சொற்கள் சேர்ந்து (தொடர்ந்து) வருவது வேறு நிலை. அவ்வாறு சேரும்போது குறைந்த அளவாக இரண்டு சொற்கள் சேரலாம். அவ்விரு சொற்களில் நிலையாக நிற்கும் முதல் சொல்லை **நிலைமொழி** என்பர். பின்னர் வந்து சேரும் அடுத்த சொல்லை **வருமொழி** என்பர். இதனை நீங்கள் முன்னரே அறிவீர்கள். அவ்வாறு நிலைமொழியும், வருமொழியும் சேரும் சேர்க்கையில் நிகழும் மாற்றங்கள் அல்லது மாறாத அமைப்புகள் யாவும் **புணர்ச்சி** என்னும் இலக்கணம் ஆகும். அப்புணர்ச்சியின் சில அமைப்புகளை விளக்குவதாக இப்பாடம் அமைகின்றது.

புணர்ச்சி

பாட அறிமுகம்
**Introduction to Lesson**

நிலை மொழியும் வருமொழியும் சேரும் புணர்ச்சியைச் சொற்களின் பொருள் அடிப்படையில் **வேற்றுமை, அல்வழி** என வகைப்படுத்திக் காணுவர். நிலைமொழியில் இறுதி எழுத்தாக உயிரெழுத்து அமையும்போது **மையீற்றுப் பண்புப்பெயர், உடம்படுமெய், இசைப்பெயர், குற்றியலுகரம்** முதலான புணர்ச்சி வகைகளைக் குறிப்பிடுவர். அவ்வாறே நிலைமொழி இறுதியில் மெய்யெழுத்துகள் அமைவதன் ஒருவகையான ம் என்னும் மகர ஈற்றுப் புணர்ச்சி மாற்றங்கள் சில உள்ளன. இவையாவும் இப்பாடத்தில் விளக்கப் பெறும்.

## வேற்றுமைப் புணர்ச்சி

பொருளை வேறுபடுத்துவது வேற்றுமை என்பதை நீங்கள் உணர்வீர்கள். மீண்டும் அவ்விலக்கணத்தை நினைவுபடுத்திக் கொள்ளக் கீழ்க்காணும் எடுத்துக்காட்டுகளை நோக்கவும்.

| நிலை - I | நிலை - II |
|---|---|
| குமரன் அடித்தான் | திருடன் தேடினான் |
| குமரனை அடித்தான் | திருடனைத் தேடினான் |

இவ்விரு இணை எடுத்துக்காட்டுகளையும் எண்ணிப் பார்க்கவும்.

### நிலை - I

முதல் தொடரில் அடித்தவன் குமரன். அடிப்பட்டவன் வேறொருவன்.

அடுத்தத் தொடரில் குமரன் அடிப்பட்டு நிற்கிறான். அடித்தவன் வேறு யாரோ ஒருவன்.

### நிலை - II

முதல் தொடரில் திருடன் எதையோ தேடுகிறான்.

அடுத்தத் தொடரில் திருடனை யாரோ தேடுகிறார்கள்.

ஒன்றனுக்கொன்று முற்றிலுமாகப் பொருள் மாறி நிற்கிறது. இம்மாற்றத்தைச் செய்தது எது என்று புரிகிறதா?

இரண்டிலும் இரண்டாவதாக இடம் பெற்ற ஐ என்னும் உருபே பொருள் வேற்றுமைக்கு முக்கியக் காரணமாக அமைகிறது.

இவ்வாறு தொடரின் பொருளை முற்றிலுமாக வேறுபடுத்துவதே வேற்றுமை.

அவ்வாறு வேற்றுமை உருபு இடம்பெற்ற தொடரில்தான் வேற்றுமைப் புணர்ச்சி என்னும் இலக்கணமும் அமைகிறது.

வீடு + கட்டினான் = வீடு கட்டினான்

வீடு + ட் + ஐ + கட்டினான் = வீட்டைக் கட்டினான்.

இவ்விரு எடுத்துக்காட்டுகளில்,

முன்னது உருபு இன்றி அமைந்துள்ளது. பின்னது ஐ என்னும் வேற்றுமை உருபுடன் அமைந்துள்ளது.

இரண்டுமே வேற்றுமைப் புணர்ச்சிதான்.

ஐ, ஆல், கு, இன், அது, கண் என்னும் ஆறும் வேற்றுமைக்கான அடிப்படை உருபுகள் என்பதை நீங்கள் அறிவீர்கள். அவ்வுருபுகள் மறைந்தும் வரலாம். வெளிப்படையாகவும் வரலாம். எப்படி அமையினும் அது வேற்றுமைப் புணர்ச்சியே ஆகும்.

கீழுள்ள அட்டவணை, இருவகையான வேற்றுமைப் புணர்ச்சிகளையும் இனிது விளக்குகிறது.

| வேற்றுமை வகை | வேற்றுமை உருபு | உருபு மறைந்து வரும் புணர்ச்சி | உருபு வெளிப்படையாக வரும் புணர்ச்சி |
|---|---|---|---|
| 2 | ஐ | வீடு கட்டினான் | வீட்டைக் கட்டினான் |
| 3 | ஆல் | கல் அடித்தான் | கல்லால் அடித்தான் |
| 4 | கு | ஊர் சென்றான் | ஊருக்குச் சென்றான் |
| 5 | இன் | மான் தோல் | மானின் தோல் |
| 6 | அது | என் வீடு | எனது வீடு |
| 7 | கண் | மதில் பூனை | மதிலின்கண் பூனை |

குறிப்பு: முதல் வேற்றுமைக்கும் எட்டாம் வேற்றுமைக்கும் உருபு இல்லை.

### அல்வழிப் புணர்ச்சி

**அல்வழி** என்னும் சொல்லை வேற்றுமை என்பதோடு சேர்த்துப் பொருள் காணவேண்டும். வேற்றுமை அல்லாத வழி - அல்வழி ஆகும். அதாவது, வேற்றுமைப் புணர்ச்சியாக அமையாத எல்லாப் புணர்ச்சிகளும் அல்வழிப் புணர்ச்சிகளே.

கீழ்க்காணும் எடுத்துக்காட்டுகளை உற்றுக் கவனிக்க.

இரவு + பகல் = இரவு பகல்

இளமதி + பாடினாள் = இளமதி பாடினாள்

வேலா + வா = வேலா வா

வருக + வருக = வருக வருக

பார்த்த + படம் = பார்த்த படம்

மேற்கண்ட எடுத்துக்காட்டுகளில் மறைந்தோ வெளிப்படையாகவோ வேற்றுமை உருபுகள் இடம்பெறவில்லை. இவ்வாறு வேற்றுமை இன்றி அமையும் புணர்ச்சி அல்வழிப் புணர்ச்சி எனப்பெறும்.

### உயிரீற்றுப் புணர்ச்சி மாற்றங்கள்

புணர்ச்சியின் முதல்மொழி நிலைமொழி என்று கண்டோம். நிலைமொழியாக அமையும் சொல்லின் இறுதியில் உயிர் எழுத்து இடம்பெறுவதை **உயிரீற்றுப் புணர்ச்சி** என்பர்.

கீழ்வரும் பட்டியல்கள் மூன்றும் உயிரீற்றுப் புணர்ச்சியில் நிகழும் பொதுவானச் சில மாற்றங்களை இனிது விளக்குகின்றன.

### பட்டியல் – 1

| | |
|---|---|
| **பூ + கூடை = பூக்கூடை** | வருமொழிக்கு ஏற்ப வல்லினம் மிகுந்து வந்தது. |
| **மரம் + கிளை = மரக்கிளை** | நிலைமொழியில் ம் கெட்டு உயிரீறாக மாறிப் பிறகு வல்லினம் மிகுந்து வந்தது. |
| **மா + பழம் = மாம்பழம்** | வருமொழி வல்லினத்திற்கு இனமான மெல்லினம் மிகுந்தது. |

### பட்டியல் - 2

| | |
|---|---|
| அ + சிலை = அச்சிலை | அ என்னும் சுட்டின் பின் வல்லினம் மிக்கது. |
| இ + தெரு = இத்தெரு | இ என்னும் சுட்டின் பின் வல்லினம் மிக்கது. |
| எ + கடல் = எக்கடல் | எ என்னும் வினாவின் பின் வல்லினம் மிக்கது. |

### பட்டியல் – 3

| | |
|---|---|
| அ + நாடு = அந்நாடு | அ என்னும் சுட்டின் பின் மெல்லினம் மிக்கது. |
| இ + மணி = இம்மணி | இ என்னும் சுட்டின் பின் மெல்லினம் மிக்கது. |
| எ + மலை = எம்மலை | எ என்னும் வினாவின் பின் மெல்லினம் மிக்கது. |

### உடம்படுமெய்ப் புணர்ச்சி

**கலை + அரசி = கலையரசி (கலை + ய் + அரசி = கலையரசி)**

**பூ + அழகி = பூவழகி (பூ + வ் + அழகி = பூவழகி)**

மேற்கண்ட எடுத்துக்காட்டுகளை நோக்கவும்.

இவை ஒவ்வொன்றிலும் இரண்டு சொற்கள் இடம் பெற்றுள்ளன.

ஒன்று நிலைமொழி ; மற்றது வருமொழி ஆகும்.

இவை இரண்டும் சேர்ந்து நிற்பது புணர்ச்சி எனப்பெறும்.

இங்கு நிலைமொழியின் இறுதியிலும், வருமொழியின் தொடக்கத்திலும் உயிர் எழுத்துகளே இருப்பதைக் காண்க.

இவ்வாறு புணர்ச்சியில் இரண்டு இடங்களிலும் உயிர் எழுத்துகளே அமைந்தால் அவை ஒன்று சேரா. (உடன்படா)

அவற்றை உடன்படுத்தி ஒன்று சேர்க்க இடையில் புதியதாக ஒரு மெய்யெழுத்து இடம் பெறும். (கலை + ய் + அரசி = கலையரசி).

இவ்வாறு உடன்படுத்த வரும் மெய்யையே உடம்படுமெய் என்பர்.

கிளி + அழகு = கிளியழகு

தீ + அணைந்தது = தீயணைந்தது

மலை + ஓரம் = மலையோரம்

மேற்கண்ட எடுத்துக்காட்டுகளை மீண்டும் நோக்கவும்.

இவற்றில், நிலைமொழியின் இறுதியில் இ, ஈ, ஐ என்னும் மூன்று உயிர் எழுத்துகள் இடம்பெற்றுள்ளன. அதனால் ய் என்பது உடம்படுமெய்யாக வந்தது.

பா + ஆடை = பாவாடை

திரு + ஆரூர் = திருவாரூர்

பூ + இதழ் = பூவிதழ்

மேற்கண்ட எடுத்துக்காட்டுகளை உற்று நோக்கவும்.

இவற்றில் வ் என்பது உடம்படுமெய்யாக வந்துள்ளது.

இவை போல அ, ஆ, எ, உ, ஊ, ஒ, ஓ, ஔ என்னும் எட்டு உயிரெழுத்துகளும் நிலை மொழியின் இறுதியில் நின்றால் வ் உடம்படுமெய்யாகும்.

தே + இலை = தேயிலை (தே + ய் + இலை = தேயிலை)

தே + ஆரம் = தேவாரம் (தே + வ் + ஆரம் = தேவாரம்)

மேற்கண்ட எடுத்துக்காட்டுகளில் இரண்டையும் கூர்ந்து நோக்கவும்.

இவையிரண்டிலும் நிலைமொழி இறுதியில் 'ஏ' என்னும் உயிரெழுத்தே இடம் பெற்றுள்ளது.

எனினும் ஒன்றில் ய் உடம்படுமெய்யாகவும், மற்றொன்றில் வ் உடம்படுமெய்யாகவும் வந்துள்ளன.

இவ்வாறு ஏ என்னும் நிலைமொழி இறுதிக்கு மட்டுமே ய், வ் என்னும் இரண்டு மெய் எழுத்துகளும் உடம்படுமெய்யாக வருவது உண்டு.

கீழ்க்காணும் அட்டவணை உடம்படுமெய் பற்றிய விதிகளை விளக்கிக் காட்டுவதாக அமைகின்றது.

| நிலைமொழியில் இடம் பெறும் உயிர் | வருமொழியில் இடம் பெறும் உயிர் | புதிதாகத் தோன்றும் உடம்படுமெய் |
|---|---|---|
| இ, ஈ, ஐ | எந்த உயிரெழுத்தும் வரலாம். | ய் |
| அ, ஆ, எ, உ, ஊ, ஒ, ஓ, ஔ | எந்த உயிரெழுத்தும் வரலாம் | வ் |
| ஏ | எந்த உயிரெழுத்தும் வரலாம். | ய், வ் |

குற்றியலுகரப் புணர்ச்சி

ஆடு, அரசு, பாக்கு, பஞ்சு, மார்பு, அஃது என்னும் சொற்கள் குற்றியலுகரச் சொற்கள் என்பதை அறிவீர்கள். (இவை வல்லின உகரத்தை இறுதி எழுத்தாகக் கொண்டு அமைந்தச் சொற்கள் ; இயல்பான ஒலிப்பிலிருந்து குறுகி ஒலிப்பவை. ஆகவேதான் குற்றியலுகரம் எனப்பெற்றன)

இவை போன்ற குற்றியலுகரச் சொற்கள் முதல் சொல்லாக (நிலை மொழியாக) அமைந்து வருமொழியில் வேறு சொற்கள் வந்து சேரும். அதனைக் குற்றியலுகரப் புணர்ச்சி என்பர்.

கீழ்க்காணும் எடுத்துக்காட்டுளைக் கவனிப்புடன் நோக்குக.

ஆடு + இல்லை = ஆடில்லை

அரசு + இல்லை = அரசில்லை

பாக்கு + இல்லை = பாக்கில்லை

இவ் எடுத்துக்காட்டுகள் மூன்றிலும் நிலைமொழியில் குற்றியலுகரச் சொற்கள் உள்ளன. வருமொழியில் உள்ள சொற்களில் முதலில் உயிரெழுத்து வந்துள்ளது.

இவ்வாறு வருமொழி முதலில் உயிர் எழுத்து வந்தால் குற்றியலுகரத்தின் உகரம் இல்லாமல் போகும். (கெடும்)

இந்த மாற்றத்தின் அடிப்படையிலேயே மேற்கண்ட புணர்ச்சி அமைகிறது.

ஆடு + இல்லை - ஆட் + இல்லை = ஆடில்லை

என்ற முறையில் மாற்றங்கள் நிகழ்ந்துள்ளன.

## பண்புப் பெயர்ப் புணர்ச்சி

பெயர்ச்சொற்கள் ஆறு வகைபெறும் என்று கண்டோம்.

அவற்றுள் ஒன்று பண்புப் பெயர் ஆகும். அதனைக் குணப்பெயர் என்றும் கூறுவர்.

செம்மை, கருமை, சிறுமை, பெருமை, நன்மை, தீமை, இளமை, முதுமை என்பன பண்புப் பெயர்கள் ஆகும்.

இவை அனைத்தும் மை என்னும் இறுதி எழுத்தைக் கொண்டு அமைந்தவை.

எனவே, இவற்றை **மைஈற்றுப் பண்புப்** பெயர் என்பர்.

இச்சொற்கள் நிலைமொழியாக அமைந்து வருமொழியில் வேறு சொல் வந்து சேருவதைப் **பண்புப் பெயர்ப் புணர்ச்சி** என்பர்.

கீழ்க்காணும் எடுத்துக்காட்டுகளைக் கவனித்து நோக்குக.

**வெண்மை + பொங்கல் = வெண்பொங்கல்**

இந்த எடுத்துக்காட்டில் பண்புச் சொல்லின் இறுதியான மை மறைந்தது. இதனை ஈறு போதல் என்பர்.

**கருமை + அன் = கரு + அன் = கரி + அன் = கரியன்**

இந்த எடுத்துக்காட்டில் இரண்டு மாற்றங்கள் நிகழ்ந்துள்ளன. ஒன்று அடிப்படையானது. அது ஈறு போதல். அடுத்து நிகழ்ந்தது தனிப்பட்ட மாற்றம்.

பண்புச் சொல்லில் இருந்த உ- இ ஆனது (ரு- ரி ஆனது).

இதனை இடையுகரம் இ ஆதல் என்பர்.

**முதுமை + உரை = முது + உரை = மூது + உரை = மூதுரை**

இவ் எடுத்துக்காட்டில் இரண்டு மாற்றங்கள் நிகழ்ந்துள்ளன.

ஒன்று அடிப்படையானது. அது ஈறு போதல்.

அடுத்து நிகழ்ந்தது தனிப்பட்ட மாற்றம்.

பண்புச் சொல்லின் முதலில் இருந்த குறில் நெடில் ஆனது. (மு - மூ) இதனை ஆதிநீடல் என்பர்.

**பசுமை + தமிழ் = பைந்தமிழ்**

இவ் எடுத்துக்காட்டில் இரண்டு மாற்றங்கள் நிகழ்ந்துள்ளன.

ஒன்று அடிப்படையானது. அது ஈறு போதல்.

அடுத்து நிகழ்ந்தது தனிப்பட்ட மாற்றம்.

பண்புச் சொல்லின் முதலில் இருந்த அ, ஐ ஆனது. (ப - பை)

இதனை அடியகரம் ஐ ஆதல் என்பர்.

**சிறுமை + ஊர் = சிறு + ஊர் = சிற்று + ஊர் = சிற்றூர்**

மேற்கண்ட எடுத்துக்காட்டில் இரண்டு மாற்றங்கள் நிகழ்ந்துள்ளன.

ஒன்று அடிப்படையானது. அது ஈறு போதல். அடுத்து நிகழ்ந்தது தனிப்பட்ட மாற்றம்.

பண்புச் சொல்லின் இடையில் இருந்த ஒற்று இரட்டித்தது. (சிறு - சிற்று)

இதனைத் தன் ஒற்று இரட்டல் என்பர்.

**செம்மை + தமிழ் = செம் + தமிழ் = செந்தமிழ்**

இவ் எடுத்துக்காட்டில் இரண்டு மாற்றங்கள் நிகழ்ந்துள்ளன.

ஒன்று அடிப்படையானது. அது ஈறு போதல். அடுத்து நிகழ்ந்தது தனிப்பட்ட மாற்றம்.

பண்புச் சொல்லின் இடையில் இருந்த ம் - ந் ஆனது. (செம் - செந்) இதனை முன்னின்ற மெய்திரிதல் என்பர்.

**இளமை + குழவி = இள + குழவி = இள+ங்+குழவி = இளங்குழவி**

இவ் எடுத்துக்காட்டில் இரண்டு மாற்றங்கள் நிகழ்ந்துள்ளன.

ஒன்று அடிப்படையானது. அது ஈறு போதல். அடுத்து நிகழ்ந்தது தனிப்பட்ட மாற்றம்.

பண்புச் சொல்லின் இறுதியில் ங் என்னும் மெல்லினம் தோன்றியது.

இதனை இனம் மிகல் என்பர்.

### திசைப்பெயர்ப் புணர்ச்சி

கிழக்கு, மேற்கு, வடக்கு, தெற்கு என்பன முதன்மையான நான்கு திசைகளைக் குறிக்கும் சொற்கள். அவை நான்கும் நிலைமொழியாக அமைய வருமொழியில் திசைச் சொல்லோ வேறு சொல்லோ வந்து சேர்வதைத் திசைப்பெயர்ப் புணர்ச்சி என்பர்.

கீழ்க்காணும் எடுத்துக்காட்டுகளை உற்று நோக்குக.

| | |
|---|---|
| **கிழக்கு + வானம் = கீழ்வானம்** | கிழக்கு என்பதில் உள்ள க், கு இரண்டும் கெட்டு கிழ > கீழ் என மாறியது. |
| **மேற்கு + நாடு = மேல்நாடு** | மேற்கு என்பதில் உள்ள கு கெட்டு ற் > ல் என மாறியது. |

வடக்கு+ வேங்கடம் = வடவேங்கடம் — வடக்கு என்பதில் உள்ள க், கு இரண்டும் கெட்டன.

தெற்கு + குமரி = தென்குமரி — தெற்கு என்பதில் உள்ள கு கெட்டு ற் > ன் என மாறியது.

இவ்வாறு, நிலைமொழியில் அமைந்த திசைச்சொற்கள் சிற்சில மாற்றங்களைப் பெற்று வருமொழியோடு சேர்வதையே திசைப்பெயர்ப் புணர்ச்சி என்கிறோம்.

### மெய்யீற்றுப் புணர்ச்சி

கீழ்க்காணும் எடுத்துக்காட்டுகளைக் கவனிப்புடன் நோக்குக.

மேற்கண்ட எடுத்துக்காட்டுகள் அனைத்தும் நிலைமொழியின் இறுதியில் மெய்யெழுத்துகள் இடம் பெற்றுள்ளதை அறிக. அவை வருமொழியோடு சேரும்போது இயல்பாகவும் சிற்சில மாற்றங்களோடும் அமைகின்றன. மேற்சுட்டிய விளக்கப் பகுதி, நடைபெற்ற மாற்றங்களை இனிது விளக்குவதாகும்.

### மகர ஈற்றுப் புணர்ச்சி

மகரம் என்பது ம் என்னும் மெய்யெழுத்தைக் குறிப்பதாகும்.

நிலைமொழியில் இறுதியில் மகர ஈறு இடம்பெறக்கூடிய சொற்கள் எவ்வாறு புணர்ச்சியில் மாற்றங்களைப் பெறும் என்பதைக் கீழ்க்காணும் அட்டவணை விளக்குகிறது.

| மகர ஈற்றுப் புணர்ச்சி | விளக்கம் |
|---|---|
| மரம் + வேர் = மரவேர் | நிலைமொழி இறுதியில் மகரம் கெட்டது. |
| மரம் + கலம் > மர + கலம் > மரக்கலம் | நிலைமொழி இறுதியில் மகரம் கெட்டு வல்லினம் தோன்றியது. |
| காலம் + கடந்து = காலங்கடந்து | மகர ஈறு கெட்டு வருமொழி வல்லினத்திற்கு இனமான மெல்லினமாக மாறியது. |
| மரம் + அடி = மர + அடி = மர+வ் + அடி = மரவடி | நிலைமொழி இறுதி மகரம் கெட்டு உடம்படுமெய்த் தோன்றியது. |

பயிற்சி - 1

**Exercise 1**

I. கீழ்க்காணும் தொடர்களைப் படிக்கவும். அவற்றைச் சரியா? தவறா? என அறிந்து கூறவும். விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Read the following and say whether they are right or wrong. For answers, press the answer button.

1 ஒரு தொடரின் பொருளை வேறுபடுத்துவது வேற்றுமை.

(விடை: சரி)

2 உயிரும், உயிரும் உடன்படும்.

(விடை: தவறு)

3 குறுகி ஒலிக்கும் உகரம் குற்றியலிகரம் ஆகும்.

(விடை: தவறு)

4 ஈறுபோதல் என்பது பண்புப்பெயர் மாற்றங்களில் ஒன்று.

(விடை: சரி)

5 முதல் வேற்றுமைக்கு உருபு உண்டு.

(விடை: தவறு)

6 கு என்பது நான்காம் வேற்றுமை உருபு.

(விடை: சரி)

7 அகரச்சுட்டின் பின் வல்லினம் மிகாது.

(விடை: தவறு)

8 புணர்ச்சி விதிப்படி கோவில் என்பதே சரி.

(விடை: தவறு)

9 குற்றியலுகரப் புணர்ச்சியில் வருமொழியில் குற்றியலுகரம் வரும்.

(விடை: தவறு)

10 மரம் என்பது அகர ஈற்றுப் பெயர்.

(விடை: தவறு)

**Exercise 2**

II. கீழ்க்காணும் கோடிட்ட இடங்களை நிரப்பச் சரியான சொற்களைக் காண்க. விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Find the right words to fill in the blanks: For answers, press the answer button.

1 நிலைமொழியும், வருமொழியும் சேர்வது --------- ஆகும்.

(விடை: புணர்ச்சி)

2 ஆடு என்பது ----------- சொல்லாகும்.

(விடை: குற்றியலுகரம்)

3 நன்மை என்பது ----------- பெயர்.

(விடை: பண்புப்)

4 இளமை + குழவி = இளங்குழவி என்பதில் நிகழ்ந்த மாற்றம் -------- ஆகும்.

(விடை: இனம் மிகல்)

5 எட்டாம் வேற்றுமைக்கு உருபு ------------.

(விடை: இல்லை)

6 பார்த்த + படம் என்பது ----------- புணர்ச்சி ஆகும்.

(விடை: அல்வழிப்)

7 அது என்பது ----------- ஆகும்.

(விடை: ஆறாம் வேற்றுமை உருபு)

8 நிலைமொழியில் ---------- என்னும் உயிர் வரும்போது ய், வ் இரண்டும் உடம்படுமெய்யாக வரும்.

(விடை: ஏ)

9 கிழக்கு + வானம் என்பது --------- என வரும்.

(விடை: கீழ்வானம்)

10 மரம் + கலம் என்பது ------- என்று சேரும்.

(விடை: மரக்கலம்)

**Exercise 3**

III. கீழ்க்காணும் வினாக்களுக்குச் சரியான விடையைத் தேர்ந்தெடுத்து எழுதவும். விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Choose the right answer for the following questions. For answers, press the answer button.

1 ஐ என்பது

அ) சார்பெழுத்து

ஆ) ஐகாரக் குறுக்கம்

இ) இரண்டாம் வேற்றுமை உருபு

ஈ) முதல் நிலை எழுத்து

(விடை: **இ) இரண்டாம் வேற்றுமை உருபு**)

2 அல்வழிப் புணர்ச்சி என்பது

அ) வேற்றுமை வருவது

ஆ) உருபு வருவது

இ) இரு சொற்கள் சேர்வது

ஈ) வேற்றுமைப் பொருள் அல்லாதது

(விடை: **ஈ) வேற்றுமைப் பொருள் அல்லாதது**)

3 மரம் + கிளை என்பது

அ) மரம்கிளை என்று ஆகும்

ஆ) மரக்கிளை என்று ஆகும்.

இ) மரங்கிளை என்று ஆகும்.

ஈ) மரகிளை என்று ஆகும்.

(விடை: **ஆ) மரக்கிளை என்று ஆகும்.**)

4 கிளி + ய் + அழகு = கிளியழகு - எடுத்துக்காட்டில் ய் என்பது

அ) மெய்யெழுத்து

ஆ) நடு எழுத்து

இ) ஒற்றெழுத்து

ஈ) உடம்படுமெய்

(விடை: **ஈ) உடம்படுமெய்**)

5 மெய்யீற்றுப் பண்புப் பெயரில் ----------

அ) நிலைமொழி இறுதியில் மை வரும்

ஆ) நிலைமொழி இடையில் மை வரும்

இ) நிலைமொழி முதலில் மை வரும்

ஈ) வருமொழி இறுதியில் மை வரும்

(விடை: **அ) நிலைமொழி இறுதியில் மை வரும்**)

6 கரு + அன் என்பது =

அ) கருவன் என்று ஆகும்

ஆ) கரியன் என்று ஆகும்

இ) கரிஅன் என்று ஆகும்

ஈ) கருஅன் என்று ஆகும்

(விடை: **ஆ) கரியன் என்று ஆகும்**)

7 ஆதிநீடல் என்பது

அ) முதல் எழுத்துக் குறைதல்

ஆ) முதல் எழுத்து நீளுதல்

இ) ஆதி என்பது நீளுதல்

ஈ) இறுதி எழுத்து நீளுதல்

(விடை: **ஆ) முதல் எழுத்து நீளுதல்**)

8 மேற்கு + நாடு என்பது

அ) மேற்கு நாடு என்று வரும்

ஆ) மேற்கேநாடு என்று வரும்

இ) மேல்நாடு என்று வரும்

ஈ) மே நாடு என்று வரும்

(விடை: **இ) மேல்நாடு என்று வரும்**)

9 கண் + இரண்டு = கண்ணிரண்டு என்பது

அ) மெய் குறைந்துள்ளது

ஆ) இயல்பாக உள்ளது

இ) நீண்டு ஒலிக்கிறது

ஈ) மெய் இரட்டித்துள்ளது

(விடை: **ஈ) மெய் இரட்டித்துள்ளது**)

10 மரம் + அடி = மரவடி என்பதில்

அ) உடம்படுமெய் வந்துள்ளது

ஆ) உயிர் வரவில்லை

இ) நீண்டு ஒலிக்கிறது

ஈ) மெய் இரட்டித்துள்ளது

(விடை: **அ) உடம்படுமெய் வந்துள்ளது**)

புணர்ச்சி

பயிற்சி - **4**

**Exercise 4**

IV கீழ்க்காணும் வினாக்களுக்கு ஒருவரியில் விடை தரவும். விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Answer the following questions in a line each: For answers, press the answer button.

1 வேற்றுமை உருபுகள் இடம்பெறாத புணர்ச்சி எது?

(விடை: **வேற்றுமை உருபுகள் இடம்பெறாத புணர்ச்சி அல்வழிப்புணர்ச்சி.**)

2 இரண்டு உயிர்களை உடன்படுத்துவது எது?

(விடை: **இரண்டு உயிர்களை உடன்படுத்துவது உடம்படுமெய்.**)

3 ய் என்னும் மெய்யெழுத்து எந்தெந்த உயிர்களுக்கு உடம்படுமெய்யாக வரும்?

(விடை: **ய் என்னும் மெய்யெழுத்து இ, ஈ, ஐ ஆகிய உயிர்களுக்கு உடன்படுமெய்யாக வரும்.**)

4 பண்புப் பெயர்ப் புணர்ச்சி மாற்றங்கள் எத்தனை?

(விடை: **பண்புப்பெயர்ப் புணர்ச்சி மாற்றங்கள் ஏழு.**)

5 வேற்றுமை உருபுகள் எத்தனை?

(விடை: **வேற்றுமை உருபுகள் எட்டு.**)

6 ஏழாம் வேற்றுமை உருபு யாது?

(விடை: **ஏழாம் வேற்றுமை உருபு கண்.**)

7 உடம்படுமெய்யாக வரும் எழுத்துகள் எத்தனை? அவை யாவை?

(விடை: **உடம்படுமெய்யாக வரும் எழுத்துகள் இரண்டு. அவை ய், வ் என்பன.**)

8 எல்லாப் பண்புப்பெயர்ப் புணர்ச்சிகளிலும் நிகழும் அடிப்படை மாற்றம் எது?

(விடை: **எல்லாப் பண்புப்பெயர்ப் புணர்ச்சிகளிலும் நிகழும் அடிப்படை மாற்றம் ஈறு போதல்.**)

9 பண்புச் சொல்லின் முதல் எழுத்து ஐகாரமாக மாறுவதை எவ்வாறு அழைப்பர்?

(விடை: **பண்புச் சொல்லின் முதல் எழுத்து ஐகாரமாக மாறுவதை அடிஅகரம் ஐயாதல் என்று அழைப்பர்.**)

10 கிழக்கு, வடக்கு என்னும் இருவகைத் திசைகளிலும் நிகழும் பொது மாற்றம் யாது?

(விடை: **கிழக்கு, வடக்கு என்னும் இருவகைத் திசைகளிலும் நிகழும் பொது மாற்றம் க், கு இரண்டும் கெடும்.**)

# 16.யாப்பு

யாப்பு

பொது அறிமுகம்

**General Introduction**

**அன்புள்ள மாணவர்களே!**

வணக்கம்.

தமிழ் இலக்கண வகைமை வரிசையில் நான்காம் இடம் பெறுவது யாப்பு என்னும் இலக்கணக்கூறு ஆகும். கற்களை அடுக்கிக் கட்டுவதுபோல், சொற்களை அடுக்கிக் கட்டுவது செய்யுள் அல்லது பாட்டு எனப்பெறும். பாட்டுக் கட்டுகிறேன் என்று பேச்சு வழக்கிலும் சொல்லக் கேட்டிருக்கிறோம். கட்டுதல் என்பதையே யாத்தல் என்றும் கூறுவர். அதுவே இலக்கணத்தில் யாப்பு என்று கூறப்பெறுகின்றது.

இப்பாடம் யாப்புத் தொடர்பானப் பல கூடுதல் இலக்கணச் செய்திகளை உங்களுக்கு வழங்குகின்றது.

யாப்பு

பாட அறிமுகம்

**Introduction to Lesson**

செய்யுள் இயற்றுதல் அல்லது கவிதை எழுதுதல் என்பது ஓர் இனிய அனுபவமாகும். அதற்கு (நம்) மொழியின் சொற்களைப் பற்றிய அறிவும் தெளிவும் பெறுவது அடிப்படை. சொல் இலக்கணப் பாடங்கள் வழியாக அத்தகு தெளிவைப் பெற்ற நீங்கள் அச்சொற்களையே உறுப்புகளாகக் கொண்டு செய்யுள் இயற்றும் யாப்பு இலக்கணங்களை இப்பாடத்தில் அறிந்து தெளிவு பெறலாம். சொற்களின் அணிவகுப்பே செய்யுள் ஆகிறது. எனினும் அச்சொற்களைப் பல்வேறு உறுப்புகளாகப் பிரித்துக்கொண்டே யாப்பு இலக்கணத்தை வகுத்து உள்ளனர். இங்கு, செய்யுள் உறுப்புகள் பற்றியும் செய்யுளின் வகைகள் பற்றியும் கற்றுணர்வோம்.

## செய்யுள் உறுப்புகள்

பொருள் பொருந்துமாறு கட்டப்படும் செய்யுளில் உள்ளடங்கும் உறுப்புகள் பல உள்ளன. அவற்றை ஆறு பெயர்களில் பிரித்து வழங்குவர்.

எழுந்து வரும் ஒலிகளை எழுதுவது - **எழுத்து**.

எழுத்துகள் சேர்ந்து அசைக்கப்பெறுவது - **அசை**.

அசைகள் தனித்தும் சேர்ந்தும் சீராக அமைவது - **சீர்**.

முதல் சீரையும் அடுத்தச் சீரையும் சேர்த்துக் கட்டுவது - **தளை**.

பல சீர்கள் வரிசையாக அமைவது - **அடி அல்லது வரி**.

வரிகளுக்குள் அமையும் ஒழுங்குமுறை - **தொடை**.

### எழுத்து

செய்யுள் உறுப்புகளில் முதலாவதாக அமைவது எழுத்து ஆகும். முந்தையப் பாடங்களில் நாம் கற்றுணர்ந்த முதல்எழுத்து, சார்பெழுத்து, உயிர், மெய், உயிர்மெய், குறில், நெடில், சுட்டு, வினா முதலானவையே எழுத்துத் தொடர்பான இலக்கணக் கூறுகளாகும்.

### அசை

செய்யுளில் அமையும் சொற்களை ஒருவகை இலக்கணக் கட்டுக்கோப்புடன் பிரித்துக் காணும் யாப்பிலக்கணக் கூறுபாடே அசை எனப்படும்.

நிலை - 1

கீழ்க்காணும் எடுத்துக்காட்டுகளை உற்று நோக்குக.

| | |
|---|---|
| வருக > வரு / க | க என்பதை எடுத்துக்கொள்க. குறில் தனியாக வந்துள்ளது. |
| செல்க > செல் / க | செல் என்பதை எடுத்துக்கொள்க. குறில் ஒற்றுடன் சேர்ந்து வந்துள்ளது. |
| மாதா > மா / தா | மா என்பதை எடுத்துக்கொள்க. நெடில் தனியாக வந்துள்ளது. |
| மாங்காய் > மாங் / காய் | இதில் காய் என்பதை எடுத்துக் கொள்க. நெடில் ஒற்றுடன் சேர்ந்து வந்துள்ளது. |

இனி, இலக்கண வரையறையைக் காண்போம்.

குறில் தனித்து வரினும், குறில் ஒற்றுடன் சேர்ந்து வரினும், நெடில் தனித்து வரினும், நெடில் ஒற்றுடன் வரினும் அவற்றை நேரசை என்பர்.

நிலை - 2

கீழ்க்காணும் எடுத்துக்காட்டுகளைக் கூர்ந்து நோக்குக.

| | |
|---|---|
| பல | இரண்டு குறில் எழுத்துகள் இணைந்து வந்துள்ளன. |
| பலர் | இரண்டு குறில் எழுத்துகளுடன் ஒற்றெழுத்தும் சேர்ந்து வந்துள்ளன. |
| விடா | ஒரு குறிலும் ஒரு நெடிலும் சேர்ந்து வந்துள்ளன. |
| விடார் | குறில் நெடில் சேர்ந்து அவற்றுடன் ஒற்றெழுத்தும் இணைந்து வந்துள்ளன. |

இனி, இலக்கண வரையறையைக் காண்போம்.

இரு குறில் இணைந்து வரினும், இருகுறில் இணைந்து ஒற்றுடன் சேர்ந்து வரினும், குறிலும் நெடிலும் இணைந்து வரினும், குறிலும் நெடிலும் இணைந்து ஒற்றுடன் சேர்ந்து வரினும் அவற்றை நிரையசை என்பர்.

### சீர்

நேர், நிரை என்னும் இருவகை அசைகளும் தனித்தும் சேர்ந்தும் இடம் பெறுவது சீர் எனப்பெறும். அது **ஓரசைச்சீர், ஈரசைச்சீர், மூவசைச்சீர், நாலசைச் சீர்** என நான்கு வகைபெறும்.

மேலே கண்ட நேர், நிரை என்னும் இரண்டு அடிப்படை அசைகளைக் கொண்டு பல்வேறு வாய்பாடுகள் உருவாக்கப்பெறுகின்றன.

நிலை - **1**

ஓரசைச் சீர்கள் இரண்டு - (நேர், நிரை என்பவையே ஓரசைச் சீர்கள்)

நிலை - **2**

ஈரசைச் சீர்கள் நான்கு.

| அசையமைப்பு | வாய்பாடு | எடுத்துக்காட்டு |
|---|---|---|
| நேர் + நேர் | தேமா | மாதா |
| நிரை + நேர் | புளிமா | மனிதா |
| நிரை + நிரை | கருவிளம் | திருமகள் |
| நேர் + நிரை | கூவிளம் | பூமகள் |

நிலை - 3

| அசையமைப்பு | வாய்பாடு | எடுத்துக்காட்டு |
|---|---|---|
| நேர் + நேர் + நேர் | தேமாங்காய் | பார்வேந்தன் |
| நிரை + நேர் + நேர் | புளிமாங்காய் | தமிழ்வேந்தன் |
| நிரை + நிரை + நேர் | கருவிளங்காய் | தமிழ்வளவன் |
| நேர் + நிரை + நேர் | கூவிளங்காய் | பூவிழியாள் |

நிலை - 4

| அசையமைப்பு | வாய்பாடு | எடுத்துக்காட்டு |
|---|---|---|
| நேர் + நேர் + நிரை | தேமாங்கனி | நீர்வாழ்வன |
| நிரை + நேர்+ நிரை | புளிமாங்கனி | நிலம்வாழ்வன |
| நிரை + நிரை + நிரை | கருவிளங்கனி | சுவைதருபழம் |
| நேர் + நிரை + நிரை | கூவிளங்கனி | தேன்தருமலர் |

நிலை - 5 - **வெண்பாவின் இறுதியில் அமையும் வாய்பாடுகள்**

| அசையமைப்பு | வாய்பாடு |
|---|---|
| நேர் | நாள் |
| நிரை | மலர் |
| நேர்பு (நேர் நேர்) | காசு |
| நிரைபு (நிரை நேர்) | பிறப்பு |

**தளை**

யாப்பு இலக்கணத்தின் முதன்மையான உறுப்பு **தளை** ஆகும். தளை என்னும் சொல்லுக்கு, **'கட்டுதல்'** என்று பொருள். ஒரு பாடலில், முதல் சீரின் இறுதியையும், இரண்டாம் சீரின் தொடக்கத்தையும் இணைத்துக்காட்டுவதே **தளை** எனப்பெறும்.

தளை ஏழு வகைபெறும். அவற்றைக் கீழ்க்காணும் அட்டவணை இனிது விளக்கும்.

வாழ்/ க வாழ்/ க
நேர் நேர் நேர் நேர்
தே மா தே மா மா முன் நேர் நேர் ஒன்று ஆசிரியத் தளை

உத / வுக பொரு / ளை
நிரை / நிரை நிரை /
நேர் கருவிளம் புளிமா விள முன் நிரை நிரை ஒன்று ஆசிரியத் தளை

நுண் / மாண் நுழை / புலம் நேர் /
நேர் நிரை / நிரை
தே மா கருவிளம் மா முன் நிரை

நுழை / புலம் இல் /லான் நிரை / நிரை
நேர் / நேர் கருவிளம்
தேமா விள முன் நேர் இயற்சீர் வெண்டளை

வந்/தா/ரை வாழ்/விப்/போம்
நேர்/நேர்/நேர் நேர்/நேர்/நேர்
தேமாங்காய் தேமாங்காய் காய் முன் நேர் வெண்சீர்

வந்/தவர்/களை வர/வேற்/போம்
நேர்/நிரை/நிரை நிரை/நேர்/நேர்
கூவிளங்கனி புளிமாங்காய் கனி முன் நிரை ஒன்றிய வஞ்சித்தளை

வந்/தவர்/களை வாழ்/விப்/போம்
நேர்/நிரை/நிரை நேர்/நேர்/நேர்
கூவிளங்கனி தேமாங்காய் கனி முன் நேர் ஒன்றாத வஞ்சித்தளை

வந்/தா/ரை வர/வேற்/போம்

நேர்/நேர்/நேர் நிரை/நேர்/நேர்

தேமாங்காய் புளிமாங்காய் காய் முன் நிரை கலித்தளை

அடி அல்லது வரி

சீர்கள் தொடர்ந்து அமைவதை அடி என்பர். பேச்சு வழக்கில் வரி என்ற சொல்லாலும் வழங்குகிறோம்.

கீழ்க்காணும் அட்டவணை அடிகளின் வகைகளை நன்கு விளக்கும்.

| எடுத்துக்காட்டு | சீர் அளவு | அடி வகை |
|---|---|---|
| ஆறுவது சினம் | இரண்டு சீர்கள் | குறள் அடி |
| அறம் செய்ய விரும்பு | மூன்று சீர்கள் | சிந்தடி |
| அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம் | நான்கு சீர்கள் | அளவடி |
| உற்றுழி உதவும் நண்பனே உண்மை நண்பன் | ஐந்து சீர்கள் | நெடிலடி |
| அற்பமாய் முயன்றார் யாரும் அறிவினால் பழுத்தார் இல்லை | ஆறு சீர்கள் (அதற்கு மேலும் வரலாம்) | கழிநெடிலடி |

தொடை

மலர்களைத் தொடுப்பது மாலை ஆகிறது. அவ்வாறே சொற்களைத் தொடுப்பது பாடல் ஆகிறது. அடுத்தடுத்து சொற்களைச் சேர்த்து தொடுக்கப் பெறுவது தொடை எனப்பெறும்.

மோனை, எதுகை, முரண், இயைபு, அளபெடை, அந்தாதி, இரட்டை, செந்தொடை எனத் தொடை எட்டு வகைபெறும்.

| எடுத்துக்காட்டு | விளக்கம் | தொடை வகை |
|---|---|---|
| தோன்றின் புகழொடு தோன்றுக அஃதிலார்<br>தோன்றலின் தோன்றாமை நன்று | முதல் அடியிலும்<br>இரண்டாம் அடியிலும்<br>முதல் எழுத்து (தோ)<br>(ஒன்றி) ஒன்றாக வருவது | மோனை |
| அகர முதல எழுத்தெல்லாம் ஆதி<br>பகவன் முதற்றே உலகு | முதல் அடியிலும்<br>இரண்டாம் அடியிலும்<br>இரண்டாம் எழுத்து (க)<br>(ஒன்றி) ஒன்றாக வருவது | எதுகை |
| ஓதாமல் ஒருநாளும் இருக்க **வேண்டா**<br>ஒருவரையும் பொல்லாங்கு சொல்ல<br>**வேண்டா** | அடிதோறும் இறுதிச் சொல்<br>அல்லது சீர் (ஒன்றி)<br>ஒன்றாக வருவது | இயைபு |
| **முற்பகல்** செய்யின் **பிற்பகல்** விளையும் | முற்பகல், பிற்பகல்<br>என்பனப் போல<br>ஒன்றுக்கொன்று<br>மாறுபட்ட சொற்கள்<br>அமைவது | முரண் |
| கொடுப்பதூஉம் கெட்டார்க்குச் சார்வாய்<br>மற்றாங்கே எடுப்பதூஉம் எல்லாம் மழை | அடிதோறும் அளபெடை<br>சொற்கள் அமைவது. | அளபெடை |
| உலகுடன் விளங்கும் ஒளிதிகழ் அவர்மதி<br>**மதி**நலன் அழிக்கும் வளங்கெழு **முக்குடை**<br>**முக்குடை** நீழற் பொற்புடை யாசனம் | ஓரடியின் இறுதிச் சொல்<br>அடுத்த அடியின்<br>தொடக்கமாக அமைவது. | அந்தாதி |
| ஒக்குமே யொக்குமே யொக்குமே யொக்கும்<br>விளக்கினிற் சீறெரி யொக்குமே யொக்கும்<br>குளக்கொட்டிப் பூவின் நிறம் | ஓர் அடி முழுவதும் வந்த<br>சொல்லே திரும்ப வருவது. | இரட்டை |
| "ஒன்றை எண்ணின் அதுநிக ழாது வேறு<br>நிகழ விரும்புதல் இல்லை எவர்க்கும்<br>இதுவே இயற்கை ஆகும்" | மேற்கண்ட தொடை<br>அமைப்புகள் எவையும்<br>இடம் பெறாமல் அமைவது. | செந்தொடை |

தொடை விகற்பம்

தொடை என்பது ஒரு பாடலின் அடிதோறும் காண்பது. அத்தகு நயங்களை ஒரே அடியில் இடமிருந்து வலமாகக் காண்பது தொடை **விகற்பம்** எனப்பெறும்.

மோனை, எதுகை, இயைபு, அளபெடை, அந்தாதி என்பனத் தொடை விகற்பங்களில் இடம்பெறும்.

முதல் எழுத்து ஒன்றிவரும் மோனை என்னும் தொடை விகற்பத்தைக் கீழ்க்காணும் அட்டவணையில் விளக்கமாகக் காணலாம்.

| எடுத்துக்காட்டு | மோனை இடம்பெற்ற சீர்கள் | | | | தொடை விகற்பத்தின் பெயர் |
|---|---|---|---|---|---|
| | 1 | 2 | 3 | 4 | |
| வேண்டுதல் வேண்டாமை இலானடி சேர்ந்தார் | ✓ | ✓ | | ✗ | இணை |
| பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்கம் | ✓ | ✗ | ✓ | ✗ | பொழிப்பு |
| உள்ளத்தால் பொய்யாது ஒழுகின் உலகத்தார் | ✓ | ✗ | ✗ | ✓ | ஒரூஉ |
| உள்ளம் உடைமை உடைமை பொருளுடைமை | ✓ | ✓ | ✓ | ✗ | கூழை |
| வானின்று உலகம் வழங்கி வருதலால் | ✓ | ✗ | ✓ | ✓ | மேற்கதுவாய் |
| அற்றார் அழிபசி தீர்த்தல் அஃதொருவன் | ✓ | ✓ | ✗ | ✓ | கீழ்க்கதுவாய் |
| கற்க கசடற கற்பவை கற்றபின் | ✓ | ✓ | ✓ | ✓ | முற்று |

அலகிடுதல்

ஒரு பாடலை அசை பிரித்துத் தளை காண்பது அலகிடுதல் எனப் பெறும். இதனை ஓர் எடுத்துக்காட்டின் மூலம் காண்போம்.

நுண் / மாண் நுழை / புலம் இல் / லான் எழில் / நலம்

நேர் / நேர் — நிரை / நிரை — நேர் / நேர் — நிரை / நிரை

தே மா — கருவிளம் — தே மா — கருவிளம்

மண் / மாண் புனை / பா / வை அற் / று

நேர் / நேர் — நிரை / நேர் / நேர் — நேர் / நேர்

தே மா — புளிமாங்காய் — காசு

1. மா முன் நிரை - இயற்சீர் வெண்டளை

2. விள முன் நிரை - இயற்சீர் வெண்டளை

3. மா முன் நிரை - இயற்சீர் வெண்டளை

4. விள முன் நிரை - இயற்சீர் வெண்டளை

5. மா முன் நிரை - இயற்சீர் வெண்டளை

6. காய் முன் நேர் - வெண்சீர் வெண்டளை

7. அற்று - நேர்பு - காசு

**செய்யுள் வகை**

யாப்பு இலக்கணத்தில் விளக்கப்பட்ட உறுப்புகளுடன் முறையாக அமைந்த செய்யுட்களை இசை அடிப்படையிலும், இலக்கண அடிப்படையிலும் நான்காக வகைபடுத்தியுள்ளனர். அவையாவன :

1. வெண்பா

2. ஆசிரியப்பா

3. கலிப்பா

4. வஞ்சிப்பா

இவை ஒவ்வொன்றும் மேலும் பல உட்பிரிவுகளை உடையன. சில பா வகைகளை இங்குக் காண்போம்.

**வெண்பா**

கீழ்க்காணும் சான்றுகளை உற்று நோக்கவும்.

சான்று - **1**

எண்ணித் துணிக கருமம் ; துணிந்தபின்
எண்ணுவம் என்பது இழுக்கு

இது வெண்பா வகையைச் சார்ந்தது. அதன் ஒரு பிரிவான குறள் வெண்பா என்னும் வகைக்கு உரியது.

இரண்டு அடிகளை உடையது. முதல் அடியில் நான்கு சீர்களும், இரண்டாம் அடியில் மூன்று சீர்களும் இடம் பெற்றுள்ளன.

சான்று - **2**

முல்லைக்குத் தேரும் மயிலுக்குப் போர்வையும்
தொல்லை அளித்தாரைக் கேட்டறிதும் - எல்லை
நெறிமடல் பூந்தாழை நீடுநீர்ச் சேர்ப்ப !
அறிமடமும் சான்றோர்க்கு அணி.

இது வெண்பா வகையைச் சார்ந்தது.

அதன் ஒரு பிரிவான நேரிசை வெண்பா என்னும் வகைக்கு உரியது.

நான்கு அடிகளை உடையது. முதல் மூன்று அடிகளில் நான்கு சீர்களும், நான்காம் அடியில் மூன்று சீரும் கொண்டது. இரண்டாம் அடியின் இறுதியில் தனிச்சொல் பெற்று வந்துள்ளது.

சான்று - **3**

மழையின்றி மாநிலத்தார்க் கில்லை, மழையும்
தவமில்லார் இல்வழி இல்லை, தவமும்
அரசிலார் இல்வழி இல்லை, அரசனும்
இல்வாழ்வார் இல்வழி இல்

இது வெண்பா வகையைச் சார்ந்தது.

அதன் ஒரு பிரிவான **இன்னிசை வெண்பா** என்னும் வகைக்கு உரியது.

நான்கு அடிகளை உடையது. முதல் மூன்று அடிகளில் நான்கு சீர்களும், நான்காம் அடியில் மூன்று சீரும் கொண்டது. இரண்டாம் அடியின் இறுதியில் தனிச்சொல் பெறாமல் வந்துள்ளது.

(குறிப்பு : இவை தவிர சிந்தியல் வெண்பா, பஃரொடை வெண்பா என்ற வகைகளும் உள்ளன.)

### வெண்பாவின் பொது இலக்கணம்

மேற்கண்ட பாடல்களின் அடிப்படையில் வெண்பாவுக்கான பொது இலக்கணங்களை வரையறுத்து உள்ளனர். அவையாவன :

1. செப்பல் ஓசை பெற்று வருதல்.

2. ஈற்று அடி மூன்று சீர்களாகவும், ஏனைய அடிகள் நான்கு சீர்களாகவும் அமைவது.

3. இயற்சீர் வெண்டளை, வெண்சீர் வெண்டளை என்னும் தளைகளைப் பெற்று வருதல்.

4. இறுதி அடியின் இறுதிச்சீர் **நாள், மலர், காசு, பிறப்பு** என்னும் வாய்பாடுகளுள் ஒன்றைப் பெற்றுவருவது.

### ஆசிரியப்பா

வெண்பாவுக்கு அடுத்த நிலையில் இடம்பெறுவது ஆசிரியப்பா ஆகும். அது,

1. நேரிசை ஆசிரியப்பா

2. இணைக்குறள் ஆசிரியப்பா

3. நிலைமண்டில் ஆசிரியப்பா

4. அடிமறிமண்டில் ஆசிரியப்பா

என்னும் நான்கு வகைகளை உடையது.

கீழுள்ள எடுத்துக்காட்டினை ஆழ்ந்து நோக்குக.

நாடா கொன்றோ காடா கொன்றோ
அவலா கொன்றோ மிசையா கொன்றோ
எவ்வழி நல்லவ ராடவர்
அவ்வழி நல்லை வாழிய நிலனே

இப்பாடல் ஆசிரியப்பாவின் இலக்கணப்படி அமைந்தது. இது நேரிசை ஆசிரியப்பா ஆகும்.

பாடலின் ஈற்றடிக்கு முன்னுள்ள அடி மூன்று சீர்களைப் பெற்று வந்துள்ளது.

மற்ற எல்லா அடிகளும் நான்கு சீர்களைப் பெற்று வந்துள்ளன.

ஈற்றடியின் இறுதிச்சீர் 'ஏ' என ஏகாரம் பெற்று முடிந்துள்ளது.

இவையாவும் ஆசிரியப்பாவின் அமைப்புகள் ஆகும்.

**ஆசிரியப்பாவின் பொது இலக்கணம்**

மேற்கண்ட பாடலின் அடிப்படையிலும் பொதுவாகவும் ஆசிரியப்பாவிற்கான பொது இலக்கணங்களை வரையறுத்து உள்ளனர். அவையாவன :

1. அகவல் ஓசை பெற்று வரும்.

2. அடிதோறும் நான்கு சீர்களைப் பெற்றுவரும்.

3. ஈற்று அயலடி மூன்று சீர்களைப் பெற்றுவரும்.

4. ஈற்றுச்சீர் ஏகாரம் பெற்று முடியும்.

5. ஆசிரியத் தளையும் சில சமயம் பிற தளைகளும் இடம்பெறும்.

யாப்பு

பயிற்சி - 1

**Exercise 1**

I. கீழ்க்காணும் தொடர்களைப் படிக்கவும். அவற்றைச் சரியா? தவறா? என அறிந்து கூறவும். விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Read the following and say whether they are right or wrong. For answers, press the answer button.

1 கட்டுதல் என்பதையே யாத்தல் என்று கூறுவர்.

(விடை: சரி)

2 குறில் ஒற்றடுத்து வருவது நிரையசை.

(விடை: தவறு)

3 பல என்பது நிரையசை.

(விடை: சரி)

4 சீர்கள் பத்து வகைபெறும்.

(விடை: தவறு)

5 நேர், நேர், நேர் என்பதற்கான வாய்பாடு தேமாங்காய் ஆகும்.

(விடை: சரி)

6 தளை ஐந்து வகைபெறும்.

(விடை: தவறு)

7 ஆறு சீர்களுக்கும் மேற்பட்டு வருவது கழிநெடிலடி ஆகும்.

(விடை: சரி)

8 முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும் என்பதில் அந்தாதித் தொடை அமைந்துள்ளது.

(விடை: தவறு)

9 தொடை விகற்பம் என்பது அடுத்தடுத்த வரிகளில் பார்ப்பது.

(விடை: தவறு)

10 வெண்பாவிற்கு உரியது அகவல் ஓசை ஆகும்.

(விடை: தவறு)

II. கீழ்க்காணும் கோடிட்ட இடங்களை நிரப்பச் சரியான சொற்களைக் காண்க. விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Find the right words to fill in the blanks: For answers, press the answer button.

1 எழுத்துகள் சேர்ந்து அசைக்கப்பெறுவது --------- ஆகும்.

(விடை: அசை)

2 அடி என்பதன் மறுபெயர் -------- ஆகும்.

(விடை: வரி)

3 நெடில் தனித்து வருவது -------- ஆகும்.

(விடை: நேரசை)

4 விடா என்பது ---------- ஆகும்.

(விடை: நிரையசை)

5 நாள், மலர் என்பன ---------- இறுதியில் அமையும் வாய்பாடுகள்.

(விடை: வெண்பா)

6 முதல் சீரின் இறுதியையும், இரண்டாம் சீரின் --------- இணைத்துக் கட்டுவதே தளை.

(விடை: தொடக்கத்தையும்)

7 மா முன் நேர் வருவது -------- ஆகும்.

(விடை: நேரொன்றிய ஆசிரியத் தளை)

8 அறம் செய்ய விரும்பு என்பது --------- அடி வகை ஆகும்.

(விடை: சிந்தடி)

9 செய்யுளில் இறுதி ஒன்றி வருவது ----------- ஆகும்.

(விடை: இயைபு)

10 தனிச்சொல் பெறாமல் வருவது -------- ஆகும்.

(விடை: இன்னிசை வெண்பா)

III. கீழ்க்காணும் வினாக்களுக்குச் சரியான விடையைத் தேர்ந்தெடுத்து எழுதவும். விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Choose the right answer for the following questions. For answers, press the answer button.

1 பாட்டுக் கட்டுகிறேன் என்பது

அ) பேச்சு வழக்கு

ஆ) இலக்கிய வழக்கு

இ) பொய் வழக்கு

ஈ) கவிதை வழக்கு

(விடை: அ) பேச்சு வழக்கு)

2 செய்யுள் உறுப்புகள்

அ) ஐந்து

ஆ) ஆறு

இ) ஏழு

ஈ) எட்டு

(விடை: ஆ) ஆறு)

3 அடிப்படை அசை வகைகள்

அ) ஐந்து

ஆ) நான்கு

இ) மூன்று

ஈ) இரண்டு

(விடை: ஈ) இரண்டு)

4 ஈரசைச் சீர்கள் மொத்தம்

அ) இரண்டு

ஆ) மூன்று

இ) நான்கு

ஈ) ஐந்து

(விடை: இ) நான்கு)

5 புளிமா என்பது

அ) நிரையசை

ஆ) தளை

இ) வாய்பாடு

ஈ) தொடை விகற்பம்

(விடை: இ) வாய்பாடு)

6 நிரை, நேர், நேர் என்பதற்கான வாய்பாடு

அ) தேமாங்காய்

ஆ) புளிமாங்காய்

இ) கருவிளங்காய்

ஈ) கூவிளங்காய்

(விடை: ஆ) புளிமாங்காய்)

7 வெண்பாவின் இறுதியில் அமையும் வாய்பாடுகள்

அ) நான்கு

ஆ) ஐந்து

இ) ஆறு

ஈ) ஏழு

(விடை: அ) நான்கு)

8 ஆறுவது சினம், என்பது

அ) நெடில் அடி

ஆ) அளவடி

இ) சிந்தடி

ஈ) குறளடி

(விடை: ஈ) குறளடி)

9 முதல் எழுத்துகள் ஒன்றி வருவது

அ) எதுகை

ஆ) முரண்

இ) மோனை

ஈ) இயைபு

(விடை: இ) மோனை)

10 குறள் வெண்பா என்பது

அ) ஐந்து வரிகளை உடையது

ஆ) நான்கு வரிகளை உடையது

இ) மூன்று வரிகளை உடையது

ஈ) இரண்டு வரிகளை உடையது

(விடை: **ஈ) இரண்டு வரிகளை உடையது**)

யாப்பு

பயிற்சி - 4

**Exercise 4**

IV கீழ்க்காணும் வினாக்களுக்கு ஒருவரியில் விடை தரவும். விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Answer the following questions in a line each: For answers, press the answer button.

1 தமிழின் நான்காவது இலக்கணக் கூறு எது?

(விடை: **தமிழின் நான்காவது இலக்கணக் கூறு யாப்பிலக்கணம்.**)

2 குறில் தனித்து வருவது எவ்வகை அசை

(விடை: **குறில் தனித்து வருவது நேரசை.**)

3 இரு குறில் இணைந்து வந்தால் எவ்வகை அசை?

(விடை: **இரு குறில் இணைந்து வந்தால் நிரையசை.**)

4 ஓரசைச் சீர்கள் எத்தனை?

(விடை: **ஓரசைச் சீர்கள் இரண்டு.**)

5 கனிச்சீர்கள் எத்தனை?

(விடை: **கனிச்சீர்கள் நான்கு.**)

6 வெண்பாவின் இறுதியில் அமையும் வாய்பாடுகள் எத்தனை?

(விடை: **வெண்பாவின் இறுதியில் அமையும் வாய்பாடுகள் நான்கு.**)

7 நெடிலடி என்றால் என்ன?

(விடை: **நெடிலடி என்பது ஐந்து சீர்கள்.**)

8 இரண்டாம் எழுத்து ஒன்றி வருவது எவ்வகைத் தொடை?

(விடை: **இரண்டாம் எழுத்து ஒன்றி வருவது எதுகைத் தொடை.**)

9 பாடலில் ஓரடியில் இடமிருந்து வலமாகக் காண்பது எவ்வகை இலக்கணம்?

(விடை: **பாடலின் ஓரடியில் இடமிருந்து வலமாகக் காண்பது தொடை விகற்பம்**)

10 ஆசிரியப்பாவுக்கு உரிய ஓசை எது?

(விடை: **ஆசிரியப்பாவுக்கு உரிய ஓசை அகவல் ஓசை.**)

# 17.அணி

அணி

பொது அறிமுகம்

**General Introduction**

**அன்புள்ள மாணவர்களே!**

**வணக்கம்**

எழுத்துகள் சேர்ந்து பொருள் தருவது சொல்லாகிறது. அச்சொற்களைப் பொருத்தமான முறையில் அமைத்துப் பாடுவதே செய்யுள். அச்செய்யுளுக்குரிய இலக்கணங்கள் **யாப்பு** என்னும் வகைபெறும் என்பதனை முந்தைய பாடத்தில் அறிந்தீர்கள். அவ்வாறு யாப்புநெறி முறைப்படி உருவாக்கப்பெறும் பாடல்களில் புலவர்கள் இடையிடையே தங்கள் கற்பனைத் திறனை இணைத்துப் பாடுவர். அதன் மூலம் பாடலுக்கு அழகைச் சேர்ப்பர். அது கருத்தை எளிதில் புரிந்து கொள்ளவும் உதவும். ஆடவரும், பெண்டிரும், அணியும் அணிகலன்கள் அவரவர்க்கு அழகைச் சேர்ப்பன. அவ்வாறே செய்யுளிலும் புலவர்கள் சேர்க்கும் அழகுக்கு **அணி** என்று பெயர். அத்தகு அணி இலக்கணத்தை இப்பாடப்பகுதியில் கண்டு உணரலாம்.

அணி

பாட அறிமுகம்

**Introduction to Lesson**

செய்யுள் இயற்றும் புலவர்கள் பொருளை எளிதில் புரிய வைப்பதற்காகவும் அழகுச் சேர்ப்பதற்காகவும் **அணி** என்னும் அமைப்பினைப் பயன்படுத்துகின்றனர். அவ்வாறு தமிழில் பழங்காலந் தொட்டுப் புலவர்கள் அமைத்திருக்கும் **அணி** அழகுகளைத் தொகுத்து வகைபடுத்தி இலக்கணம் வகுத்துள்ளனர். அதற்கு **அலங்காரம் அல்லது அணி** என்று பெயர். **தண்டி அலங்காரம், மாறன் அலங்காரம்** முதலானவை குறிப்பிடத்தக்கவை. அத்தகு அணி இலக்கண நூல்களின் அடிப்படையில் நிரல்நிறை, பின்வருநிலை, ஏகதேச உருவகம், தற்குறிப்பேற்றம், இல்பொருள் உவமை, வஞ்சப்புகழ்ச்சி, பிறிதுமொழிதல், இரட்டுறமொழிதல், வேற்றுமை என்னும் **அணி** நலன்களைப் பற்றிய இலக்கணங்களை இனிக் காண்போம்.

வகை - 1 : நிரல்நிறை அணி

அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது.

என்னும் திருக்குறளை நீங்கள் அறிவீர்கள்.

இப்பாடலில் முதல் வரியில் **அன்பு, அறன்** என்னும் இரண்டு சொற்கள் உள்ளன. அடுத்த வரியில் உள்ள **பண்பு, பயன்** என்னும் இரண்டு சொற்களையும் அவற்றுக்கு இணையாக நிறுத்தி(சேர்த்து)ப் பொருள் கொள்ளவேண்டும். அப்போது, **'அன்பு என்னும் பண்பும், அறம் என்னும் பயனும் உடையதே இல்வாழ்க்கை'** என்று பொருள் முழுமைப் பெறும்.

இவ்வாறு வரிசை வரிசையாகச் சொற்களை அமைத்துப் பொருள் கொள்வதை **நிரல் நிறை அணி** என்பர்.

வகை - 2 : பின்வருநிலையணி

எல்லா விளக்கும் விளக்குஅல்ல சான்றோர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு.

என்பது திருக்குறள் பாடல் ஆகும்.

இப்பாடலை உற்று நோக்குக.

விளக்கு என்னும் ஒரு சொல் தொடர்ந்து நான்கு முறை இடம்பெற்றுள்ளது. அதற்குரிய பொருளும் மாறாமல் அமைந்துள்ளது.

இவ்வாறு ஒரு சொல் தொடர்ந்து பின்வருவதை **பின்வருநிலையணி** என்பர்.

இங்கு, சொல் மட்டுமன்றி அதற்குரிய பொருளும் தொடர்ந்து வந்துள்ளது. எனவே இதனை, **சொற்பொருள் பின்வருநிலையணி** என்பர்.

பின்வருநிலையணி மூன்று வகைபெறும்.

1. சொல்லும் பொருளும் பின்வருதல் - **சொற்பொருள் பின்வருநிலையணி.**
2. சொல் மட்டும் தொடர்ந்து வருதல் - **சொல் பின்வரு நிலையணி**
3. சொற்கள் மாறி, ஆனால் பொருள் ஒன்றாக வருதல் - **பொருள் பின்வரு நிலையணி**

**வகை - 3 ஏகதேச உருவக அணி**

அன்புநாண் ஒப்புரவு கண்ணோட்டம் வாய்மையொடு
ஐந்துசால்பு ஊன்றிய தூண்.

என்பது **திருக்குறள்.**

இப்பாடலில், **அன்பு, நாணம், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மை** என்னும் ஐந்தனையும் தூண்களாக உருவகம் செய்துள்ளார். ஆனால் அவ் ஐந்து தூண்களும் தாங்கி நிற்கும் **கட்டிடம் எது** என்பதை உருவகப்படுத்தவில்லை. **சான்றாண்மை என்பதே அந்தக் கட்டிடம்** ஆகும்.

இவ்வாறு எடுத்துக்கொண்ட இரண்டு ஒப்பீடுகளில் ஒன்றை உருவகப்படுத்தி மற்றொன்றை உருவகப்படுத்தாமல் விடுவது **ஏகதேச உருவக அணி** ஆகும்.
(ஏகம் - ஒன்று, தேசம் - பக்கம்)

**வகை - 4 : தற்குறிப்பேற்ற அணி**

". . . . . . . கொடிகள் என்னும்
கைகளை நீட்டி அந்தக் கடிநகர் கமலச் செங்கண்
ஐயனை ஒல்லைவா என்று அழைப்பது போன்றது"

என்பது கம்பராமாயணத்தில் இடம்பெற்ற பாடல் பகுதி ஆகும்.

இது மிதிலை நகரத்திற்கு இராமன் சென்றதைப் பற்றிக் கூறுவதாகும்.

மிதிலை நகரத்தில் உச்சியில் பறந்த கொடிகள் கைகளை நீட்டி வருக வருக என்று இராமனை அழைப்பது போல அமைந்தன என்பது கம்பரின் கற்பனை.

காற்றில் கொடி அசைவது இயல்பானது. அந்த நிகழ்ச்சியில் கவிஞர் தன் குறிப்பை (விருப்பத்தை) ஏற்றிக் கூறியுள்ளார். எனவே இது **தற்குறிப்பேற்ற அணி** ஆகும்.

**வகை - 5 : இல்பொருள் உவமை அணி**

கீழ்க்காணும் எடுத்துக்காட்டுகளை உற்று நோக்குக.

| உவமை | உணர்த்தும் பொருள் |
|---|---|
| பிறை கவ்வி மலை நடக்கும் | யானையைப் பற்றியது |
| குன்று எழுந்து சென்றது | வீரன் சென்ற நிலை |
| திங்களுள் தீ தோன்றிற்று | குளிர்ச்சியில் வெப்பம் |
| நீருள் குவளை (மலர்) வெந்தது | குளிர்ச்சியில் வெப்பம் |

மேற்கண்ட எடுத்துக்காட்டுகள் யாவும் நடைமுறையில் இல்லாதவை. மலை நடப்பது, குளிர்ந்த நிலவில் நெருப்பு இருப்பது, தண்ணீருக்குள் வெப்பம் தோன்றுவது என்பன இல்லாத பொருள்கள் அல்லது நடக்காதச் செயல்களாகும்.

இவ்வாறு இல்லாத பொருளை எடுத்துக்காட்டாகக் கூறுவதே **இல்பொருள் உவமை அணி** ஆகும்.

**வகை - 6 : வஞ்சப் புகழ்ச்சி அணி**

"தேவர் அனையர் கயவர் அவருந்தாம்
மேவன செய்துஒழுக லான்"

இப்பாடல் அணிஅழகு உடையது.

இப்பாடலில் வஞ்சகர்கள் தேவர்களுக்கு இணையானவர்கள் என்கிறார் திருவள்ளுவர்.

இது தீயவர்களாகிய வஞ்சகர்களைப் புகழ்வதுபோல் உள்ளது. ஆனால் உண்மையில் இகழ்வதே ஆகும்.

வஞ்சகர்களும் தேவர்களைப் போலவே தன்விருப்பமாக எதையும் செய்வர் என்று ஒப்பிட்டுக் கூறியுள்ளார்.

தன்விருப்பப்படி செய்தாலும் தேவர் செயல் நன்மையைத் தரும். வஞ்சகர் செயல் தீமையைத் தரும்.

இவ்வுண்மையை உணரும்போது, வஞ்சகரைப் புகழ்ந்தது பொய் என்பது புரியவரும்.

இவ்வாறு புகழ்வதுபோலப் பழித்துள்ளதால் இதனை **வஞ்சப் புகழ்ச்சி அணி** என்பர்.

பழிப்பதுபோலப் புகழ்வதும் **வஞ்சப் புகழ்ச்சி அணி**யின் இன்னொரு பிரிவு ஆகும்.

பாரி பாரி என்று பல ஏத்தி
ஒருவர் புகழ்வர் செந்நாப் புலவர்
பாரி ஒருவனும் அல்லன்
மாரியும் உண்டு ஈண்டு உலகு புரப்பதுவே.

என்பது புறநானூற்றுப் பாடல்.

இப்பாடல் பாரி வள்ளலுடன் மாரி என்னும் மழையை ஒப்பிடுகிறது.

பாரியை மட்டும் புகழுகிறார்களே; மாரியும் உதவுகிறதே என்பது கருத்து.

மாரி இருக்கும்போது பாரி மட்டுமே வள்ளல் என்பது பொருந்தாது என்பதாக இப்பாடல் அமைந்துள்ளது.

மேலோட்டமாக நோக்கும்போது ஒருவகை இகழ்ச்சிக் குறிப்புத் தோன்றலாம். ஆனால் பாரியின் கொடைத்தன்மைக்கு உலகில் ஒப்பிடக்கூடிய ஒரே பொருள் வானத்து மழைதான் என்று உணரும்போது அதுவும் ஒருவகைப் புகழ்ச்சியாகவே அமைகிறது.

இவ்வாறு **பழிப்பதுபோலப் புகழ்வதும் வஞ்சப்புகழ்ச்சி அணியே ஆகும்.**

**வகை - 7 : பிறிதுமொழிதல் அணி**

பீலிபெய் சாகாடும் அச்சிறும் அப்பண்டம்
சால மிகுத்துப் பெயின்.

என்பது திருவள்ளுவர் கூறும் அறிவுரை.

இப்பாடலில் அவர் ஒரு காட்சியை விளக்கி உள்ளார்.

மிக மென்மையான மயில் தோகை வண்டியில் ஏற்றப்பெறுகிறது.

மயில் தோகை மென்மையானதுதானே என்று கருதி அளவுக்கு அதிகமாக ஏற்றினால் என்ன ஆகும்? வண்டியின் அச்சு முறிந்துவிடும்.

இதுவே, புலவர் காட்டும் காட்சியும் கருத்தும் ஆகும்.

ஆனால், இந்த எடுத்துக்காட்டு உணர்த்தும் உண்மை வேறொன்றாகும்.

"மெலியவர் பலர் சேர்ந்தால் வலிமையானவரைக்கூட வீழ்த்திவிடுவர்" என்பதே இப்பாடல் உணர்த்தவந்த பிறிதோர் உண்மை ஆகும்.

இவ்வாறு உணர்த்தவந்த உண்மையை வெளிப்படையாகக் கூறாமல், உவமையை மட்டும் உணர்த்திச் சொல்வது **பிறிதுமொழிதல் அணி** எனப்பெறும்.

வகை - 8 : இரட்டுற மொழிதல் அணி

கீழ்க்காணும் பாடல் பகுதியை உற்று நோக்குக.

"ஆடிக்குடத்து அடையும்; ஆடும்போதே
இரையும்; மூடித் திறக்கின் முகம் காட்டும் . . . . ."

இவ்வரிகளைப் படித்து, பாம்பு - எள் என்னும் இரண்டனுக்கும் உரியவாறு பொருள் காணலாம்.

| பாடல் பகுதி | பாம்புக்கு ஏற்பப் பொருள் காணல் | எள்ளுக்கு ஏற்பப் பொருள்காணல் |
|---|---|---|
| ஆடிக்குடத்து அடையும் | படமெடுத்து ஆடும். பிறகு குடத்துள் அடங்கிக் கிடக்கும். | செக்கில் ஆட்டப் பெற்று எண்ணெய்யாகிக் குடத்தில் நிறையும். |
| ஆடும்போதே இரையும் | படமெடுத்து ஆடும் போது ஒலிஎழுப்பும். | செக்கில் ஆட்டும் போது ஓசை உண்டாகும். |
| மூடித்திறக்கின் முகம் காட்டும் | மூடியக் குடத்தைத் திறந்தால் பாம்பு தன் முகத்தைக் காட்டும் | மூடிய எண்ணெய்க் குடத்தைத் திறந்தால் அதில் நம் முகத்தைக் காணலாம். |

இவ்வாறு ஒரே பாடலின் சொற்கள் இரண்டு வகையாகப் பொருள் கொள்ளும்படி அமைவதை இரட்டுற மொழிதல் அணி என்பர்.

வகை - 9 : வேற்றுமை அணி

தீயினால் சுட்டபுண் உள்ளாறும் ஆறாதே
நாவினால் சுட்ட வடு.

என்பது நாம் எல்லாரும் அறிந்த நல்ல திருக்குறள்.

இதில் தீயினால் சுடுவது, நாவினால் கடுமையாகப் பேசுவது என்னும் இரண்டு செயல்களும் ஒப்பிடப் பெற்றுள்ளன. அதேசமயம் அவற்றுக்குள்ளே வேற்றுமையும் காட்டப் பெற்றுள்ளது.

| பொருள் | ஒற்றுமை | வேற்றுமை |
|---|---|---|
| தீ | சுடுதல் | உள்ளே புண் ஆறும்<br>வெளியே வடு இருக்கும் |
| நாக்கு | சுடுதல் | உள்ளே துன்பம் இருக்கும்<br>வெளியே வடு இருக்காது |

இங்கு எடுத்துக்கொண்ட பொருள்கள் இரண்டுக்கும் **சுடுதல்** என்பது ஒற்றுமைக் கூறாகவும், உள்ளும் வெளியும் அமையும் நிலை வேற்றுமையாகவும் அமைந்துள்ளன.

இவ்வாறு அடிப்படை ஒற்றுமையுடன் - ஆனால் வேற்றுமையில் அமைவதை விளக்குவதே **வேற்றுமை அணி** ஆகும்.

அணி

**பயிற்சி - 1**

**Exercise 1**

I. கீழ்க்காணும் தொடர்களைப் படிக்கவும். அவற்றைச் சரியா? தவறா? என அறிந்து கூறவும். விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Read the following and say whether they are right or wrong. For answers, press the answer button.

1 மாறன் அலங்காரம் அணி இலக்கண நூல்.
(விடை: சரி)

2 வந்த சொல்லே திரும்ப வருவது நிரல்நிறை அணி.
(விடை: **தவறு**)

3 சான்றாண்மையே ஐந்து தூண்களால் தாங்கப்பெறும் கட்டிடம்.
(விடை: சரி)

4 தன்குறிப்பைக் கவிஞன் ஏற்றுவது பிறிதுமொழிதல் அணி.
(விடை: **தவறு**)

5 குன்று எழுந்து சென்றதாகக் கூறுவது இல்பொருள் உவமை அணி.
(விடை: சரி)

6 பாரியை மாரியோடு ஒப்பிட்டது பழிப்பது போலப் புகழ்வது.

(விடை: சரி)

7 பிறிதுமொழிதலில் உண்மைக் கருத்தும் உரைக்கப்படும்.

(விடை: தவறு)

8 இரண்டில் ஒன்றைக் கூறுவது இரட்டுற மொழிதல்.

(விடை: தவறு)

9 தீப்புண்ணுக்கு வடு உண்டு. கடுஞ்சொல்லுக்கு வடு இல்லை.

(விடை: சரி)

10 பெருந்திணை என்பது அன்புடைக் காதல்.

(விடை: தவறு)

அணி

பயிற்சி - 2

**Exercise 2**

II. கீழ்க்காணும் கோடிட்ட இடங்களை நிரப்பச் சரியான சொற்களைக் காண்க. விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Find the right words to fill in the blanks: For answers, press the answer button.

1 தண்டியலங்காரம் என்பது ------------- நூல் ஆகும்.

(விடை: அணி இலக்கண)

2 சான்றோர்க்குப் --------- விளக்கே விளக்கு.

(விடை: பொய்யா)

3 சொல் மட்டும் திரும்பத் திரும்ப வருவது ------- ஆகும்.

(விடை: சொல் பின்வரு நிலையணி)

4 சான்றாண்மையைக் கட்டிடமாகக் கூறாதது ---------- ஆகும்.

(விடை: ஏகதேச உருவகம்)

5 கொடிகள் ----------- போல இருந்தன என்பது தற்குறிப்பேற்றம் ஆகும்.

(விடை: கைகளைப்)

6 தண்ணீருக்குள் பூ வெந்து போனது என்பது ---------- உவமை ஆகும்.

(விடை: இல்பொருள்)

7 தேவர் அனையர் கயவர் என்பது -------- ஆகும்.

(விடை: வஞ்சப்புகழ்ச்சி அணி)

8 பிறிதுமொழிதல் அணியில் உணர்த்தவரும் ----------------க் கூறமாட்டார்கள்.

(விடை: உண்மையை)

9 ஒரு சொல் மூலம் -------- பொருள் தருவதே இரட்டுறமொழிதல்.

(விடை: இரு)

10 தீயும், கடுஞ்சொல்லும் ------------.

(விடை: சுடும்.)

அணி

பயிற்சி - 3

**Exercise 3**

III. கீழ்க்காணும் வினாக்களுக்குச் சரியான விடையைத் தேர்ந்தெடுத்து எழுதவும். விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Choose the right answer for the following questions. For answers, press the answer button.

1 அணி என்பதன் வேறுபெயர்

அ) அலங்காரம்

ஆ) அற்புதம்

இ) இலக்கணம்

ஈ) யாப்பு

(விடை: அ) அலங்காரம்)

2 அன்புக்கும் அறத்திற்கும் நிரல்

அ) அறம் அன்பு

ஆ) அன்பு பண்பு

இ) அறம் பயன்

ஈ) பண்பு பயன்

(விடை: ஈ) பண்பு பயன்)

3 பின்வரு நிலை அணி

அ) இரண்டு வகைபெறும்.

ஆ) மூன்று வகைபெறும்.

இ) நான்கு வகைபெறும்.

ஈ) ஐந்து வகைபெறும்.

(விடை: ஆ) மூன்று வகைபெறும்)

4 ஏகதேசம் என்றால்

அ) மறுபக்கம்

ஆ) இருபக்கம்

இ) அடுத்த பக்கம்

ஈ) ஒரே பக்கம்

(விடை: ஈ) ஒரே பக்கம்)

5 சான்றாண்மையின் தூண்கள்

அ) மூன்று

ஆ) நான்கு

இ) ஐந்து

ஈ) ஆறு

(விடை: இ) ஐந்து)

6 காற்றில் கொடி அசைவது

அ) செயற்கை

ஆ) இயற்கை

இ) கற்பனை

ஈ) பொய்யானது

(விடை: ஆ) இயற்கை)

7 பிறை கவ்வி மலை நடக்கும் என்பது

அ) ஏகதேச உருவக அணி

ஆ) பிறிதுமொழிதல் அணி

இ) தற்குறிப்பு ஏற்ற அணி

ஈ) இல் பொருள் உவமையணி

(விடை: ஈ) இல்பொருள் உவமையணி)

8 வஞ்சப்புகழ்ச்சி என்பது

அ) நேருக்கு நேர் புகழ்வது

ஆ) புகழ்வது போல இகழ்வது

இ) புகழ்ந்தால் மகிழ்வது

ஈ) புகழ்ந்தால் வருந்துவது

(விடை: ஆ) புகழ்வது போல இகழ்வது)

9 உண்மையைக் கூறாமல் உவமையை மட்டும் கூறுவது

அ) பிறிதுமொழிதல் அணி

ஆ) உருவக அணி

இ) தற்குறிப்பேற்ற அணி

ஈ) இல் பொருள் உவமையணி

(விடை: அ) பிறிதுமொழிதல் அணி)

10 வேற்றுமை அணி என்பது

அ) ஒன்றை மட்டும் கூறுவது

ஆ) ஒன்றுபடுத்தி பிறகு வேறுபடுத்துவது

இ) ஒன்றை ஒன்று வேறுபடுத்துவது

ஈ) வேற்றுமையை மட்டும் கூறுவது

(விடை: ஆ) ஒன்றுபடுத்திப் பிறகு வேறுபடுத்துவது)

அணி

பயிற்சி - 4

**Exercise 4**

IV கீழ்க்காணும் வினாக்களுக்கு ஒருவரியில் விடை தரவும். விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Answer the following questions in a line each: For answers, press the answer button.

1 நிரல் நிறை என்றால் என்ன?

(விடை: சொற்களை வரிசை வரிசையாக வைத்துப் பொருள் காண்பது நிரல் நிறை எனப் பெறும்.)

2 சொற்கள் மாறி பொருள் மட்டும் ஒன்றாக வருவது எவ்வகையணி?

(விடை: சொற்கள் மாறி பொருள் மட்டும் ஒன்றாக வருவது பொருள் பின்வரு நிலையணி.)

3 ஒன்றை மட்டும் உருவகப்படுத்துவது எது?

(விடை: ஒன்றை மட்டும் உருவகப்படுத்துவது ஏகதேச உருவக அணியாகும்.)

4 தற்குறிப்பேற்றம் என்றால் என்ன?

(விடை: கவிஞன் தன் குறிப்பை ஏற்றிக் கூறுவது தற்குறிப்பேற்றம் எனப்பெறும்.)

5 இல்லாததை ஒப்புமை ஆக்குவது எவ்வகை அணி?

(விடை: இல்லாததை ஒப்புமை ஆக்குவது இல்பொருள் உவமை அணி.)

6 வஞ்சப் புகழ்ச்சி அணி எத்தனை வகைபெறும்?

(விடை: வஞ்சப் புகழ்ச்சி அணி இரு வகைபெறும்.)

7 பிறிதுமொழிதலில் எதனைக் கூறுவர்?

(விடை: பிறிதுமொழிதலில் உவமையை மட்டும் கூறுவர்.)

8 ஆடிக் குடத்து அடைபவை எவை?

(விடை: ஆடிக் குடத்து அடைபவை பாம்பும் எள்ளும்.)

9 இரட்டுற மொழிதல் என்றால் என்ன?

(விடை: ஒரு சொல் வழியாக இருபொருள் தருவது இரட்டுற மொழிதல்ஆகும்.)

10 முதலில் ஒற்றுமைப்படுத்திப் பிறகு வேற்றுமைப்படுத்துவது எவ்வகை அணி?

(விடை: முதலில் ஒற்றுமைப்படுத்திப் பிறகு வேற்றுமைப்படுத்துவது வேற்றுமை அணி ஆகும்.)

# 18.பொருள்

பொருள்

பொது அறிமுகம்

**General Introduction**

**அன்புள்ள மாணவர்களே! வணக்கம்**

எழுத்து, சொல், பொருள் என்னும் படிநிலையில் அமைந்த தமிழ் இலக்கணம் அறிவியல் சார்ந்த படிநிலை வளர்ச்சியை உடையது. ஓர் எழுத்தே சொல்லாகலாம். ஒன்றனுக்கு மேற்பட்ட எழுத்துகள் சேர்ந்து சொல் அமையலாம். அவ்வாறு உருவாகும் ஒவ்வொரு சொல்லுக்கும் ஒரு பொருள் உண்டு. அதனைச் சொற்பொருள் என்பர். அது அடிப்படை நிலை. அதன் மேலாகத் தமிழில் சொற்களைக்கொண்டு பாடப்பெறும் செய்யுளின் பாடுபொருளையே (Content) பொருள் இலக்கணமாகக் கூறுவர். அது அகப்பொருள், புறப்பொருள் என்னும் இரு வகைகளில் அமையும்.

பொருள்

பாட அறிமுகம்

**Introduction to Lesson**

இப்பாடம் சொற்பொருள், பாடுபொருள் என்னும் இரு வகையானப் பொருள் இலக்கணங்களையும் விளக்குவதாக அமைகின்றது. முற்பகுதி சொற்களுக்கான பொருள் காண்பதில் அமையும் குற்றங்கள் (வழு); அவற்றை நீக்குவது அல்லது ஏற்பது; சொற்கள் குறிப்பாகவும், வெளிப்படையாகவும் பொருள் தரும் நிலை; அடுக்கி நின்று பொருள் தருதல்; ஒரு பொருளுக்கே பல சொற்கள் அமைதல்; வினாவிலும், விடையிலும் சொற்கள் அமையும் முறை முதலான இலக்கணங்களைத் தெளிவாக்குகின்றது. பிற்பகுதி செய்யுளின் பாடுபொருளாகத் தமிழ் இலக்கண நூல்கள் வரையறுத்த அகப்பொருள், புறப்பொருள் பற்றிய அடிப்படை இலக்கணங்களை விளக்குவதாக அமைகின்றது.

### வழு

வழு என்பது பிழையைக் குறிக்கும் சொல்லாகும்.

### வழா நிலை

பிழையின்றி எழுதவேண்டும் என்று வலியுறுத்துவது **வழா நிலை** ஆகும்.

### வழு அமைதி

பிழையிருந்தாலும் ஒரு காரணம் கருதி ஏற்றுக்கொள்வது **வழு அமைதி** ஆகும். கீழ்க்காணும் எடுத்துக்காட்டுகளை உற்று நோக்குக.

அம்மா வந்தது
நாளை வந்தான்
குயில் கத்தும்

### முதல் எடுத்துக்காட்டில்,

**அம்மா** என்பது உயர்திணைச் சொல்; வந்தது என்பது அஃறிணை முடிவு. இவ்வாறு உயர்திணையோடு அஃறிணையைச் சேர்த்திருப்பது வழு ஆகும்.

### இரண்டாம் எடுத்துக்காட்டில்,

**நாளை** என்பது எதிர்காலச் சொல். **வந்தான்** என்பது இறந்தகால முடிவு. இவ்வாறு எதிர்காலத்தையும், இறந்தகாலத்தையும் சேர்த்திருப்பது வழு ஆகும்.

### மூன்றாம் எடுத்துக்காட்டில்,

குயில் ஓசையைக் **கத்தும்** என்ற சொல்லால் குறிப்பிட்டிருப்பது வழு ஆகும்.

இங்ஙனம் தவறாக (வழு) அமைந்த மூன்று எடுத்துக்காட்டுகளையும் கீழ்க்காணுமாறு வழு நீக்கி வழங்க வேண்டும்.

அம்மா வந்தாள்

நாளை வருவான்

குயில் கூவும்

வழுவகை

**முதல் எடுத்துக்காட்டில்,**

உயர்திணை, அஃறிணைக் கலப்பு ஏற்பட்டதால் அதனைத் **திணை வழு** என்பர்.

**இரண்டாம் எடுத்துக்காட்டில்,**

எதிர்காலமும் நிகழ்காலமும் கலந்திருப்பதால் அதனைக் **கால வழு** என்பர்.

**மூன்றாம் எடுத்துக்காட்டில்,**

**கூவும்** என்னும் மரபுச் சொல்லுக்குப் பதிலாகக் கத்தும் என்று இருப்பதால் அது **மரபு வழு** ஆகும்.

இவ்வாறே, மேலும் பல வழுக்கள் உண்டு. இலக்கண நூலார் அவற்றை ஏழாக வகையாக்கி உள்ளனர். அவற்றை எடுத்துக்காட்டுகளுடன் கீழ்க்காணும் பட்டியல் தெளிவாக்கும்.

| வழுவான சொல் | திருத்தம் | வகை |
|---|---|---|
| அரசன் வந்தது. | அரசன் வந்தான். | திணை வழு |
| செல்வி வந்தான். | செல்வி வந்தாள். | பால் வழு |
| நான் **வந்தான்.** | நான் வந்தேன். | இட வழு |
| நேற்று வருவான் | நேற்று வந்தேன். | கால வழு |

| | | |
|---|---|---|
| ஒருவிரலைக் காட்டி இது சிறிதா? பெரிதா? என்பது | இருவிரல்களைக் காட்டியே அவ்வாறு வினவ வேண்டும். | வினா வழு |
| ஊர் வந்ததா? என்றால் தேர் வந்தது என்பது | ஊர் வந்தது அல்லது ஊர் வரவில்லை என்பதே உரிய விடை ஆகும். | விடை வழு |
| மான் குட்டி | மான் கன்று | மரபு வழு |

வழு அமைதி

வழு என்பது பிழையைக் குறிக்கும் என்பதை அறிந்தோம். அவ்வாறு அமையும் இலக்கணப் பிழைகளைச் சில காரணங்களுக்காக ஏற்றுக் கொள்வதை வழுஅமைதி என்பர். கீழ்க்காணும் எடுத்துக்காட்டுகளை நோக்குக.

| வழு அமைதியாக அமையும் சில எடுத்துக்காட்டுகள் | காரணம் |
|---|---|
| ஒருவர் தன் வீட்டிலிருக்கும் பசுவை என் அம்மை வந்தாள் என்பது | மகிழ்ச்சி |
| உண்டு முடிக்காத போதே, உண்டேன், உண்டேன் என்பது | விரைவு |
| தேர்வு எழுதும் போதே யான் வென்றேன் என்பது | உறுதி |

குறிப்பும் வெளிப்படையும்

கீழ்க்காணும் எடுத்துக்காட்டுகளைக் கூர்ந்து நோக்குக.

தலையில் சுமந்து சென்றான். தலைக்கு நூறு ரூபாய் கொடுத்தான்.

முதல் எடுத்துக்காட்டில் தலை என்பது உடல் உறுப்பாகிய தலையையே குறிக்கிறது.

இதில் பொருள் வெளிப்படையாக அமைந்துள்ளது.

இரண்டாம் எடுத்துக்காட்டில் தலை என்பது உடல் உறுப்பைக் குறிக்கவில்லை. மாறாக, தலையை உடைய ஒரு **ஆளைக்** குறிக்கிறது.

இவ்வாறு ஒரு சொல் குறிப்பால் வேறொரு பொருளை உணர்த்துவதே இலக்கணத்தில் **குறிப்புச்** சொல் என்பர்.

### ஒன்றொழி பொதுச்சொல்

கீழ்க்காணும் எடுத்துக்காட்டுகளை உற்று நோக்குக.

| | |
|---|---|
| ஆயிரம் மக்கள் போரிட்டனர். | ஆயிரம் மக்கள் குழந்தை பெற்றனர். |
| இம் மாடு பால் கறக்கும். | இம் மாடு வயலில் உழும். |

முதல் வரிசையில் இரண்டு எடுத்துக்காட்டுகளிலும் **மக்கள்** என்னும் பொதுச்சொல் இடம் பெற்றுள்ளது. போரிட்டனர் என்பதால் மக்கள் என்பது பெண்களை நீக்கி **ஆண்களைக்** குறித்தது. குழந்தை பெற்றனர் என்பதால் மக்கள் என்பது ஆண்களை நீக்கிப் **பெண்களைக்** குறித்தது.

இரண்டாம் வரிசையில் இரண்டு எடுத்துக்காட்டுகளிலும் மாடு என்னும் பொதுச்சொல் இடம்பெற்றுள்ளது. பால் கறக்கும் என்பதால் மாடு என்பது காளையை நீக்கிப் **பசுவைக்** குறித்தது. வயலில் உழும் என்பதால் மாடு என்பது பசுவை நீக்கிக் **காளையைக்** குறித்தது.

இவ்வாறு ஒரு பொதுச்சொல் ஒன்றை ஒழித்து வேறொன்றைக் குறிப்பதையே **ஒன்றொழி பொதுச்சொல்** என்பர்.

### அடுக்குத்தொடர் - இரட்டைக்கிளவி

கீழ்க்காணும் எடுத்துக்காட்டுகளை உற்று நோக்குக.

| | |
|---|---|
| மன்னரைக் கண்ட மக்கள் **வாழ்க வாழ்க** என்று வாழ்த்தினர். | புயல் அடித்ததால் மரம் **மடமட** என முரிந்தது. |

எடுத்துக்காட்டுகள் இரண்டிலும் இரட்டைச் சொற்கள் இடம் பெற்றுள்ளன.

முதல் எடுத்துக்காட்டில் இடம்பெற்ற **வாழ்க வாழ்க** என்னும் இரட்டைச் சொல்லைப் பிரித்தாலும் பொருள் தரும்.

இரண்டாம் எடுத்துக்காட்டில் இடம்பெற்ற **மடமட** என்னும் இரட்டைச் சொல்லைப் பிரித்தால் பொருள் ஏதும் தராது.

பிரித்தாலும் பொருள்தரும் இரட்டைச் சொற்களை **அடுக்குத் தொடர்** என்பர்.

பிரித்தால் பொருள்தராத இரட்டைச் சொற்களை **இரட்டைக் கிளவி** என்பர்.

**ஒருபொருட் பன்மொழி**

கீழ்க்காணும் எடுத்துக்காட்டுகளை நோக்குக.

ஓங்கிஉயர்ந்த மாமலை
நீண்டநெடிய பேராறு

இவ்வெடுத்துக்காட்டுகளில் மலை, ஆறு என்பனவே பொருள்கள் ஆகும். அவற்றின் உயரத்தையும், நீளத்தையும் குறிக்க ஒன்றுக்கு மேற்பட்ட சொற்கள் இடம்பெற்றள்ளன.

ஓங்கி - உயர்ந்த - மா என்னும் மூன்றும் மலையின் உயரத்திற்கு அமைந்த பல சொற்களாகும்.

நீண்ட - நெடிய - பெரிய என்னும் மூன்றும் ஆற்றின் நீளத்திற்கு அமைந்த பல சொற்களாகும்.

இவ்வாறு ஒரு பொருளுக்கே பல சொற்கள் அமைவதையே இலக்கணத்தில் **ஒருபொருட் பன்மொழி** என்பர்.

வினா வகை

ஒருவர் மற்றவரைப் பார்த்து ஒரு செய்தியைப் பற்றிக் கேட்பதையே வினா என்பர். அவ்வாறு, வினாக் கேட்பதில் பல வகைகளை இலக்கணத்தில் வகுத்துள்ளனர்.

அதற்கான விளக்கங்களைக் கீழ்க்காணும் அட்டவணை இனிது விளக்குகிறது.

| வ. எண். | வினா வகை | விளக்கம் | எடுத்துக்காட்டு |
|---|---|---|---|
| 1. | அறி வினா | ஒரு பொருளைப் பற்றி தான் அறிந்திருந்து அது பிறருக்குத் தெரியுமா என அறிவதற்காக வினவுவது. | திருக்குறளை இயற்றியவர் யார்? என ஆசிரியர் மாணவனைக் கேட்பது. |
| 2. | அறியா வினா | தான் அறியாத ஒன்றை அறிந்து கொள்ளும் நோக்கில் வினவுவது. | தொலைக்காட்சியைக் கண்டுபிடித்தது யார்? என மாணவன் ஆசிரியரிடம் வினவுவது. |
| 3. | ஐய வினா | ஒரு பொருளைப் பற்றி இதுவா, அதுவா என்று ஐயப்பட்டு வினவுவது. | தொலைவில் தெரிவது மரமா? மனிதனா? |
| 4. | கொளல் வினா | ஒரு பொருளைப் பெற்றுக் கொள்வதற்காக வினவுவது. | வணிகரே உளுந்து உள்ளதா? |
| 5. | கொடை வினா | ஒரு பொருளைக் கொடுப்பதற்காக வினவுவது. | சிறுவனே ! உனக்கு ஆடை இல்லையா? |
| 6. | ஏவல் வினா | ஒரு செயலைச் செய்யுமாறு ஏவுவதற்காக வினவுவது. | பாடலை மனப்பாடம் செய்துவிட்டாயா? என்று ஆசிரியர் வினவுவது. (எழுதிக்காட்டும் படி ஏவுவதற்காக) |

## விடை வகை

ஒருவர் கேட்ட வினாவிற்கு மற்றவர் கூறும் பதில் விடை எனப்பெறும்.

அவ்வாறு சொல்லப்பெறும் விடைகளை இலக்கணத்தில் பல வகைகளாக வகுத்துள்ளனர். அதற்கான விளக்கங்களைக் கீழ்க்காணும் அட்டவணை இனிது விளக்குகிறது.

| வ. எண். | விடை வகை | விளக்கம் | எடுத்துக்காட்டு |
|---|---|---|---|
| 1. | சுட்டு விடை | சுட்டிக் காட்டி விடை கூறுவது | உன்னுடைய வீடு எது என்ற வினாவிற்கு, **என்னுடைய வீடு இது** என்று விடை கூறுதல் |
| 2. | எதிர்மறை | மறுத்துக் கூறுவது | கடைக்குச் செல்வாயா? என்றால் **செல்லமாட்டேன்** என்பது. |
| 3. | நேர் விடை | உடன்பட்டுக் கூறுவது | கடைக்குச் செல்வாயா? என்றால் **செல்வேன்** என்பது. |
| 4. | ஏவல் விடை | வினா கேட்டவரை ஏவுவது போல விடை சொல்வது. | கடைக்குச் செல்வாயா? என்றால் **நீயே செல்** என்பது. |
| 5. | வினா எதிர் வினாதல் | வினா கேட்டவருக்கு வேறொரு வினாவின் மூலம் விடை கூறுதல் | கடைக்குச் சல்வாயா? என்றால் **நீ செல்லக் கூடாதா?** என்பது. |
| 6. | உற்றது உரைத்தல் | தனக்கு நிகழ்ந்த ஒன்றை விடையாகக் கூறுதல். | கடைக்குச் செல்வாயா? என்றால் **கால் வலித்தது** என்பது. |
| 7. | உறுவது கூறல் | தனக்கு நிகழப்போகும் ஒன்றை விடையாகக் கூறுதல். | கடைக்குச் செல்வாயா? என்றால் **கால் வலிக்கும்** என்பது. |
| 8. | இனமொழி விடை | கேட்ட வினாவிற்கு நேரடியாக விடை கூறாமல் அதற்கு இனமாகிய ஒன்றை விடையாகக் கூறுதல் | பயறு உள்ளதா? என்றால் **உளுந்து உள்ளது** என்பது. |

## பாடுபொருள் இலக்கணம்

இப்பாடப் பகுதியில் இதுவரை நாம் கற்றுணர்ந்த இலக்கணச் செய்திகள் சொற்பொருள் தொடர்பானவை. இனிவரும் பகுதி, சொற்களைக் கொண்டு உருவாக்கப்பெறும் பாடல்களுக்கு உரிய **அகப்பொருள், புறப்பொருள்** என்னும் இருவகையானப் பொருள் இலக்கணங்களைப் பற்றியது.

## அகப்பொருள்

**அகம்** என்னும் சொல் உள்ளத்தைக் குறிப்பது. உள்ளத்து உணர்வாக அமையும் செய்தியை அகம் என்பர்.

உள்ளத்தில் நினைத்து மகிழலாம். ஆனால் புறத்தே பிறருக்கு வெளிப்படுத்திக் கூற முடியாதது. அதுவே **அகம்** எனப்பெறும்.

**தலைவன், தலைவி என்னும் இருவரும் விரும்பி ஒத்த அன்பினால் மேற்கொள்ளும் இன்பம் நிறைந்த வாழ்க்கையே** அகம் என உணர்க.

அவ்வாறு தலைவன், தலைவிக்கு இடைப்பட்ட அகப்பொருளைத் தமிழ்ப் புலவர்கள் பாடல்களாகப் பாடியுள்ளனர். ஆனால் தலைவன், தலைவி யார் (பெயர்) என்பதைச் சுட்டிக்காட்டாமல் பொது நிலையில் பாடியுள்ளனர். அவ்வாறு அகப்பொருள் பாடல்களைப் பாடுவதற்குச் சில வரையறைகளை வகுத்துள்ளனர். அவையே **அகப்பொருள் இலக்கணம்** எனப்பெறும்.

## மூவகைப் பொருள்

அகப்பொருள் இலக்கணங்களை வரையறுத்த முன்னோர் மூவகைப் பொருள்நிலைகளை விளக்கியுள்ளனர். அவையாவன :

முதற்பொருள்
கருப்பொருள்
உரிப்பொருள்

என்பன. எடுத்துக்காட்டாக,

தலைவனும் தலைவியும் சேர்ந்து வாழ்வது **புணர்தல்** என்னும் **உரிப்பொருள்.**

அவர்கள் சேர்ந்து வாழும் பகுதியில் மயிலும், மானும், ஓடையும் அமைந்திருப்பது **கருப்பொருள்.**

அவர்கள் சேர்ந்திருக்கும் நிலப்பகுதி, மலையோ, மலைச்சாரலோ ஆகலாம். அது **முதற்பொருள்.**

இவையே முப்பொருள் எனப்பெறும். இதனை முறையாக அமைக்க விரும்பிய இலக்கணப் புலவர்கள் முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் என மாற்றியமைத்தனர். இம் முப்பொருள்களைப் பற்றிக் கீழ்க்காணுமாறு விளங்கிக் கொள்ளலாம்.

தலைவனும், தலைவியும் வாழும் பகுதி - நிலம் - **முதற்பொருள்.**
அவர்கள் வாழும் பகுதியில் சூழும் பிற பொருள்கள் - **கருப் பொருள்கள்.**
அவர்கள் மேற்கொள்ளும் வாழ்க்கை முறை - **உரிப்பொருள்.**

### முதற்பொருள்

தலைவன் தலைவி இருவரும் மேற்கொள்ளும் அக வாழ்க்கைக்கு முதன்மையாக அமைவது அவர்களது வாழிடமே ஆகும். அதனுடன், வாழ்வியல் நிகழ்த்தும் காலத்தையும் சேர்த்து முதற்பொருள் என வகுத்தனர். எனவே, **நிலம், பொழுது** என்று முதற்பொருள் இருவகைபெறும்.

### நிலங்களின் வகைப்பாடு

முதற்பொருளின் முதன்மைப் பிரிவாகிய நிலங்களை ஐந்து வகையாக்கினர். அவற்றிற்குத் தனித்தனியாகப் பெயர் வைத்தும் வழங்கினர். ஒவ்வொரு நிலத்திற்குரிய ஒழுக்கத்தைத் **திணை** என்றும் வழங்கினர். அவற்றைக் கீழ்க்காணும் அட்டவணை இனிது விளக்குகிறது.

| நிலம் | பெயர் |
|---|---|
| மலையும் மலை சார்ந்த இடமும் | குறிஞ்சித் திணை |
| காடும் காடு சார்ந்த இடமும் | முல்லைத் திணை |
| வயலும் வயல் சார்ந்த இடமும் | மருதத் திணை |
| கடலும் கடல் சார்ந்த இடமும் | நெய்தல் திணை |
| வறண்ட பகுதியாகிய சுரமும்,<br>அது சார்ந்த இடமும் | பாலைத் திணை |

## இருவகைப் பொழுதுகள்

முதற்பொருளின் இரண்டாம் பிரிவு **பொழுது** எனப்பெறும்.

ஓர் ஆண்டில் மழைக்காலம், குளிர் காலம், பனிக்காலம், வேனில் காலம் எனப் பல இயற்கைச் சூழ்நிலைகள் மாறி, மாறி அமைவதை நாம் அறிவோம். அந்த வகையில் ஓர் ஆண்டினை ஆறு வகைப் பிரிவுகளாக அமைத்தனர். அவையே **பெரும்பொழுதுகள்** ஆகும். கீழ்க்காணும் அட்டவணை, பெரும்பொழுது வகைகளை நன்கு விளக்குகின்றது.

| குறிப்பிட்ட மாதங்கள் | அதற்குரியப் பெயர் |
|---|---|
| சித்திரை, வைகாசி | இளவேனில் காலம் |
| ஆனி, ஆடி | முதுவேனில் காலம் |
| ஆவணி, புரட்டாசி | கார் காலம் |
| ஐப்பசி, கார்த்திகை | குளிர் காலம் |
| மார்கழி, தை | முன்பனிக் காலம் |
| மாசி, பங்குனி | பின்பனிக் காலம் |

ஓர் ஆண்டினை ஆறு பிரிவுகளாகப் பிரித்தது போலவே 24 மணி நேரத்தைக் கொண்ட ஒரு நாளினையும் ஆறு பிரிவுகளாகப் பிரிக்கலாம். அவற்றைச் **சிறுபொழுது** என்பர். கீழ்க்காணும் அட்டவணை சிறுபொழுது வகைகளை இனிது விளக்குகின்றது.

| குறிப்பிட்ட நேரம் | அதற்குரியப் பெயர் |
|---|---|
| காலை 6 மணிமுதல் 10 மணிவரை | காலை |
| 10 மணிமுதல் 2 மணிவரை | நண்பகல் |
| 2 மணிமுதல் 6 மணிவரை | எற்பாடு (சூரியன் மறையும் நேரம் வரை) |
| மாலை 6மணி முதல் இரவு 10 மணி வரை | மாலை |
| இரவு 10 மணிமுதல் 2 மணிவரை | யாமம் (நள்ளிரவு) |
| இரவு 2 மணிமுதல் காலை 6 மணி வரை | வைகறை (விடியல்) |

தனித்தனியாகப் பெரும் பொழுதுகளையும், சிறு பொழுதுகளையும் பற்றி அறிந்து கொண்ட நாம் , ஐந்து திணைகளுக்கும் உரிய பெரும்பொழுது, சிறுபொழுதுகளைக் கீழ்க்காணும் அட்டவணையின் மூலம் தெளிவாக அறிந்து கொள்ளலாம்.

| திணை | பெரும்பொழுது | சிறுபொழுது |
|---|---|---|
| குறிஞ்சி | குளிர்காலம், முன்பனிக்காலம் | யாமம் |
| முல்லை | கார் காலம் | மாலை |
| மருதம் | ஆறு பெரும் பொழுதுகள் | வைகறை |
| நெய்தல் | ஆறு பெரும் பொழுதுகள் | எற்பாடு |
| பாலை | இளவேனில், முதுவேனில், பின்பனி | நண்பகல் |

## கருப்பொருள்கள்

நிலமும் பொழுதும் முதற்பொருளாகவும், நிலத்தில் வாழும் மனிதனின் செயல்பாடு உரிப்பொருளாகவும் அமையும். மனிதன் வாழும் நிலத்தில் அமைந்துள்ள பிற உயிருள்ள பொருள்களையும், நீர், ஊர், இசை, தொழில் முதலானவற்றையும் கருப்பொருள்கள் என்று குறிப்பிடுகின்றனர். தொகுத்துச் சொன்னால் கருப்பொருள்கள் தெய்வம், மக்கள், உணவு, விலங்கு, பூ, மரம், பறவை, ஊர், நீர், பறை, யாழ், பண், தொழில் என்பனவும் பிறவும் ஆகும். (ஐந்து திணைகளுக்கும் உரிய கருப்பொருள் அட்டவணையை அடுத்த நிலையில் அறியலாம்.)

## புறத்திணை

**அகம்** என்பதற்கு மாறான எதிர்பொருள் உடைய சொல் **புறம்** ஆகும். ஒரு மன்னனின் வீரம், வெற்றி, கொடை, புகழ் பற்றியும்; கல்வி, அறம் முதலானவைக் குறித்தும் விளக்கும் இலக்கணப் பகுதிகள் **புறப்பொருள்** ஆகும். அவற்றை 12 திணைகளாகப் பாகுபடுத்தியுள்ளனர். உரிய விளக்கங்களைக் கீழ்க்காணும் அட்டவணை இனிது விளக்குகின்றது.

<table>
<tr><th>வ.எண்.</th><th>திணை</th><th colspan="2">விளக்கம்</th></tr>
<tr><td>1.</td><td>வெட்சி</td><td colspan="2">ஒரு மன்னன் பகை நாட்டின் பசுக் கூட்டங்களைக் கவர்ந்து வருதல்.</td></tr>
<tr><td>2.</td><td>கரந்தை</td><td colspan="2">பகைவர் கவர்ந்து சென்ற பசுக் கூட்டங்களை மீட்டு வருதல்.</td></tr>
<tr><td>3.</td><td>வஞ்சி</td><td colspan="2">மண் ஆசையோடு பகைவர் நாட்டைக் கைப்பற்றக் கருதிப் போருக்குச் செல்லுதல்.</td></tr>
<tr><td>4.</td><td>காஞ்சி</td><td colspan="2">மண் ஆசையோடு போருக்கு வந்தவனை எதிர்த்து நின்று போர் புரிதல்.</td></tr>
<tr><td>5.</td><td>நொச்சி</td><td colspan="2">பகைவர்கள் வளைத்து நின்ற மதிலை உள்ளிருக்கும் வீரர்கள் காப்பாற்றுதல்; அதற்காகப் போர் புரிதல்.</td></tr>
<tr><td>6.</td><td>உழிஞை</td><td colspan="2">பகைவனின் கோட்டையை முற்றுகையிடுதல்.</td></tr>
<tr><td>7.</td><td>தும்பை</td><td colspan="2">பகை கொண்ட இருபெரு வேந்தரும் போரிடுதல்.</td></tr>
<tr><td>8.</td><td>வாகை</td><td colspan="2">போரிட்ட இருவருள் ஒருவர் வெற்றி பெறுதல்.</td></tr>
<tr><td>9.</td><td>பாடாண்</td><td colspan="2">மன்னனின் வீரம், கொடை, புகழ் முதலானவற்றைப் பாடுதல்.</td></tr>
<tr><td>10.</td><td>பொதுவியல்</td><td colspan="2">மேற்கண்ட ஒன்பது திணைகளுக்கும் பொதுவான செய்திகளைக் கூறுதல்.</td></tr>
<tr><td>11.</td><td>கைக்கிளை</td><td>ஒருதலைக் காதல்</td><td rowspan="2">இவை இரண்டும் அகப்பொருளில் புறப்பொருளாகக் கருதப்பெறுகின்றன.</td></tr>
<tr><td>12.</td><td>பெருந்திணை</td><td>பொருந்தாக் காதல்</td></tr>
</table>

## பயிற்சி - 1

## Exercise 1

I. கீழ்க்காணும் தொடர்களைப் படிக்கவும். அவற்றைச் சரியா? தவறா? என அறிந்து கூறவும். விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Read the following and say whether they are right or wrong. For answers, press the answer button.

1 பிழையின்றி எழுத வலியுறுத்துவது வழா நிலை ஆகும்.
(விடை: சரி)

2 குயில் கத்தும் என்பது மரபுப் பிழை.
(விடை: சரி)

3 செல்வி வந்தான் என்பது கால வழு.
(விடை: தவறு)

4 தேர்வு எழுதும்போதே யான் வென்றேன் என்பது வழு அமைதி
(விடை: சரி)

5 மட மட என்பது அடுக்குத் தொடர்.
(விடை: தவறு)

6 பாம்பு, பாம்பு என்பது அடுக்குத் தொடர்.
(விடை: சரி)

7 தெரிந்து கொண்டே கேட்பது ஐய வினா ஆகும்.
(விடை: தவறு)

8 கொடுப்பதற்காகக் கேட்பது கொளல் வினா ஆகும்.
(விடை: தவறு)

9 நேரடியாக விடை கூறுவது நேர்விடை ஆகும்.
(விடை: சரி)

10 மன்னனின் வீரத்தைச் சொல்வது அகப்பொருள்.
(விடை: தவறு)

**பயிற்சி - 2**

**Exercise 2**

II. கீழ்க்காணும் கோடிட்ட இடங்களை நிரப்பச் சரியான சொற்களைக் காண்க. விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Find the right words to fill in the blanks: For answers, press the answer button.

1 அம்மா வந்தது என்பது ----------- வழு ஆகும்.
(விடை: திணை வழு)

2 மான் கன்று என்பது ----------- வழு அற்ற தொடராகும்.
(விடை: மரபு)

3 தலைக்கு நூறு ரூபாய் கொடு என்பதில் தலை என்பது --------ஐக் குறிக்கும்.
(விடை: ஆள்)

4 ஒரு பொருளுக்கே பல சொற்களை அடுக்கிச் சொல்வதை ------- என்பர்.
(விடை: ஒருபொருட் பன்மொழி)

5 ஒரு பொருளைப் பற்றி ஐயத்துடன் வினவுவது ------- ஆகும்.
(விடை: ஐய வினா)

6 தனக்கு நிகழப்போகும் ஒன்றை விடையாகக் கூறுவது -------- ஆகும்.
(விடை: உறுவது கூறல்)

7 அகப்பொருள் என்பது -------- ஆகும்.
(விடை: பாடுபொருள்)

8 மக்கள் வாழும் நிலப்பகுதியை --------- என்பர்.
(விடை: முதற்பொருள்)

9 மார்கழி, தை இரண்டும் ----------- காலம்.
(விடை: முன்பனிக் காலம்)

10 பகைவரின் கோட்டையை முற்றுகையிடுவது -------- ஆகும்.
(விடை: உழிஞைத் திணை)

III. கீழ்க்காணும் வினாக்களுக்குச் சரியான விடையைத் தேர்ந்தெடுத்து எழுதவும். விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Choose the right answer for the following questions. For answers, press the answer button.

1 இலக்கணத்தில் பிழையைக் குறிக்கும் சொல்

அ) வழு

ஆ) வழா நிலை

இ) வழு அமைதி

ஈ) வழி

(விடை: அ) வழு)

2 இலக்கணத்தில் வழு வகைகள்

அ) ஐந்து

ஆ) ஆறு

இ) ஏழு

ஈ) எட்டு

(விடை: இ) ஏழு)

3 வாழ்க ! வாழ்க ! என்பது

அ) வியங்கோள் வினைமுற்று

ஆ) அடுக்குத் தொடர்

இ) இரட்டைக் கிளவி

ஈ) வினைமுற்று

(விடை: ஆ) அடுக்குத் தொடர்)

4 வினா வகைகள்

அ) மூன்று

ஆ) நான்கு

இ) ஐந்து

ஈ) ஆறு

(விடை: ஈ) ஆறு)

5 விடை வகைகள்

அ) எட்டு

ஆ) ஏழு

இ) ஆறு

ஈ) ஐந்து

(விடை: அ) எட்டு)

6 பொருள் இலக்கணம்

அ) இரு வகைபெறும்

ஆ) மூவகைபெறும்

இ) ஆறு வகைபெறும்

ஈ) வகைகளே இல்லை

(விடை: அ) இரு வகைபெறும்)

7 அகப்பொருளின் உட்பிரிவுகள்

அ) இரண்டு

ஆ) மூன்று

இ) நான்கு

ஈ) ஐந்து

(விடை: ஆ) மூன்று)

8 முதற்பொருளில் அடங்குவன

அ) நிலமும் இடமும்

ஆ) நிலமும் திணையும்

இ) நிலமும் பொழுதும்

ஈ) ஆண்டும் மாதமும்

(விடை: இ) நிலமும் பொழுதும்)

9 சித்திரை வைகாசி இரண்டும்

அ) முன் பனிக் காலம்

ஆ) பின் பனிக்காலம்

இ) முதுவேனில் காலம்

ஈ) இளவேனில் காலம்

(விடை: ஈ) இளவேனில் காலம்)

10 எற்பாடு என்பது

அ) சூரியன் தோன்றும் நேரம்

ஆ) சூரியன் மறையும் நேரம்

இ) நள்ளிரவு நேரம்

ஈ) அதிகாலை நேரம்

(விடை: **ஆ) சூரியன் மறையும் நேரம்**)

பொருள்

பயிற்சி - **4**

**Exercise 4**

IV கீழ்க்காணும் வினாக்களுக்கு ஒருவரியில் விடை தரவும். விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Answer the following questions in a line each: For answers, press the answer button.

1 வழுஅமைதி என்றால் என்ன?

(விடை: **இலக்கணப்படி பிழை இருந்தாலும் ஒரு காரணம் கருதி ஏற்றுக் கொள்வது வழுஅமைதி எனப்பெறும்.**)

2 காலங்கள் முரண்பாடாக அமையும் தொடரை எவ்வாறு அழைப்பர்?

(விடை: **காலங்கள் முரண்பாடாக அமையும் தொடரை காலவழு என்று அழைப்பர்.**)

3 ஆயிரம் மக்கள் போரிட்டனர் என்னும் தொடரில் மக்கள் என்பது யாரைக் குறிக்கும்?

(விடை: **ஆயிரம் மக்கள் போரிட்டனர் என்னும் தொடரில் மக்கள் என்பது ஆடவரைக் குறிக்கும்.**)

4 நீண்ட நெடிய பேராறு - இது எவ்வகை இலக்கணத்திற்கு உரியது?

(விடை: **நீண்ட நெடிய பேராறு என்பது ஒருபொருட் பன்மொழிக்கு உரியது**)

5 ஏவல் வினாவிற்கு எடுத்துக்காட்டுத் தருக.

(விடை: **பாடலை மனப்பாடம் செய்து விட்டாயா? என்பது ஏவல் வினாவிற்கு எடுத்துக்காட்டு.**)

6 இனமொழி விடை என்றால் என்ன?

(விடை: **நேரடியாக விடை கூறாமல் இனமான ஒன்றைக் கூறுவது இனமொழி விடை ஆகும்.**)

7 உரிப்பொருள் என்றால் என்ன?

(விடை: **உரிப்பொருள் என்பது தலைமக்களின் வாழ்க்கை முறை.**)

8 வைகறைக்குரிய நேரம் யாது?

(விடை: **வைகறைக்குரிய நேரம் இரவு 2 மணி முதல் காலை 6 மணி வரை.**)

9 புறத்திணை எத்தனை வகைபெறும்?

(விடை: **புறத்திணை பன்னிரண்டு வகைபெறும்.**)

10 மன்னனைப் புகழ்ந்து பாடும் திணை எது?

(விடை: மன்னனைப் புகழ்ந்து பாடும் திணை பாடாண் திணை.)

எழுத்து - சொல்

பொது அறிமுகம்

**General Introduction**

அன்புள்ள மாணவர்களே! வணக்கம்

இப்பாடத்தில், எழுத்து, சொல் இலக்கணம்பற்றி முன்னர்க் கற்றனவற்றை நினைவுபடுத்திக் கொள்கிறீர்கள். மேலும், ஐவகைத் தொகைநிலைத் தொடர்கள், அறுவகை வினாக்கள், எட்டுவகை விடைகள் பற்றியும் **எட்டுவகைப் பொருள்கோள்கள், வேற்றுமை உருபுகள், அறுவகைப் பெயர்கள்,** ஆகுபெயர் ஆகியவை பற்றியும் அறிந்து கொள்ள இருக்கின்றீர்கள்.

எழுத்து - சொல்

பாட அறிமுகம்

**Introduction to Lesson**

அயலகத்திலிருந்து அன்னைத் தமிழ் கற்கும் அன்பு மாணவ மாணவியரே! வணக்கம் ! வாழிய நலம் !

முன் வகுப்பில் கற்ற இலக்கணப் பகுதிகளை மீண்டும் நெஞ்சில் நிறுத்தி நினைவில் அசைபோடுங்கள் !

இலக்கு + அண் + அம் = இலக்கணம்.

மொழியைக் கற்றுக் கொள்ளும் இலக்கினை அடைய உதவுவது இலக்கணம். பிழையறப் பேசுதல், பிழையற எழுதுதல் ஆகியவை மொழி கற்றலின் இலக்கு.

எழுத்து, சொல், பொருள், யாப்பு அணி - தமிழ் இலக்கணப் பிரிவுகள்.

ஒலிக்க வேண்டிய கால அளவு

குறில் - 1 மாத்திரை

நெடில் - 2 மாத்திரை

மெய்யெழுத்துகள் - 1/2 மாத்திரை

எழுத்தை ஒலிக்க வேண்டிய கால அளவினை மாத்திரை என வழங்குவர்.

கண் இமைப்பதற்கும், விரலை நொடிப்பதற்கும் உரிய கால அளவு மாத்திரை.

எழுத்து - சொல்

பாடம்

**Lesson**

ஓரெழுத்துத் தனித்து நின்றோ, ஒன்றுக்கு மேற்பட்ட எழுத்துகள் தொடர்ந்து நின்றோ பொருள் தருமாயின் அது சொல் என வழங்கப் பெறும்.

சொல்லின் இரண்டு பிரிவுகள்

- இலக்கண வகைச் சொற்கள்
- இலக்கிய வகைச் சொற்கள்

இலக்கண வகைச் சொற்கள்

- பெயர்ச்சொல்
- வினைச் சொல்
- இடைச்சொல்
- உரிச்சொல்

இலக்கிய வகைச் சொற்கள்

- இயற்சொல்

  (சோறு, கிளி - போன்ற யாவர்க்கும் புரிவன)

- திரிசொல்

  (சொன்றி- கிள்ளை- போன்ற கற்றவர்க்கே புரிவன)

- திசைச் சொல்

  (அல்வா, சன்னல் - போன்ற பிறமொழிச் சொற்கள்)

- வடசொல்

  (பாவம், புண்ணியம், குங்குமம் போன்ற வடமொழிச் சொற்கள்)

இலக்கண வகையான நால்வகைச் சொற்களுக்கும் ஓர் எடுத்துக்காட்டு :

**ஆலயம் தொழுவது சாலவும் நன்று - ஔவையார்**

இச்செய்யுளில் நான்குவகைச் சொற்களும் உள்ளன.

ஆலயம் - பெயர்ச்சொல்

தொழு - வினைச்சொல்

சால - உரிச்சொல்

உம் - இடைச்சொல்

இவற்றை நினைவுபடுத்தி நெஞ்சகத்தில் நிலைநிறுத்திக் கொள்ளுங்கள்.

## பகுபத உறுப்புகள்

சொல், பதம், மொழி, கிளவி ஆகிய யாவும் சொல் எனப் பொருள் தரும் சொற்கள்.

பகுக்கக் கூடிய சொல்லைப் **பகுபதம்** எனவும், பகுத்தால் பொருள் தராத (பகுக்க முடியாத) சொல்லைப் **பகாபதம்** எனவும் வழங்குவர்.

பகுக்கக் கூடிய ஒரு சொல்லுக்கு ஆறு உறுப்புகள் உண்டு. அவற்றைப் **பகுபத உறுப்புகள்** என்பர்.

- பகுதி
- விகுதி
- இடைநிலை
- சாரியை
- சந்தி
- விகாரம்

ஆகிய ஆறும் பகுபத உறுப்புகள்.

எடுத்துக்காட்டுகள் :

**விகுதி**

1. வாழ்க = வாழ் + க

(வாழ் - பகுதி ; க - விகுதி)

**இடைநிலை**

2. சொல்கிறேன் = சொல் + கிறு + ஏன்

(சொல் - பகுதி ; கிறு-இடைநிலை ; ஏன்-விகுதி)

**சந்தி**

3. படித்தேன் = படி + த்+ த்+ ஏன்

(படி - விகுதி ; த்-சந்தி ; த்-இடைநிலை ; ஏன்-விகுதி)

**சாரியை**

4. படித்தனன் = படி + த் + த் + அன்+ அன்

(படி-பகுதி ; த்-சந்தி ; த்-இடைநிலை ; அன்-சாரியை ; அன்-விகுதி)

விகாரம்

5. வாழ்ந்தனன் = வாழ்+ (ந்)த் + த் + அன் + அன்

(வாழ்-பகுதி ; (ந்)த்-சந்தி ந்(த்)ஆனது விகாரம் ; த்-இடைநிலை ; அன்-சாரியை ; அன்-விகுதி)

**மூன்று காலங்கள்**

- இறந்த காலம்
- நிகழ்காலம்
- எதிர்காலம்

**காலங்காட்டும் இடைநிலைகள்**

இறந்தகால இடைநிலைகள் - த், ட், ற், இன்

நிகழ்கால இடைநிலைகள் - கிறு, கின்று, ஆநின்று

எதிர்கால இடைநிலைகள் - ப், வ்

எதிர்மறை இடைநிலைகள் - ஆ, ஆல், இல்

**பால் உணர்த்தும் விகுதிகள்**

ஆண்பால் - அன், ஆன்

பெண்பால் - அள், ஆள்

பலர் பால் - அர், ஆர், ப, மார்

ஒன்றன்பால் - து, று

பலவின் பால் - அ, ஆ

வியங்கோள் வினைமுற்று விகுதிகள் - க, இய, இயர்

பெயரெச்ச விகுதிகள் - அ, (உம்)

வினையெச்ச விகுதிகள் - உ, இ

வினைச் சொல்




ஒரு பொருளின் (புடைபெயர்ச்சியை) செயலை (அல்லது) வினையைத் தெரிவிப்பது வினைச் சொல்.

முடிவுபெற்ற வினைச்சொல் முற்று எனவும், முடிவு பெறாது எஞ்சி நிற்பது எச்சம் எனவும் படும்.

தெரிநிலை வினைமுற்று

செய்பவன், கருவி, நிலம், செயல், காலம், செய்பொருள் ஆகிய ஆறினையும் தெளிவாக உணர்த்துவது தெரிநிலை வினைமுற்றாகும்.

குறிப்பு வினைமுற்று

மேற்கூறிய ஆறினுள், கருத்தாவை மட்டும் விளக்கி, காலத்தைக் குறிப்பாக உணர்த்துவது குறிப்பு வினைமுற்றாகும்.

ஐவகை தொகை நிலைத் தொடர்கள்

| வ. எண் | ஐவகை தொகை | தொகையின் விளக்கம் | எடுத்துக்காட்டுகள் |
|---|---|---|---|
| 1 | வேற்றுமைத் தொகை | வேற்றுமை உருபு மறைந்து வருவன வேற்றுமைத் தொகை. | தண்ணீர்க் குடித்தேன் - "தண்ணீரைக் குடித்தேன்" என்பது, 'ஐ' என்ற, 2ஆம் வேற்றுமை உருபு மறைந்து வந்துள்ளது. இது போல்வன வேற்றுமைத் தொகையாம். (நூல் கற்றேன் ; பிணி மருந்து, வள்ளுவர் நூல்) |
| 2 | பண்புத் தொகை | பண்பை விளக்கும் உருபு மறைந்து வருவது பண்புத் தொகை. | செந்தமிழ் - செம்மை + தமிழ் = 'மை' என்ற பண்பு உருபு மறைந்து வந்துள்ளது. இது போல்வன பண்புத் தொகையாம். (வெண்குடை, கார்மேகம், செந்தாமரை போல்வன) |
| 3 | உவமைத் தொகை | உவம உருபு மறைந்து வருவது உவமத் தொகை. | மயிலாட்டம் - மயில் (போலும்) ஆட்டம். 'போலும்'என்ற உவம உருபு மறைந்து வந்துள்ளது. இதுபோல்வன உவமைத் தொகை. (பவளவாய், கனிமொழி, போல்வன) |
| 4 | உம்மைத் தொகை | 'உம்' என்ற இடைச்சொல் மறைந்து வருவது உம்மைத்தொகை. | "சொல் பொருள்" - சொல்(லு)ம் பொருளும் இதில் 'உம்' என்ற இடைச் சொல் மறைந்து வந்துள்ளது. இதுபோல்வன, உம்மைத் தொகை. (இரவுபகல், கபிலபரணர் போல்வன) |
| 5 | வினைத்தொகை | முக்காலமும் மறைந்து வரும் பெயரெச்சத்தை வினைத்தொகை என்பர். | குடிநீர் - (முன்பு) குடித்த நீர் ; (இப்பொழுது) குடிக்கின்ற நீர் ; (இனி) குடிக்கும் நீர் என முக்காலமும் மறைந்து வருதலின் இது வினைத் தொகை. இதுபோல்வன வினைத்தொகையாம். (கடிநாய், ஊறுகாய், எழுஞாயிறு, கொல்களிறு போல்வன. |

மாணவ மாணவிகளே !

பெயர்ச்சொல், வினைச்சொல், இடைச்சொல், உரிச்சொல் ஆகிய நான்கு வகைச் சொற்களுக்கும் பொதுவான இலக்கணம் கூறும் பகுதியைப் பொதுவிலக்கணம் அல்லது பொதுவியல் என்று வழங்குவர்.

இப்பகுதியில், **அறுவகை வினாக்கள், எட்டு வகை விடைகள்** என முன் கற்றனவற்றைச் சுருக்கமாக நினைவுபடுத்திக் கொள்க.

| எண் | அறுவகை வினாக்கள் | எடுத்துக்காட்டுகள் |
|---|---|---|
| 1 | அறிவினா | ஆசிரியர் மாணாக்கரை நோக்கி, "மனோன்மணீயத்தை இயற்றியவர் யார்?" என்று வினவுதல். |
| 2 | அறியா வினா | "ஐயா ! இப்பாடலின் பொருள் யாது?" என மாணவன் ஆசிரியரை வினவுதல். |
| 3 | ஐயவினா | "அம்மரக்கிளையில் தொங்குவது கயிறா? பாம்பா?" என ஐயமுற்று வினவுதல். |
| 4 | கொளல் வினா (ஒன்றினைக் கொள்ளும் பொருட்டு வினவும் வினா) | "ஐயா ! பாண்டியன் பரிசு நூல் உள்ளதா?" என்று (புத்தகத்தை வாங்கும் நோக்கத்துடன் வினவுதல்). |
| 5 | கொடை வினா | "வழிச் செலவுக்குப் பணம் உள்ளதா?" என்று தந்தை மகனிடம் வினவுதல் (செலவுக்குப் பணம் கொடுக்கும் நோக்கத்தில் வினவுதல்) |
| 6 | ஏவல் வினா | தம்பீ ! திருக்குறளில் 'கல்வி' அதிகாரம் படித்தாயா? என வினவுதல். (இல்லையேல் 'படி' என்று ஏவுதல்பொருட்டு வினவுதல்) |

எட்டுவகை விடை

| எண் | எட்டுவகை விடை | எடுத்துக்காட்டுகள் |
|---|---|---|
| 1 | சுட்டு விடை | "நூலகத்திற்குச் செல்லும் வழி யாது?" என்னும் வினாவுக்கு 'இது' (அல்லது) 'அது' எனச் சுட்டிக்காட்டுதல் - சுட்டுவிடை. |
| 2 | மறைவிடை | "உனக்கு இசை தெரியுமா?" என்னும் வினாவுக்கு, "தெரியாது" என்று எதிர்மறையாக விடை கூறுதல் மறைவிடை |

| | | |
|---|---|---|
| 3 | நேர் விடை | "உனக்கு நீந்தத் தெரியுமா?" என்ற வினாவுக்கு, "தெரியும்" என்று உடன்பாட்டு முறையில் விடை கூறுவது நேர்விடை |
| 4 | ஏவல் விடை | "கடைக்குப் போய் வருவாயா? என்னும் வினாவுக்கு, "நீயே போய் வா" ! என்று கேட்டவரையே ஏவுவது ஏவல் விடை. |
| 5 | வினா எதிர் வினாதல் விடை | "நீ நாள்தோறும் படிப்பாயா? என்னும் வினாவிற்கு, "நான் படிக்காமல் இருப்பேனா" என்று, எதிர்வினா எழுப்பி விடை கூறுவது வினா எதிர் வினாதல் விடை ஆகும். |
| 6 | உற்றது உரைத்தல் விடை | நீ தொலைக்காட்சி பார்த்தாயா? என்னும் வினாவுக்கு, "கண்வலித்தது என்று, முன்னர்த் தனக்கு நிகழ்ந்ததைக் கூறுவது உற்றது உரைத்தல் விடை ஆகும். |
| 7 | உறுவது கூறல் | நீ இந்த மலை ஏறுவாயா? என்னும் வினாவுக்குக் 'கால் வலிக்கும்' எனத் தனக்கு நேர விருப்பதை விடையாகக் கூறுவது உறுவது கூறல் விடை ஆகும். |
| 8 | இனமொழி | உனக்குக் கதை படிப்பது பிடிக்குமா? என்னும் வினாவுக்குக் "கவிதை படிப்பது பிடிக்கும்" என்று, (கதைக்கு இனமானது கவிதை) விடைகூறுவது இனமொழி விடையாகும். |

வினா, விடைகளை இவ்வாறு பகுத்துக் காணும் திறம் தமிழ்மொழிக்குரிய சிறப்பாகும் என்பதனை மாணாக்கர் அறிக.

அன்பு மாணாக்கச் செல்வங்களே !

ஒரு செய்யுளில் உள்ள சொற்களை அல்லது அடிகளைப் பொருள் உணர்வுக்கு ஏற்ப அமைத்துக் கொள்ளும் முறைமையைப் பொருள்கோள் என்று வழங்குவர். இதனை ஆங்கிலத்தில் Prose order என்பர் என்று அறிக.

பொருள்கோள் எட்டுவகைப்படும்.

| எண் | எட்டுவகை பொருள்கோள் | விளக்கம் |
|---|---|---|
| 1 | ஆற்றுநீர்ப் பொருள்கோள் | ஓடுகின்ற ஆற்றின் நீரோட்டம் போலச் செய்யுளில் உள்ள சொற்கள் முன்பின் மாறாமல் நேராகப் பொருள் கொள்ளும் முறையில் அமைவது. |
| 2 | மொழிமாற்றுப் பொருள்கோள் | செய்யுள் தரும் பொருளுக்குப் பொருத்தமாகச் சொற்களை, ஒரே அடிக்குள் மாற்றிப் பொருள் காணும் முறைக்கு மொழிமாற்றுப் பொருள்கோள் என்பது பெயர். |
| 3 | நிரல்நிறைப் பொருள்கோள் | (இது, முறை நிரல்நிறை, எதிர் நிரல்நிறை என இருவகை) ஒரு செய்யுளில் வரும் சொற்கள் முறை பிறழாமல் நிரல் நிறையாக (வரிசைமுறையில்) அமைந்து நிற்பது நீரல்நிறைப் பொருள்கோள். |
| 4 | பூட்டுவில் பொருள்கோள் | ஒரு செய்யுளின் இறுதிச் சொல்லை, முதற்சொல்லோடு சேர்த்துப் பொருள் கொள்ளுதல், பூட்டுவிற் பொருள்கோள் ஆகும். |
| 5 | தாப்பிசைப் பொருள்கோள் | (தாம்பு + இசை) கயிறு அசைவது ஒரு செய்யுளின் நடுவில் உள்ள ஒருசொல், ஊஞ்சல் கயிறு போன்று முன்னும் பின்னும் சென்ற பொருள் கொள்ளும் முறைமையைத் தாப்பிசைப் பொருள்கோள் என்பர்,. |

| | | |
|---|---|---|
| 6 | அளைமறிபாப்புப் பொருள்கோள் | (புற்றுக்குள் பாம்பு மடங்கிச் செல்லுதல் போன்றது. அளை - புற்று, மறி - மடங்கி, பாப்பு - பாம்பு.) பாம்பு புற்றுக்குள் நுழைகிய பொழுது தலையை மேலாகவும், வாலைக் கீழாகவும் கொண்டு செல்வது போல, செய்யுளின் இறுதிச் சொல் அல்லது அடி கீழ், மேலாய்ச் சென்று பொருள் தருவது, அளைமறிபாப்புப் பொருள்கோள். |
| 7 | கொண்டு கூட்டுப் பொருள்கோள் | ஒரு செய்யுளின் பல அடிகளுக்குள் சிதறிக் கிடக்கும் சொற்களைப் பொருள் உணர்வுக்கேற்பக் கொண்டு கூட்டிப் பொருள் காணும் முறைமைக்கு, கொண்டு கூட்டுப் பொருள்கோள் என்பது பெயர். |
| 8 | அடிமறிமாற்றுப் பொருள்கோள் | ஒரு செய்யுளின் அடிகளைப் பொருள் உணர்வுக்கு ஏற்றபடி அமைத்துப் பொருள் காணும் முறை அடிமறிமாற்றுப் பொருள்கோள் எனப்படும். |

மாணாக்கர்களே !

ஒரே அடிக்குள் சொற்களை முறை மாற்றிக் கொள்வது மொழிமாற்றுப் பொருள்கோள். வெவ்வேறு அடியில் உள்ள சொற்களைக் கொண்டு கூட்டுவது கொண்டுகூட்டுப் பொருள்கோள் என்னும் வேறுபாட்டையும் அறிந்து கொள்க.

இவ்வாறு, பொருள் கொள்ளும் முறைமையறிந்து செய்யுள்களுக்குப் பொருள் உணர்ந்தால், செய்யுள் சுவையை முழுமையாக உணரவும், இலக்கிய இன்பம் பெறவும் இயலும்.

**வேற்றுமை (Case)**

**வேற்றுமை உருபுகள் (Case endings)**

பெயர்ச் சொல்லின் பொருளை வேறுபடுத்திக் காட்டுவது வேற்றுமை எனப்படும்.

அவ்வாறு வேறுபடுத்திக் காட்டுவதற்கு பெயர்ச்சொல்லின் இறுதியில் வரும் உருபுகள் வேற்றுமை உருபுகள் எனப்படும்.

இவ்வேற்றுமை எட்டு வகைப்படும். அவை :

1) முதல் வேற்றுமை, (எழுவாய் வேற்றுமை)

2) இரண்டாம் வேற்றுமை

3) மூன்றாம் வேற்றுமை

4) நான்காம் வேற்றுமை

5) ஐந்தாம் வேற்றுமை

6) ஆறாம் வேற்றுமை

7) ஏழாம் வேற்றுமை

8) எட்டாம் வேற்றுமை (விளி வேற்றுமை)

| எண் | வேற்றுமைகள் | வேற்றுமை உருபுகள் |
|---|---|---|
| 1 | முதல் வேற்றுமை (எழுவாய் வேற்றுமை என்றும் பெயர்) (Nominative case) | இதற்கு உருபு இல்லை |
| 2 | இரண்டாம் வேற்றுமை (செயப்படு பொருள் வேற்றுமை என்று பெயர்) (Accusative case) | இரண்டாம் வேற்றுமை உருபு - ஐ (ஆக்கல், அழித்தல், அடைதல், நீத்தல், ஒத்தல், உடைமை - ஆகிய பொருள்களையுணர்த்தும்.) |
| 3 | மூன்றாம் வேற்றுமை (Instrumental case) | ஆல், ஆன், ஒடு, ஓடு - என்பன உருபுகள். (கருவிப் பொருள், கருத்தாப் பொருள், பொருள்களில் இவை வரும்.) |
| 4 | நான்காம் வேற்றுமை (Dative case) | நான்காம் வேற்றுமை உருபு - கு (இது, கொடை, பகை, நட்பு, தகுதி, அதுவாதல், பொருட்டு, முறை என்னும் பொருள்களில் வரும்) |
| 5 | ஐந்தாம் வேற்றுமை (Ablative case) | ஐந்தாம் வேற்றுமை உருபுகள் - இல், இன். (இவை நீங்கல், ஒப்பு, எல்லை, ஏது என்னும் நான்கு பொருள்களை உணர்த்தும். |

| | | |
|---|---|---|
| 6 | ஆறாம் வேற்றுமை<br>(Genitive case) | அது, ஆது, அ- ஆகிய மூன்றும் ஆறாம் வேற்றுமை உருபுகள். (இவை, கிழமை (உரிமைப்) பொருளை உணர்த்தும். |
| 7 | ஏழாம் வேற்றுமை<br>(Locative case) | இல், கண், இடம், உள், மேல் - ஆகியவை ஏழாம் வேற்றுமை உருபுகள். (இவை இடப்பொருளை உணர்த்தும்) |
| 8 | எட்டாம் வேற்றுமை (விளி - அழைத்தல் வேற்றுமை என்றும் கூறுவர்)<br>(Vocative case) | எட்டாம் வேற்றுமைக்குத் தனி உருபு இல்லை. |

## அறுவகைப் பெயர்கள்

பெயர்ச் சொற்களை, அவையுணர்த்தும் பொருள் அடிப்படையில் ஆறு வகையாகப் பிரித்துக் கூறுவர். அவை :

1 பொருட்பெயர்
2 இடப்பெயர்
3 காலப் பெயர்
4 சினைப் பெயர்
5 குணப் (பண்புப்) பெயர்
6 தொழிற் பெயர்

என்பனவாம்.

| எண் | அறுவகைப் பெயர்கள் | எடுத்துக்காட்டுகள் |
|---|---|---|
| 1 | பொருட்பெயர் | இளங்கோ, யானை, கிளி, நாற்காலி - போல்வன. |
| 2 | இடப்பெயர் | கோவில், பள்ளி, குளம், தெரு, வீடு - போல்வன |
| 3 | காலப் பெயர் | குளிர்காலம், வைகறை, தைத் திங்கள், வெள்ளிக்கிழமை - போல்வன |
| 4 | சினைப் பெயர் | தலை, பூ, கொம்பு, வால்- - போல்வன. |

| | | |
|---|---|---|
| 5 | பண்புப் (குணப்) பெயர் | வெண்மை, சதுரம், அன்பு, இனிப்பு - போல்வன. |
| 6 | தொழிற் பெயர் | படித்தல், ஆடுதல், விளையாடுதல், தேடுதல் - போல்வன |

## ஆகுபெயர் (Metonymy)

ஒரு பொருளினுடைய **இயற்பெயர்,** அதனை உணர்த்தாமல் அதனோடு தொடர்புடைய மற்றொரு பொருளுக்குத் தொன்று தொட்டு ஆகிவருவது **ஆகுபெயர்** எனப்படும்.

| எண் | ஆகுபெயர் | எடுத்துக்காட்டுகள் |
|---|---|---|
| 1 | பொருளாகு பெயர் | "மல்லிகை மலர்ந்தது"- (மல்லிகை என்னும் சொல், வேர், செடி, சிலை, மலர் ஆகிய அனைத்தையும் உணர்த்தும். ஆயினும், இங்கு அதன் சிறப்பாகிய மலரை மட்டும் உணர்த்தி வருவதால் இதனைப் பொருளாகு பெயர் என்பர். |
| 2 | இடவாகுபெயர் | "தலைவரை வரவேற்க, ஊரே திரண்டது."- (ஊர் என்ற இடப்பெயர் ஊரிலுள்ள மக்களுக்கு ஆகிவந்தது.) |
| 3 | காலவாகு பெயர் | "டிசம்பர் பூத்தது" - (டிசம்பர் மாதத்தில் பூக்கும் பூ, பூத்தது எனக் காலத்தின் பெயர் அக்காலத்தில் பூக்கும் பூவுக்கு ஆகி வந்தது.) |
| 4 | சினையாகு பெயர் | "விளையாடுவதற்கு ஒரு கை குறைகிறது"-இத்தொடரில் 'கை' என்ற உறுப்பின் பெயர், முழுமையான ஒரு மனிதனைக் குறித்து வருகிறது.) |
| 5 | குணவாகு பெயர்<br>(பண்பாகு பெயர்) | "காவி அணிந்தார்" - (இத்தொடரில் காவி என்பது, நிறத்தைக் குறிக்காமல் அந்நிறத்திலுள்ள ஆடையைக் குறித்தது.) |

| | | |
|---|---|---|
| 6 | தொழிலாகு பெயர் | "வற்றல் எனக்குப் பிடித்த உண் பொருள்" - (இத்தொடரில், வற்றல் என்னும் தொழிற்பெயர் அதனை உணர்த்தாமல் அத்தொழிற்பட்ட உண்பொருளுக்கு ஆகி வந்தது.) |

எழுத்து - சொல்

பயிற்சி - 1

**Exercise 1**

I. கீழ்க்காணும் தொடர்களைப் படிக்கவும். அவற்றைச் சரியா? தவறா? என அறிந்து கூறவும். விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Read the following and say whether they are right or wrong. For answers, press the answer button.

1 பிழையறப் பேசுதலும் எழுதுதலும் மொழி கற்றலின் இலக்கு.

(விடை: சரி)

2 சார்பெழுத்துகள் மொத்தம் எட்டு.

(விடை: தவறு)

3 குற்றியலுகரம் என்பது சார்பெழுத்துகளுள் ஒன்று.

(விடை: சரி)

4 சொற்கள் இலக்கண வகை, இலக்கிய வகை என இரண்டு வகைப் பெறும்.

(விடை: சரி)

5 விடைகள் ஆறு வகைப் பெறும்.

(விடை: தவறு)

6 "பாண்டியன் பரிசு நூல் உள்ளதா? என, கடைக்காரரிடம் வினவுவதுகொளல் வினா.

(விடை: சரி)

7 ஊஞ்சல் கயிறு போன்று, முன்னும் பின்னும் சென்று பொருள் கொள்ளும் முறைமையை மொழிமாற்றுப் பொருள்கோள் என்பர்.

(விடை: தவறு)

8 'ஐ' என்பது நான்காம் வேற்றுமை உருபு.

(விடை: தவறு)

9 முதல் வேற்றுமைக்கு உருபு உண்டு.

(விடை: தவறு)

10 'கு' என்பது ஆறாம் வேற்றுமை உருபு ஆகும்.

(விடை: தவறு)

II. கீழ்க்காணும் கோடிட்ட இடங்களை நிரப்பச் சரியான சொற்களைக் கூறவும்.
விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Find the right words to fill in the blanks: For answers, press the answer button.

1 மொழி கற்றுக் கொள்ளும் இலக்கினை அடைய உதவுவது -------.
(விடை: இலக்கணம்)

2 நெடில் எழுத்தை ஒலிப்பதற்குரிய கால அளவு -------.
(விடை: **2** மாத்திரை)

3 "ஆலயம் தொழுவது சாலவும் நன்று" - இத்தொடரில் உள்ள "சால" என்பது ------------.
(விடை: இடைச்சொல்)

4 பகுபத உறுப்புகள் மொத்தம் ---------.
(விடை: ஆறு)

5 திரிசொல் என்பது ------------ சொல்.
(விடை: இலக்கிய வகை)

6 செய்பவன், கருவி, நிலம், செயல், காலம், செய்பொருள் ஆறிரையும் தெளிவாக உணர்த்துவது -----------,
(விடை: தெரிநிலை வினைமுற்று,)

7 வினா -------- வகைப் பெறும்.
(விடை: ஆறு)

8 விடை ------------ வகைப் பெறும்.
(விடை: எட்டு)

9 செய்யுளின் இறுதிச் சொல்லை முதற்சொல்லோடு சேர்த்துப் பொருள் கொள்ளுதல் -------------.
(விடை: பூட்டுவிற்பொருள்கோள்)

10 "என்னே! தமிழின் இனிமை! என்று கூறுவது --------- வாக்கியம்.
(விடை: உணர்ச்சி வாக்கியம்)

III. கீழ்க்காணும் வினாக்களுக்குச் சரியான விடையைத் தேர்ந்தெடுத்து எழுதவும். விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Choose the right answer for the following questions. For answers, press the answer button.

1 மெய்யெழுத்தினை ஒலிப்பதற்கு உரிய கால அளவு

அ) 1 மாத்திரை

ஆ) 1 1/2 மாத்திரை

இ) 2 மாத்திரை

ஈ) 1/2 மாத்திரை

(விடை: **ஈ) 1/2 மாத்திரை**)

2 "குங்குமம்" என்னும் சொல்

அ) இயற்சொல்

ஆ) திரிசொல்

இ) வடசொல்

ஈ) திசைச்சொல்

(விடை: **இ) வடசொல்**)

3 திருக்குறளில் கல்வி அதிகாரம் படித்தாயா? என ஆசிரியர், மாணாக்கரை வினவுவது

அ) ஐயவினா

ஆ) அறிவினா

இ) ஏவல்வினா

ஈ) அறியாவினா

(விடை: **இ) ஏவல் வினா**)

4 "மலை ஏறுவாயோ?" என்னும் வினாவுக்கு, "கால் வலிக்கும்" என்று விடை கூறுவது

அ) உறுவது கூறல்

ஆ) உற்றது உரைத்தல்

இ) எதிர் வினாதல்

ஈ) இனமொழி

(விடை: **அ) உறுவது கூறல்**)

5 பொருள்கோளின் வகை

அ) ஐந்து

ஆ) ஏழு

இ) ஆறு

ஈ) எட்டு

(விடை: ஈ) எட்டு)

6 நான்காம் வேற்றுமை உருபு

அ) ஐ

ஆ) ஆன்

இ) கு

ஈ) கண்

(விடை: இ) கு)

7 விளி வேற்றுமை என்று பெயர் வழங்குவது

அ) ஆறாம் வேற்றுமை

ஆ) ஏழாம் வேற்றுமை

இ) எட்டாம் வேற்றுமை

ஈ) முதல் வேற்றுமை

(விடை: இ) எட்டாம் வேற்றுமை)

8 "வற்றல் எனக்குப் பிடித்த உண்பொருள்" என்பது

அ) பொருளாகு பெயர்

ஆ) தொழிலாகு பெயர்

இ) இடவாகு பெயர்

ஈ) காலவாகு பெயர்

(விடை: ஆ) தொழிலாகு பெயர்)

9 'வாழ்க' என்ற சொல்லில் விகுதி எது?

அ) வாழ்

ஆ) வா

இ) க

ஈ) வாக

(விடை: இ) க)

10 காலங்காட்டும் இடைநிலைகள் யாவை ?

அ) கிறு ,கின்று, ஆநின்று

ஆ) ப், வ்

இ) த், ட் ,ற், ன்

ஈ) அ ,ஆல் ,இல்

(விடை: இ) த், ட் ,ற், ன்)

எழுத்து - சொல் பயிற்சி - 4

Exercise 4

IV கீழ்க்காணும் வினாக்களுக்கு ஒருவரியில் விடை தரவும். விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Answer the following questions in a line each: For answers, press the answer button.

1 மொழி கற்றலின் இலக்கு யாது?

(விடை: பிழையறப் பேசுதல், பிழையற எழுதுதல் ஆகியவை மொழி கற்றலின் இலக்கு..)

2 சொல் என்றால் என்ன?

(விடை: ஓரெழுத்துத் தனித்து நின்றோ ஒன்றுக்கு மேற்பட்ட எழுத்துகள் தொடர்ந்து நின்றோ பொருள் தருவது சொல் எனப்படும்.)

3 மாத்திரை என்றால் என்ன?

(விடை: தமிழில் எழுத்துகளை ஒலிப்பதற்கு உரிய கால அளவு மாத்திரை எனப் பெறும்.)

4 வினா எத்தனை வகைபெறும்?

(விடை: வினா ஆறு வகைபெறும்.)

5 விடை எத்தனை வகைபெறும்?

(விடை: விடை எட்டு வகைபெறும்.)

6 பொருள்கோள் என்றால் என்ன?

(விடை: பொருள்கொள்வதற்கு ஏற்ப, செய்யுளில் உள்ள சொற்களை மாற்றியமைத்துக் கொள்ளுதல் பொருள்கோள் எனப்பெறும்.)

7 மூன்றாம் வேற்றுமை உருபுகள் எவை?

(விடை: ஆல், ஆன், ஒடு, ஓடு என்பன மூன்றாம் வேற்றுமை உருபுகள்.)

8 ஆகுபெயர் என்றால் என்ன?

(விடை: ஒரு பொருளின் இயற்பெயர், அதனோடு தொடர்புடைய மற்றொரு பொருளுக்குத் தொன்றுதொட்டு ஆகிவருவது ஆகுபெயர் எனப் பெறும்.)

9 நான்காம்

(விடை: நான்காம் வேற்றுமை உருபு 'கு'.)

10 இரண்டாம் வேற்றுமை உருபு எது?

(விடை: இரண்டாம் வேற்றுமை உருபு 'ஐ'.)

# 14.புணர்ச்சி

புணர்ச்சி

பொது அறிமுகம்

**General Introduction**

அன்புள்ள மாணவர்களே! வணக்கம்

புணர்தல் என்னும் சொல்லுக்குச் சேர்தல் என்னும் பொருள் உண்டு என்பதை நீங்கள் அறிவீர்கள்.

ஒரு சொல்லோடு மற்றொரு சொல் சேருவதை இலக்கணத்தில் புணர்ச்சி என்று வழங்குவர். இதுகுறித்து இப்பாடத்தில் விரிவாகக் கற்றுக் கொள்ள இருக்கின்றீர்கள்!

புணர்ச்சி

பாட அறிமுகம்

**Introduction to Lesson**

மாணாக்கர்களே! முன் வகுப்பில் கற்ற புணர்ச்சி விதிகளையும் எடுத்துக் காட்டுகளையும் மீண்டும் நினைவு படுத்திக் கொள்க.

இனி, மேல் வகுப்பில், பல, சில என்னும் சொற்களின் புணர்ச்சி, திசைப் பெயர்ப் புணர்ச்சி, மையீற்றுப் பண்புப் பெயர்ப் புணர்ச்சி, குற்றியலுகரப் புணர்ச்சி, உடம்படுமெய்ப் புணர்ச்சி, பூப்பெயர்ப் புணர்ச்சி, வேற்றுமைப் புணர்ச்சி இன்ன பிறவற்றைப் படிக்க இருக்கிறீர்கள்.

புணர்ச்சி

பாடம்

**Lesson**

புணர்ச்சி விதிகள்

மாணவ மாணவியரே !

வாழை மரம்

இத்தொடரில் வாழை என்பது நிலையான சொல். இதனை நிலைமொழி என்பர். மரம் என்பது வந்து சேர்ந்த சொல். இதனை, வருமொழி என்பர்.

நிலைமொழியும் வருமொழியும் சேரும் பொழுது எவ்வித மாறுபாடும் இல்லாமல் சேருவதை **இயல்பு புணர்ச்சி** என்பர்.

நிலைமொழியும் வருமொழியும் சேரும் பொழுது, ஏதேனும் ஓர் எழுத்துத் தோன்றுதல், இருக்கும் எழுத்துத் திரிதல் அல்லது கெடுதல் ஆகிய மாறுபாடுகள் அடைவதை விகாரப் புணர்ச்சி என்பர்.

வாழைமரம் - இயல்பு புணர்ச்சி

வாழைப்பழம் - விகாரப்புணர்ச்சி

மாணாக்கரே!

இயல்பு புணர்ச்சிக்கு எடுத்துக்காட்டு **இயல்பு புணர்ச்சி** என்ற தொடரே அமையும். இதே போல் **விகாரப் புணர்ச்சிக்கு** எடுத்துக்காட்டாக, விகாரப் புணர்ச்சி என்பதே அமைதலையும் காண்க.

இவ்வாறு தோன்றல், திரிதல், கெடுதல் என்பன யாவும் சில விதிகளின் படியே அமையும். அவ்விதிகளைப் **புணர்ச்சி விதிகள்** என்பர்.

புணர்ச்சி என்றால் என்ன என்பதையும், அதன் அடிப்படை இலக்கணத்தையும் முன் வகுப்பில் படித்தீர்கள் அல்லவா? அதை நினைவு படுத்திக் கொண்டு, மேலும், சில புணர்ச்சி இலக்கணத்தை, விதிகளின்படி சொற்கள் புணருமாற்றை இவ்வகுப்பில் படித்தறியுங்கள்!

**பல, சில என்பனவற்றின் புணர்ச்சி**

பல + பல = பலபல

சில + சில = சிலசில

இவை இயல்பாகப் புணர்ந்துள்ளன.

பல + பல = பலப்பல

சில + சில = சிலச்சில

இவை வருமொழி முதலில் உள்ள வல்லின எழுத்து மிக்குப் புணர்ந்துள்ளன.

பல + பல = பற்பல

சில + சில = சிற்சில

இவற்றில், நிலை மொழியில் ஈற்றில் உள்ள அகரம் கெட்டு, லகரம் றகரமாய்த் திரிந்துள்ளன.

இவ்வாறு, பல, சில என்னும் இரு சொற்களும் தமக்கு முன் தாம் வருமாயின் (பல + பல ; சில + சில) இயல்பாகவும், வல்லெழுத்து மிக்கும், நிலைமொழி ஈற்றின் அகரம் கெட்டு லகரம் றகரமாகத் திரிந்தும் புணரும்.

மேலும், பல, சில என்னும் சொற்களின் முன், பிற சொற்கள் வந்தால் நிலைமொழியின் அகரம் கெட்டுப் புணரும் ; கெடாமலும் புணரும் என்பதையும் அறிந்து கொள்க.

இதற்கான சில எடுத்துக்காட்டுகள் பின்வருமாறு :

பல + கலை = பலகலை ; பல்கலை

பல + சாலை = பலசாலை ; பல்சாலை

பல + தொடை = பலதொடை ; பஃதொடை

பல + மலர் = பலமலர் ; பன்மலர்

பல + நாடு = பலநாடு ; பன்னாடு

பல + வேண்டி = பலவேண்டி; பல்வேண்டி

பல + அரண் = பலஅரண் ; பல்லரண்

சில + சொல் = சிலசொல் ; சில்சொல்

சில + மலர் = சிலமலர் ; சின்மலர்

சில + வளை = சிலவளை ; சில்வளை

சில + அணி = சிலவணி ; சில்லணி

இதற்கான புணர்ச்சி விதி கூறும் நூற்பா :

**பல சில எனும் இவை தம்முன் தாம்வரின்**
**இயல்பும், மிகலும், அகரம் ஏக**
**லகரம் றகரம் ஆகலும் பிறவரின்**
**அகரம் விகற்பம் ஆகலும் உள பிற.**

- (நன்னூல் நூற்பா - 170)

(**விகற்பம் ஆகல்** - ஒரே புணர்ச்சியில் அகரம் கெட்டுப் புணர்தல் ; கெடாது நின்றும் புணர்தல்)

**திசைப் பெயர்ப் புணர்ச்சி**

அன்பார்ந்த மாணவ மாணவியரே !

வடக்கு, தெற்கு, கிழக்கு, மேற்கு என்பன திசையை உணர்த்தும் பெயர்களாதலால் இவை **திசைப் பெயர்கள்** ஆகும் என்பதை நீங்கள் அறிவீர்கள் !

ஒரு திசைப் பெயரோடு மற்றொரு திசைப் பெயரும் (வடக்கு + கிழக்கு = வடகிழக்கு) பிற பெயர்களும் (தெற்கு + நாடு = தென்னாடு) சேருவதைத் **திசைப்பெயர்ப் புணர்ச்சி** என வழங்குகிறோம்.

திசைப் பெயர்ப் புணர்ச்சிக்கான விதிமுறைகளை இப்பகுதியில் காண்போம்.

வடக்கு + கிழக்கு = வடகிழக்கு
வடக்கு + மேற்கு = வடமேற்கு

வடக்கு + வேங்கடம் = வடவேங்கடம்

குடக்கு + திசை = குடதிசை

(மேற்கு)

குணக்கு + திசை = குணதிசை

(கிழக்கு)

இவை நிலைமொழியின் ஈற்றில் உள்ள க் என்னும் மெய்யெழுத்தும், கு என்னும் உயிர்மெய்யெழுத்தும் கெட்டுப் புணர்ந்தன.

(வடக்கு + கிழக்கு - வடக்கு + கிழக்கு = வடகிழக்கு)

தெற்கு + கிழக்கு = தென்கிழக்கு

தெற்கு + மேற்கு = தென்மேற்கு

தெற்கு + குமரி = தென்குமரி

தெற்கு + பாண்டி = தென்பாண்டி

இவை, நிலைமொழியீற்றில் உள்ள கு என்னும் உயிர்மெய் கெட்டு, றகர மெய் னகர மெய்யாகத் திரிந்து புணர்ந்தன.

(தெற்கு + கிழக்கு - தெற்(ன்)+ கிழக்கு = தென்கிழக்கு)

மேற்கு + காற்று = மேல்காற்று

மேற்கு + ஊர் = மேலூர்

இத்திசைப் பெயர், திசைப் பெயரல்லாத வேறு பெயர்களோடு சேரும் பொழுது, நிலைமொழியிலுள்ள உயிர்மெய்யெழுத்தான கு கெட்டு, றகர மெய், லகர மெய்யாகத் திரிந்து புணர்ந்தன.

(மேற்கு + காற்று - மேற்(ல்) + காற்று = மேல்காற்று)

கிழக்கு + கடல் = கீழ்கடல்

கிழக்கு + நாடு = கீழ்நாடு

இத்திசைப் பெயர், பிறவற்றோடு சேரும் பொழுது, நிலைமொழியில் உள்ள ககர ஒற்றும், ஈற்றும் உயிர்மெய்யெழுத்தான குவ்வும், கிழ என்பதில் உள்ள அகரம் கெட்டுக் கீழ் என முதல் எழுத்து நீண்டும் புணர்ந்தன.

மேற்காட்டியவாறு, திசைப் பெயர்கள் புணரும் முறைகளைக் கூறும் நூற்பா பின்வருமாறு :

திசையொடு திசையும் பிறவும் சேரின்
நிலையீற்று உயிர்மெய் கவ்வொற்று நீங்கலும்
றகரம் னலவாகத் திரிதலும் ஆம் பிற.

- (நன்னூல் நூற்பா - 186)

**மையீற்றுப் பண்புப் பெயர்ப் புணர்ச்சி**

அன்புக்குரிய மாணவ மாணவியரே !

நன்மை, தீமை, மென்மை, மேன்மை, வெண்மை, செம்மை போல்வன, மை என்னும் விகுதியைக் கொண்டு முடிந்து பண்பை உணர்த்தும் பெயர்கள். ஆதலால் இவற்றை **மையீற்றுப் பண்புப் பெயர்கள்** என்பர்.

இதனை அறிய, கீழ்க்காணும் நூற்பாவை அறிந்து கொள்க.

செம்மை சிறுமை சேய்மை தீமை
வெம்மை புதுமை மென்மை மேன்மை
திண்மை உண்மை நுண்மை இவற்றெதிர்
இன்னவும் பண்பின் பகாநிலைப் பதமே

- (நன்னூல் நூற்பா - 135)

மேற்காட்டிய மையீற்றுப் பண்புப் பெயர்கள் நிலைமொழியாக நின்று, வருமொழியோடு புணரும் போது அடையும் மாற்றங்களைக் கீழ்வருமாறு அறிந்து கொள்க.

1. நல்லன் = நன்மை + அன்
   வெண்பட்டு = வெண்மை + பட்டு
   வெண்குடை = வெண்மை + குடை
   செம்மலர் = செம்மை + மலர்

இவை மை விகுதி மட்டும் கெட்டுப் புணர்ந்தன.

2. பெரியன் = பெருமை + அன்

சிறியன் = சிறுமை + அன்

பண்புப் பகுதிகளின் மை விகுதி கெடுவதோடு, இடையில் உள்ள உகரம் (ரு, று) இகரமாகத் (ரி, றி) திரிந்துள்ளன.

3. மூதூர் = முதுமை + ஊர்

பாசி = பசுமை + இ

முதுமை என்பதன் ஈறு (மை) போய், ஆதி (முதல்) நீண்டு மூதூர் என்று ஆயிற்று. பசுமை என்பதில் ஈறு போய் ஆதி நீண்டு பாசி என ஆயிற்று.

4. பைங்கொடி = பசுமை + கொடி

பைந்தார் = பசுமை + தார்

இவற்றுள் பசுமை என்பதன் ஈறு போய் முதல் நின்ற அகரம் (ப) ஐகாரமாய்த் திரிந்து (பை) வருமொழியின் முதல் எழுத்து இனவெழுத்தாய் (ங், ந்) மெய் மிகுந்து புணர்ந்துள்ளன.

5. சிற்றூர் = சிறுமை + ஊர்

வெற்றிலை = வெறுமை + இலை

இவற்றின் ஈறு போய் (மை) நடுவில் உள்ள ஒற்று இரட்டித்துப் புணர்ந்துள்ளன.

6. வெவ்வேல் = வெம்மை + வேல்

வெந்நீர் = வெம்மை + நீர்

இவற்றில், வெம்மை என்பதன் ஈறு (மை) போய், முன் ஒற்றாகிய மகர வொற்று வகர ஒற்றாகவும், 'ந'கர ஒற்றாகவும் (வ், ந்) திரிந்து முடிந்தன.

7. செங்கோல் = செம்மை + கோல்

செந்தமிழ் = செம்மை + தமிழ்

இவற்றில், செம்மை என்பதன் ஈறு (மை) போய், வருமொழி முதல் எழுத்துக்கு இனவெழுத்துகளான (ங், ந்) என்பன மிக்குப் புணர்ந்துள்ளன.

மேற்காட்டிய, மையீற்றுப் பண்புப் பெயர்கள் புணர்ச்சியில் அடையும் மாற்றங்களைக் கீழ்க்காணும் நூற்பா விளக்குகின்றது. அதனைப் படித்து, நினைவில் நிறுத்துங்கள்.

**ஈறுபோதல் ; இடை உகரம் இய்யாதல் ;**
**ஆதி நீடல் ; அடியகரம் ஐஆதல் ;**
**தன்னொற்று இரட்டல் ; முன்னின்ற மெய் திரிதல் ;**
**இனம்மிகல் இனையவும் பண்பிற்கு இயல்பே.**

- (நன்னூல் நூற்பா - 136)

அன்பு மாணவ மாணவியரே !

மேற்காட்டிய நூற்பாவின் அடிப்படையில் கீழ்க்காணும் முறையில், மையீற்றுப் பண்புப் பெயர்ப் புணர்ச்சியை மீண்டும் நினைவு கூர்க.

**விதி** **எடுத்துக்காட்டு**

1. ஈறு போதல் - வெண்மை + குடை = வெண்குடை

2. இடை உகரம் இய்யாதல் - பெருமை + அன் = பெரியன்

3. ஆதி நீடல் - பெருமை + ஊர் = பேரூர்

4. அடியகரம் ஐ ஆதல் - பசுமை + பொழில்= பைம்பொழில்

5. தன்னொற்று இரட்டல் - சிறுமை + ஊர் = சிற்றூர்

6. முன்னின்ற மெய் திரிதல் - வெம்மை + நீர் = வெந்நீர்

7. இனம் மிகல் - செம்மை + தமிழ் = செந்தமிழ்

**உடலும் உயிரும்**

மாணாக்கச் செல்வங்களே !

தமிழ் + ஆசிரியர் = தமிழாசிரியர்

கடவுள் + அருள் = கடவுளருள்

பொருள் + அனைத்தும் = பொருளனைத்தும்

இவை எவ்வாறு இப்படிப் புணர்ந்தன?

நிலைமொழியின் ஈற்றெழுத்து மெய்யெழுத்தாக இருந்து, வருமொழியின் முதல் எழுத்து உயிரெழுத்தாகவும் இருந்தால் அவை தாமே ஒன்று சேர்ந்து விடும்.

இதற்குரிய விதி,

**உடல்மேல் உயிர்வந்து ஒன்றுவது இயல்பே**

- (நன்னூல் நூற்பா - 204)

**பூப்பெயர்ப் புணர்ச்சி**

பூ + கொடி = பூங்கொடி

பூ + சோலை = பூஞ்சோலை

பூ + தோட்டம் = பூந்தோட்டம்

பூ + பாவை = பூம்பாவை

**பூ** என்னும் சொல் நிலைமொழியாக இருந்து, வருமொழி முதலில் வல்லினம் வந்தால், அதற்கு இனமான மெல்லெழுத்துமிக்குப் புணரும்.

இதற்குரிய விதி,

**பூப்பெயர் முன் இனமென்மையும் தோன்றும்**

- (நன்னூல் நூற்பா - 200)

மென்மையும் - என்ற உம்மையால், அதே வல்லெழுத்து வந்து புணரும்.

(பூ + கொடி = பூங்கொடி ; பூ + கொடி = பூக்கொடி

பூ + கூடை = பூக்கூடை)

**தேங்காய் - புணர்ச்சி**

அன்பு மாணவ மாணவியரே !

தேங்காய் - இச்சொல்லின் பகுதி என்ன தெரியுமா 'தெங்கு' (தென்னை) என்பதாகும்.

தெங்கு + காய் = தேங்காய்

'தெங்கு' என்பது தேங்கு என நீண்டு, ஈற்றிலுள்ள 'கு' என்னும் உயிர்மெய்யெழுத்துக் கெட்டு, தேங்காய் என ஆனது.

இதற்குரிய விதி,

**தெங்கு நீண்டு ஈற்று உயிர்மெய் கெடும் காய்வரின் என்பதாகும்.**

**தனிக்குறில் முன் ஒற்று**

கண் + ஒளி = கண்ணொளி

பண் + ஓசை = பண்ணோசை

மண் + ஓசை = மண்ணோசை

இவ்வாறு, நிலைமொழியில் தனிக்குற்றெழுத்தின் முன் மெய்வந்து வருமொழி முதலில் உயிர் வந்தால், நிலைமொழி இறுதியில் உள்ள மெய்யெழுத்து இரட்டித்துப் புணரும்.

(கண்ண்+ ஒளி = கண்ணொளி)

இதற்குரிய விதி,

**தனிக்குறில்முன் ஒற்று உயிர்வரின் இரட்டும்**

என்பதாகும்.

**உடம்படுமெய்**

அன்பு மாணாக்கச் செல்வங்களே !

மணி + அடித்தது = மணியடித்தது. (இ)
தீ + எரிந்தது = தீயெரிந்தது (ஈ)
வாழை + இலை = வாழையிலை (ஐ)
நிலா + அழகு = நிலாவழகு (வ)
சே + அழகு = சேயழகு ; சேவழகு (ய,வ)

நிலைமொழியில் இகர, ஈகார, ஐகார ஈறுகள் வந்து வருமொழி முதலில் உயிர் வந்தால், இடையில் (ய்) யகர உடம்படுமெய் தோன்றும். பிற உயிர்கள் இருப்பின் (வ்) வகர உடம்படுமெய் தோன்றும். ஏகாரம் இருப்பின் யகரம் வகரம் ஆகிய இரண்டு உடம்படுமெய்களும் தோன்றும்.

உடம்படுமெய் விதியாவது,

இ, ஈ ஐ வழி யவ்வும் ஏனை
உயிர்வழி வவ்வும் ஏ முன் இவ்விருமையும்
உயிர்வரின் உடம்படுமெய் யென்றாகும்.

**உடம்படுமெய் ஒரு விளக்கம் :**

அன்பு மாணாக்கர்களே !

இரண்டு சொற்கள் புணரும் பொழுது, நிலைமொழி ஈறும், வருமொழி முதலும் உயிரெழுத்துகளாக இருப்பின் அவ்விரு சொற்களும் ஒன்றுபடாது விட்டிசைக்கும். அவை சேர்ந்திசைக்க வேண்டி, உடம்படாத அவ்விரண்டும்

உடம்படுதற்கு (ஒன்று சேர்வதற்கு) அவற்றின் இடையே யகரமும், வகரமும் தோன்றும். இவ்வாறு, ஒன்றுபடுத்தற்காக வரும் மெய்களை உடம்படுமெய் என்பர்” என்பதறிக.

## வல்லினம் மிகும் இடங்களும் மிகா விடங்களும்

அன்புக்குரிய மாணவ மாணவியரே !

தமிழில் சொற்களையும் சொற்றொடர்களையும் எழுதும்பொழுது கருத்திற் கொள்ள வேண்டுவன பற்றிச் சிறிது காண்போம்.

எழுதும்பொழுது, சில இடங்களில் வல்லெழுத்துகள் (க், ச், த், ப்) மிக்கு வரும் ; சில இடங்களில் மிகாமல் வரும். மிக்கு வர வேண்டிய இடங்களில் அவற்றை எழுதாமலும், மிகா இடங்களில் அவற்றை எழுதியும் விடுவதால் பிழை தோன்றும் ; மொழி மரபும் சிதையும்.

எடுத்துக்காட்டாக, யானைத் தந்தத்தால் செய்த பொம்மையைக் குறிப்பிடும் பொழுது **தந்தப்பொம்மை** என்று வல்லினம் மிக்கு எழுத வேண்டும். அவ்வாறு எழுதாமல் **தந்த பொம்மை** (வல்லினம் மிகாமல்) என்று எழுதினால், **‘யாரோ ஒருவர் தந்த பொம்மை’** என்று பொருள் மாற்றம் ஏற்பட்டு விடும்.

இது போன்ற பிழை ஏற்படாமல் எழுதிட, **வல்லினம் மிகும் இடங்கள், வல்லினம் மிகா இடங்கள்** பற்றிய இலக்கண மரபு மாணாக்கருக்குத் தெரிந்திருந்தல் வேண்டும்.

அவை பற்றி, பின்வருமுறையில் சில எடுத்துக்காட்டுகளுடன் அறிந்து கொள்க.

### வல்லின எழுத்துகள் மிகும் இடங்கள்

1. அந்த, இந்த - முதலான சுட்டுத் திரிபுகளுக்குப் பின் வரும் வல்லினம் மிகும்.

அந்த + பையன் = அந்த**ப்**பையன்

இந்த + பெட்டி = இந்தப்பெட்டி

2. அத்துணை, இத்துணை, எத்துணை என்னுஞ் சொற்களுக்குப் பின்வரும் வல்லினம் மிகும்.

அத்துணை + புகழ் = அத்துணைப் புகழ்
இத்துணை + செழுமை = இத்துணைச் செழுமை
எத்துணை + கொடுமை = எத்துணைக்கொடுமை

3. அவ்வகை, இவ்வகை, எவ்வகை என்னும் சொற்களின் பின்வரும் வல்லினம் மிகும்.

அவ்வகை + காடு = அவ்வகைக்காடு
இவ்வகை + தோப்பு = இவ்வகைத்தோப்பு
எவ்வகை + பெயர் = எவ்வகைப்பெயர்

4. மற்ற, மற்று, மற்றை - என்னும் சொற்களின் பின்வரும் வல்லினம் மிகும்.

மற்ற + கலைகள் = மற்றக்கலைகள்
மற்று + சிலை = மற்றுச்சிலை
மற்றை + பயன் = மற்றைப்பயன்

5. "இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்க தொகையில்" வரும் வல்லினம் மிகும்.

மோர் + குடம் = மோர்க்குடம்
மலர் + கூந்தல் = மலர்க்கூந்தல்
தயிர் + பானை = தயிர்ப்பானை
தண்ணீர் + தொட்டி = தண்ணீர்த்தொட்டி

6. "மூன்றாம் வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்க தொகையில்" வரும் வல்லினம் மிகும்.

மரம் + பெட்டி = மரப்பெட்டி

இரும்பு + தூண் = இரும்புத் தூண்

தங்கம் + தாலி = தங்கத்தாலி

7. “நான்காம் வேற்றுமையுருபும் பயனும் உடன்தொக்க தொகையில்” வரும் வல்லினம் மிகும்.

குடை + கம்பி = குடைக்கம்பி

சட்டை + துணி = சட்டைத்துணி

8. “ஐந்தாம் வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்க தொகையில்” வரும் வல்லினம் மிகும்.

அடுப்பு + புகை = அடுப்புப்புகை

விழி + புனல் = விழிப்புனல்

9. “பண்புத் தொகையில்’ வரும் வல்லினம் மிகும்.

புது + குடம் = புதுக்குடம்

வட்டம் + பலகை = வட்டப்பலகை

பொய் + செய்தி = பொய்ச்செய்தி

10. ‘இரு பெயரொட்டுப் பண்புத் தொகையில்’ வல்லினம் மிகும்.

வேழம் + கரும்பு = வேழக்கரும்பு

தாமரை + பூ = தாமரைப்பூ

மார்கழி + திங்கள் = மார்கழித்திங்கள்

11. ‘உவமைத் தொகையில்’ வரும் வல்லினம் மிகும்.

தாமரை + கண்ணன் = தாமரைக்கண்ணன்

பவளம் + செவ்வாய் = பவளச்செவ்வாய்

மலை + தோள் = மலைத்தோள்

12. “அரை, பாதி என்னும் எண்ணுப்பெயர்ச் சொற்களின்” பின்வரும் வல்லினம் மிகும்.

அரை + காணி = அரைக்காணி

அரை + படி = அரைப்படி

பாதி + பங்கு = பாதிப்பங்கு

அரை + தொட்டி = அரைத்தொட்டி

பாதி + செலவு = பாதிச்செலவு

13. ‘முற்றிலுகரச் சொற்களின் பின்’ வரும் வல்லினம் மிகும்.

திரு + கோவில் = திருக்கோவில்

புது + பை = புதுப்பை

பொது + சாலை = பொதுச்சாலை

14. “தனிக்குறிலை அடுத்து வரும் ‘ஆ’காரத்தின் பின்வரும் வல்லினம் மிகும்.

வினா + குறி = வினாக்குறி

பலா + பழம் = பலாப்பழம்

15. ‘ஆய், போய் என்னும் வினை எச்சங்களுக்கப்’ பின்வரும் வல்லினம் மிகும்.

கருத்தாய் + கேட்டாள் = கருத்தாய்க்கேட்டாள்

அன்பாய் + சொன்னார் = அன்பாய்ச்சொன்னார்

போய் + பார் = போய்ப்பார்

16. முன்னர், பின்னர் என்னும் இடைச்சொற்களுக்குப் பின்வரும் வல்லினம் மிகும்.

முன்னர் + கண்டோம் = முன்னர்க்கண்டோம்

பின்னர் + காண்போம் = பின்னர்க்காண்போம்

முன்னர் + செல்க = முன்னர்ச்செல்க

பின்னர் + பணிந்தார் = பின்னர்ப்பணிந்தார்

17. வன்தொடர்க் குற்றியலுகரத்தின் பின் வரும் வல்லினம் மிகும்.

பட்டு + சேலை = பட்டுச்சேலை
பத்து + பாட்டு = பத்துப்பாட்டு

**வல்லின எழுத்துகள் மிகா இடங்கள்**

அன்புக்குரிய மாணவ மாணவியரே !

வல்லின எழுத்துகளாகிய க், ச், த், ப் என்பன மிக்கு வரக்கூடிய இடங்கள் எவையென முன்பகுதியில் படித்தீர்கள். அல்லவா? இனி, இப்பதியில் அவ்வெழுத்துகள் மிகா இடங்கள் எவை என்பதற்குச் சில எடுத்துக்காட்டுகள் காண்போம்.

1. 'அவ்வளவு, இவ்வளவு, எவ்வளவு' - என்னும் சொற்களின் பின்வரும் வல்லினம் மிகாது.

அவ்வளவு + பெரிது = அவ்வளவுபெரிது
இவ்வளவு + கனிவா = இவ்வளவு கனிவா?
எவ்வளவு + தொலைவு = எவ்வளவு தொலைவு?

2. 'அத்தனை, இத்தனை, எத்தனை' - என்னும் சொற்களின் பின் வரும் வல்லினம் மிகாது.

அத்தனை + புத்தகங்களா = அத்தனை புத்தகங்களா?
இத்தனை + தொழில்களா = இத்தனை தொழில்களா?
எத்தனை + கருவிகள் = எத்தனை கருவிகள்?

3. வினாப் பொருள் உணர்த்தும் ஆ, ஓ, ஏ என்னும் வினா எழுத்துகளின் பின்வரும் வல்லினம் மிகாது.

அவனா + கேட்டான் = அவனா கேட்டான்?
அவளா + சொன்னாள் = அவளா சொன்னாள்?
யாரே + கண்டார் = யாரே கண்டார்?

4. ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சங்கள் தவிர, மற்றப் பெயரெச்சங்களுக்குப் பின்வரும் வல்லினம் மிகாது.

பெரிய + பெண் = பெரிய பெண்
கற்ற + சிறுவன் = கற்ற சிறுவன்
நில்லாத + செல்வம் = நில்லாத செல்வம்
அழியாத + கல்வி = அழியாத கல்வி

5. 'எட்டு, பத்து' ஆகியவை தவிர மற்ற எண்ணுப்பெயர்களின் பின்வரும் வல்லினம் மிகாது.

ஒன்று + கேள் = ஒன்று கேள்
ஒரு + பொருள் = ஒரு பொருள்
இரண்டு + புத்தகம் = இரண்டு புத்தகம்
இரு + பறவை = இரு பறவை
மூன்று + குறிக்கோள் = மூன்று குறிக்கோள்
நான்கு + பேர் = நான்கு பேர்
ஐந்து + கதைகள் = ஐந்து கதைகள்
ஆறு + கோவில் = ஆறு கோவில்
அறு (ஆறு) + சீர் = அறுசீர்
ஏழு + சான்றுகள் = ஏழு சான்றுகள்
ஏழு + பிறப்பு = எழு பிறப்பு
ஒன்பது + சுவைகள் = ஒன்பது சுவைகள்

6. 'இரட்டைக் கிளவியிலும், அடுக்குத் தொடரிலும்' வல்லினம் மிகாது.

கல + கல = கலகல
சட + சட = சடசட
பள + பள = பளபள
} - இரட்டைக் கிளவிகள்

தீ + தீ = தீதீ
பார் + பார் = பார்பார் !
} - அடுக்குத்தொடர்கள்

7. வியங்கோள் வினைமுற்றுகளின் பின் வல்லினம் மிகாது.

கற்க + கசடற = கற்க கசடற

வெல்க + தமிழ் = வெல்க தமிழ்

வீழ்க + தண்புனல் = வீழ்க தண்புனல்

8. 'அஃறிணைப் பன்மை' முன்வரும் வல்லினம் மிகாது.

பல + பசு = பல பசு

சில + கலை = சில கலை

அவை + தவித்தன = அவை தவித்தன

9. 'ஏவல் வினை' முன் வரும் வல்லினம் மிகாது.

வா + கலையரசி = வா கலையரசி

எழு + தம்பி = எழு தம்பி

போ + செல்வி = போ செல்வி

பார் + பொண்ணே = பார் பெண்ணே !

10. 'மூன்றாம் வேற்றுமை உருபுகளாகிய ஒடு, ஓடு' ஆகியவற்றின் பின் வல்லினம் மிகாது.

கோவலனொடு + கண்ணகி வந்தாள் = கோவனொடு கண்ணகி வந்தாள்.

துணிவோடு + செல்க = துணிவோடு செல்க.

அண்ணனோடு + தங்கை வந்தாள் = அண்ணனோடு தங்கை வந்தாள்.

11. 'செய்யிய' என்னும் வாய்பாட்டு வினையெச்சத்தின் பின் வரும் வல்லினம் மிகாது.

காணிய + சென்றேன் = காணிய சென்றேன்

உண்ணிய + சென்றாள் = உண்ணிய சென்றாள்

12. "பொதுப் பெயர், உயர்திணைப் பெயர்களுக்குப்" பின்வரும் வல்லினம் மிகாது.

தாய் + கண்டாள் = தாய் கண்டாள்.

கண்ணகி + சீறினாள் = கண்ணகி சீறினாள்.

13. 'ஐந்தாம் வேற்றுமையின் சொல் உருபுகளான இருந்து, நின்று' என்பவைகளின் பின் வரும் வல்லினம் மிகாது.

மாடியிலிருந்து + கண்டேன் = மாடியிலிருந்து கண்டேன்.

மரத்திலிருந்து + பறித்தேன் = மரத்திலிருந்து பறித்தேன்.

மலையினின்று + சரிந்தது = மலையினின்று சரிந்தது.

14. "வினைத் தொகையில்" வல்லினம் மிகாது.

விரி + சுடர் = விரிசுடர்

பாய் + புலி = பாய்புலி

15. "உம்மைத் தொகையில்" வல்லினம் மிகாது.

காய் + கனி = காய்கனி

தாய் + தந்தை = தாய்தந்தை

16. 'அது, இது' என்னும் சுட்டுகளின் பின் வல்லினம் மிகாது.

அது + பறந்தது = அது பறந்தது.

இது + கடித்தது = இது கடித்தது.

17. எது, யாது என்னும் வினாச்சொற்களின் பின் வல்லினம் மிகாது.

எது + பறந்தது = எது பறந்தது?

யாது + தந்தார் = யாது தந்தார்?

18. 'விளித் தொடரில்' வல்லினம் மிகாது.

கண்ணா + பாடு = கண்ணா பாடு.

அண்ணா + கேள் = அண்ணா கேள் !

19. வன்தொடர்க் குற்றியலுகரத்தின் பின் 'கள், தல்' என்னும் விகுதிகள் வரும்பொழுது வல்லினம் மிகாது.

எழுத்து + கள் = எழுத்துகள்

கருத்து + கள் = கருத்துகள்

வாழ்த்து + கள் = வாழ்த்துகள்

போற்று + தல் = போற்றுதல்

நொறுக்கு + தல் = நொறுக்குதல்

20. 'இரண்டு வட சொற்கள்' சேரும் பொழுது வல்லினம் மிகாது.

கோஷ்டி + கானம் = கோஷ்டி கானம்

சங்கீத + சபா = சங்கீத சபா

மாணவ மாணவியரே !

இதுவரை கண்டது போல், வல்லின எழுத்துகள் மிகும் இடங்கள், மிகா இடங்கள் ஆகியவற்றுக்கு மேலும் பல எடுத்துக்காட்டுகளைக் கண்டு தொகுத்துக் கொள்ளுங்கள்; பயன்படுத்தி மொழி வளம் பெறுங்கள் !

புணர்ச்சி

பயிற்சி - 1

Exercise 1

I. கீழ்க்காணும் தொடர்களைப் படிக்கவும். அவற்றைச் சரியா? தவறா? என அறிந்து கூறவும். விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Read the following and say whether they are right or wrong. For answers, press the answer button.

1 ஒரு சொல்லோடு மற்றொரு சொல் சேருவதை இலக்கணத்தில் புணர்ச்சி என்று வழங்குவர்.

(விடை : சரி)

2 வாழை மரம் - இத்தொடரில் 'வாழை' என்று வருவது வருமொழி.

(விடை: தவறு)

3 வாழைப்பழம் - இத்தொடர் விகாரப்புணர்ச்சி.

(விடை: சரி)

4 பல + பல = பல பல எனவும் பற்பல எனவும் புணரும்.

(விடை: சரி)

5 சில + மலர் = சின்மலர் என்று வருவது இயல்பு புணர்ச்சி.

(விடை: தவறு)

6 வடக்கு + வேங்கடம் = வடவேங்கடம் என்று வருவது திசைப்பெயர்ப் புணர்ச்சி.

(விடை: சரி)

7 மணி + அடித்தது = மணி அடித்தது என்று எழுதுவது உடம்படுமெய்ப் புணர்ச்சி.

(விடை: தவறு)

8 தமிழ் + ஆசிரியர் = தமிழாசிரியர் என்று புணவருவதற்கான புணர்ச்சி விதி, 'உடல்மேல் உயிர் வந்து ஒன்றுவது இயல்பே'.

(விடை: சரி)

9 உம்மைத் தொகையில் வல்லினம் மிகும்.

(விடை: தவறு)

10 பண்புத் தொகையில் வல்லினம் மிகும்.

(விடை: சரி)

புணர்ச்சி

பயிற்சி - 2

**Exercise 2**

II. கீழ்க்காணும் கோடிட்ட இடங்களை நிரப்பச் சரியான சொற்களைக் காண்க. விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Find the right words to fill in the blanks: For answers, press the answer button.

1 நிலைமொழியும் வருமொழியும் சேரும்பொழுது எவ்வித மாறுபாடும் இல்லாமல் சேருவது ------------ ஆகும்.

(விடை: இயல்பு புணர்ச்சி)

2 நிலைமொழியும் வருமொழியும் சேரும்பொழுது ஓர் எழுத்துத் தோன்றல் அல்லது திரிதல் அல்லது கெடுதல் ஆகிய மாறுபாடுகள் அமைவது ---------- ஆகும்.

(விடை: விகாரப் புணர்ச்சி)

3 ஒரு திசைப்பெயரோடு மற்றொரு திசைப்பெயரும் பிற பெயர்களும் சேருவதை ------------ என வழங்குவர்.

(விடை: திசைப்பெயர்ப்புணர்ச்சி)

4 நன்மை, தீமை, வெண்மை, செம்மை போல்வன --------- பெயர்கள்.

(விடை: மையீற்றுப்பண்புப்)

5 'செம்மலர்' என்பது --------- என்று பிரியும்.

(விடை: செம்மை + மலர்)

6 பூ + சோலை = பூஞ்சோலை என்று புணருவதற்குரிய விதி -------- என்பதாகும்.

(விடை: பூப்பெயர்முன் இனமென்மையும் தோன்றும்)

7 தெங்கு + காய் = ------------ என வரும்.

(விடை: தேங்காய்)

8 வாழை + இலை = வாழையிலை என்று வரும் புணர்ச்சி -------.

(விடை: உடம்படுமெய்ப் புணர்ச்சி.)

9 உவமைத்தொகையில் வரும் வல்லினம் -----------.

(விடை: மிக்கு வரும்)

10 அடுக்குத் தொடரில் வல்லினம் ------------.

(விடை: மிகாது)

III. கீழ்க்காணும் வினாக்களுக்குச் சரியான விடையைத் தேர்ந்தெடுத்து எழுதவும். விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Choose the right answer for the following questions. For answers, press the answer button.

1 வாழை + பழம் = வாழைப்பழம் இதில் வந்துள்ள விகாரம்

அ) தோன்றல்

ஆ) திரிதல்

இ) கெடுதல்

ஈ) எதுவும் இல்லை

(விடை: அ) தோன்றல்)

2 கிழக்கு + நாடு = என்பது புணர்ச்சிப்படி வரும் நிலை

அ) கிழக்குநாடு

ஆ) கீழ்நாடு

இ) கிழநாடு

ஈ) கிழா நாடு

(விடை: ஆ) கீழ்நாடு)

3 வெண்மை + குடை = வெண்குடை எனப் புணர்ந்ததன் விதி

அ) ஆதிநீடல்

ஆ) இனம் மிகல்

இ) ஈறுபோதல்

ஈ) தன்னொற்று இரட்டல்

(விடை: இ) ஈறுபோதல்)

4 "உடல்மேல் உயிர் வந்து ஒன்றுவது இயல்பே" - என்ற வழக்கு எடுத்துக்காட்டு

அ) நிலாவழகு

ஆ) கடவுளருள்

இ) பூம்பாவை

ஈ) வெற்றிலை

(விடை: ஆ) கடவுளருள்)

5 "பைம்பொழில்" - என்ற எடுத்துக்காட்டுக்கு ஏற்ற புணர்ச்சி விதி

அ) முன்னின்ற மெய் திரிதல்

ஆ) இனம் மிகல்

இ) அடி அகரம் 'ஐ' ஆதல்

ஈ) இடையுகரம் இய்யாதல்

(விடை: இ) அடி அகரம் 'ஐ' ஆதல்)

6 பைங்கொடி - என்பதைப் புணர்ச்சி விதிப்படி பிரித்துக் காணும் முறைமை

அ) பைங் + கொடி

ஆ) பை + ங் + கொடி

இ) பசு + மை + கொடி

ஈ) பசுமை + கொடி

(விடை: ஈ) பசுமை + கொடி)

7 'உடம்படுமெய்' - எனப்படும் மெய்யெழுத்துகள்

அ) ல - ழ

ஆ) ய், வ்

இ) க், ஞ்

ஈ) த், ப்

(விடை: ஆ) ய், வ்)

8 'தனிக் குறில் முன் ஒற்று உயிர்வரின் இரட்டும்" - என்ற புணர்ச்சி விதிக்கு எடுத்துக்காட்டு

அ) கண்ணொளி

ஆ) தண்ணீர்

இ) கண்ணகி

ஈ) பன்னீர்

(விடை: அ) கண்ணொளி)

9 'பாய்புலி' - இதில் வல்லினம் மிகாமைக்குக் காரணம்

அ) இது உம்மைத் தொகை

ஆ) இது விளித்தொடர்

இ) இது வினைத் தொகை

ஈ) இது இரட்டைக்கிளவி

(விடை: இ) இது வினைத் தொகை)

10 பத்து + பாட்டு = பத்துப்பாட்டு - இவ்வாறு வல்லெழுத்துமிக்குப் புணருவதற்குக் காரணம்

அ) இது முற்றியலுகரம்

ஆ) வன்தொடர்க் குற்றியலுகரம்

இ) இருபெயரொட்டு

ஈ) உவமைத்தொகை

(விடை: ஆ) வன்தொடர்க் குற்றியலுகரம்)

புணர்ச்சி

பயிற்சி - 4

**Exercise 4**

IV கீழ்க்காணும் வினாக்களுக்கு ஒருவரியில் விடை தரவும். விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Answer the following questions in a line each: For answers, press the answer button.

1 புணர்ச்சி என்றால் என்ன?

(விடை: ஒரு சொல்லோடு மற்றொரு சொல் சேருவதைப் புணர்ச்சி என்பர்.)

2 இயல்பு புணர்ச்சி என்பது யாது?

(விடை: இரண்டு சொற்கள் சேரும்பொழுது, வேறுபாடுஇன்றி இயல்பாகச் சேருவதை (புணருவதை) இயல்பு புணர்ச்சி என்பர்.)

3 விகாரப் புணர்ச்சி என்பது யாது?

(விடை: நிலைமொழியும் வருமொழியும் புணரும்பொழுது இடையில் ஓர் எழுத்துத் தோன்றி, அல்லது திரிந்து அல்லது கெட்டுப் புணரும் மாற்றம் விகாரப் புணர்ச்சி எனப் பெறும்.)

4 திசைப்பெயர்ப் புணர்ச்சி என்றால் என்ன?

(விடை: ஒரு திசைப்பெயரோடு மற்றொரு திசைப்பெயர் அல்லது பிற பெயர்கள் சேருவது திசைப்பெயர்ப் புணர்ச்சி எனப் பெறும்.)

5 மையீற்றுப் பண்புப்பெயர்ப் புணர்ச்சி என்றால் என்ன?

(விடை: செம்மை, சிறுமை, வெம்மை, புதுமை முதலான மையீற்றுப் பண்புப்பெயர்கள் பிற சொல்லோடு சேருவது மையீற்றுப் பண்புப்பெயர்ப் புணர்ச்சி ஆகும்.)

6 நிலைமொழியிறுதியில் மெய்யும் வருமொழி முதலில் உயிரும் வந்தால் அது புணருவதற்குரிய விதி யாது?

(விடை: நிலைமொழியிறுதியில் மெய்யும் வருமொழி முதலில் உயிரும் வந்தால் அது புணருவதற்குரிய விதி உடல் மேல் உயிர்வந்து ஒன்றுது இயல்பே.)

7 'வெற்றிலை' என்பது புணர்ச்சி விதிப்படி எவ்வாறு பிரியும்?

(விடை: வெற்றிலை என்பது புணர்ச்சி விதிப்படி 'வெறுமை + இலை' எனப் பிரியும்.)

8 பூ + கொடி = பூங்கொடி - இதற்குரிய புணர்ச்சி விதி யாது?

(விடை: பூ + கொடி = பூங்கொடி - இதற்குரிய புணர்ச்சி விதி 'பூப்பெயர் முன் இனமென்மையும் தோன்றும்'.)

9 தங்கம் + தாலி = தங்கத்தாலி - இதில் வல்லினம் மிகக் காரணம் யாது?

(விடை: தங்கம் + தாலி = தங்கத்தாலி - இதில் வல்லினம் மிகக் காரணம் இது மூன்றாம் வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்க தொகை.)

10 கற்க + கசடற = 'கற்க கசடற' - இதில் வல்லினம் மிகாமைக்குக் காரணம் என்ன?

(விடை: கற்க + கசடற = 'கற்க கசடற' - இதில் வல்லினம் மிகாமைக்குக் காரணம் இதில், கற்க என்பது வியங்கோள் வினைமுற்று.)

# 15. யாப்பு

யாப்பு | பொது அறிமுகம்

**General Introduction**

அன்புள்ள மாணவர்களே! வணக்கம்

**யாப்பு, பாட்டு, பா, கவிதை, கவி** யாவும் செய்யுள் என்னும் ஒரே பொருள் உணர்த்தும் சொற்கள் ஆகும். இது குறித்து இப்பாடத்தில் கற்க இருக்கின்றீர்கள்.

யாப்பு | பாட அறிமுகம்

**Introduction to Lesson**

இப்பாடத்தில் வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா ஆகிய பா வகைகளின் இலக்கணம் குறித்துக் கற்க இருக்கின்றீர்கள்.

யாப்பு | பாடம்

**Lesson**

யாப்பின் உறுப்புகள் ஆறு. அவை :

1) எழுத்து
2) அசை
3) சீர்
4) தளை
5) அடி
6) தொடை

என்பனவாம்.

இந்த உறுப்புகளால் அமைக்கப் பெற்ற பாக்கள் நான்கு வகைப்படும். அவை :

1) வெண்பா
2) ஆசிரியப்பா
3) கலிப்பா
4) வஞ்சிப்பா

நான்கு வகைப் பாக்களுக்கும் எடுத்துக் காட்டுகள் :

வெண்பா

சான்று :

ஆய கலைகள் அறுபத்து நான்கினையும்
ஏய உணர்விக்கும் என்னம்மை - தூய
உருப்பளிங்கு போல்வாளென் உள்ளத்தின் உள்ளே
இருப்பளிங்கு வாராது இடர்.
(இருப்பளிங்கு = இருப்பள் + இங்கு)

- (கம்பர்)

ஆசிரியப்பா

சான்று :

ஈன்று புறந்தருதல் என்தலைக் கடனே ;
சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் கடனே ;
வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே;
நன்னடை நல்கல் வேந்தற்குக் கடனே;
ஒளிறுவாள் அருஞ்சமம் முருக்கிக்
களிறெறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே !
(கடன் - கடமை)

- (புறநானூறு)

கலிப்பா (கலிவிருத்தம்)

சான்று :

வைய மீன்றதொன் மக்க ளுளத்தினைக்
கையி னாலுரை கால மிரிந்திடப்
பைய நாவைய சைத்த பழந்தமிழ்
ஐயை தாடலை கொண்டு பணிகுவாம்.
(தாள் +தலை)

- மொழி வாழ்த்து

வஞ்சிப்பா

சான்று :

மந்தாநிலம் வந்தசைப்ப
வெண்சாமரை புடைபெயர்தரச்
செந்தாமரை நாள்மலர்மிசை
எனவாங்க
இனிதின் ஒதுங்கிய இறைவனை
மனமொழி மெய்களின் வணங்குதும் மகிழ்ந்தே.

- திருப்பாமாலை.

யாப்பு

பயிற்சி - 1

Exercise 1

I. கீழ்க்காணும் தொடர்களைப் படிக்கவும். அவற்றைச் சரியா? தவறா? என அறிந்து கூறவும். விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Read the following and say whether they are right or wrong. For answers, press the answer button.

1 யாப்பு - என்பதும், செய்யுள், பாட்டு , பா, கவிதை என்பனவும் ஒன்றேயாம்.
(விடை: சரி)

2 யாப்பின் உறுப்புகள் ஏழு.
(விடை: தவறு)

3 பாக்கள் நான்கு வகைப்படும்.
(விடை: சரி)

4 "ஆயகலைகள்...." எனத் தொடங்கும் கம்பர் பாடல் ஆசிரியப்பா.
(விடை: தவறு)

5 மந்தா நிலம் வந்தசைப்ப ..... எனத் தொடங்கும் திருப்பாமாலைப் பாடல் வஞ்சிப்பா.
(விடை: சரி)

பயிற்சி - 2

**Exercise 2**

II. கீழ்க்காணும் கோடிட்ட இடங்களை நிரப்பச் சரியான சொற்களைக் காண்க. விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Find the right words to fill in the blanks: For answers, press the answer button.

1 யாப்பு என்றாலும் -------- என்றாலும் ஒன்றே.

(விடை: செய்யுள்)

2 யாப்பின் உறுப்புகள் -----------.

(விடை: ஆறு)

3 'தளை' என்பது ----------- உறுப்புகளுள் ஒன்று.

(விடை: யாப்பின்)

4 யாப்பு உறுப்புகளால் அமைக்கப் பெற்ற பாக்கள் -------- வகைபெறும்.

(விடை: நான்கு)

5 புறநானூற்றுப் பாடல்கள் யாவும் -------- வகையின.

(விடை: ஆசிரியப்பா)



பயிற்சி - 3

**Exercise 3**

III. கீழ்க்காணும் வினாக்களுக்குச் சரியான விடையைத் தேர்ந்தெடுத்து எழுதவும். விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Choose the right answer for the following questions. For answers, press the answer button.

1 யாப்பு என்பது யாது?

அ) ஆக்கு

ஆ) உரை

இ) இயம்பு

ஈ) செய்யுள்

(விடை: ஈ) செய்யுள்)

2 யாப்பின் உறுப்புகள்

அ) எட்டு

ஆ) ஆறு

இ) ஒன்பது

ஈ) ஏழு

(விடை: ஆ) ஆறு)

3 நான்வகை பாக்கள்

அ) வெண்பா, கலிப்பா, சிந்து, வஞ்சிப்பா

ஆ) கலிப்பா, வஞ்சிப்பா, ஆசிரியப்பா, வெண்பா

இ) வெண்பா, ஆசிரியப்பா, விருத்தம், கலிவிருத்தம்

ஈ) குறள் வெண்பா, கழிநெடிலடி, ஆசிரியப்பா, வெண்பா

(விடை: ஆ) கலிப்பா, வஞ்சிப்பா, ஆசிரியப்பா, வெண்பா)

4 ஈன்று புறந்தருதல் . . . . . . .. . . . .. . . காளக்குக் கடனே - இது

அ) வெண்பா

ஆ) விருத்தம்

இ) ஆசிரியப்பா

ஈ) கலிப்பா

(விடை: இ) ஆசிரியப்பா)

5 "ஆயகலைகள் . . . . . . . . . . . . . . . வாராது இடர்." - இது

அ) வஞ்சிப்பா

ஆ) கலிப்பா

இ) வெண்பா

ஈ) சிந்து

(விடை: இ) வெண்பா)

**யாப்பு** **பயிற்சி - 4**

**Exercise 4**

IV கீழ்க்காணும் வினாக்களுக்கு ஒருவரியில் விடை தரவும். விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Answer the following questions in a line each: For answers, press the answer button.

1 யாப்பு எனப் பொருள் உணர்த்தும் வேறு சொற்கள் யாவை?

(விடை: பாட்டு, தூக்கு, பா, கவிதை, செய்யுள் யாவும் யாப்பு என்னும் பொருள் உணர்த்துவன.)

2 யாப்பின் உறுப்புகள் யாவை?

(விடை: **எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடை ஆகிய ஆறும் யாப்பின் உறுப்புகள்.**)

3 தமிழ் மொழியில் பாக்கள் எத்தனை வகைபெறும்?

(விடை: **தமிழ் மொழியில் பாக்கள் நான்கு வகைபெறும்.**)

4 நான்கு வகைப் பாக்கள் யாவை?

(விடை: **வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா ஆகியவை நால்வகைப் பாக்களாகும்.**)

5 புறநானூற்றுப் பாடல்கள் எந்தப் பாவகையைச் சார்ந்தவை?

(விடை: **புறநானூற்றுப் பாடல்கள் யாவும் ஆசிரியப்பா வகையின.**)

# 16.அணி

அணி

பொது அறிமுகம்

**General Introduction**

அன்புள்ள மாணவர்களே! வணக்கம்

அணி என்னும் சொல்லுக்கு **அழகு** என்பது பொருள். மகளிர் பெரிதும் விரும்பும் அணிகள், தாம் அழகாய் அமைவதுடன் தம்மை அணிபவருக்கு மேலும் அழகு தருதலின் அப்பெயர் பெற்றன. அதுபோலச் செய்யுளில் வரும் **சொல்லும், பொருளும்** அழகுற நின்று அச்செய்யுளை மேலும் அழகுபெறச் செய்தலின் அது அணி என்று வழங்கப் பெறுகிறது. சிலவகை அணிகள் குறித்து இப்பாடத்தில் கற்க இருக்கின்றீர்கள்.

அணி

பாட அறிமுகம்

**Introduction to Lesson**

அன்புக்குரிய மாணவ மாணவியரே!

அணி என்றால் என்ன? அதன் விளக்கம் யாது? என்பன பற்றியும் அணிகள் சிலவற்றை உரிய எடுத்துக்காட்டுகளுடனும் முன் வகுப்பில் கற்றீர்கள்.

இவ்வகுப்பில் ,

- தற்குறிப்பேற்ற அணி
- வஞ்சப் புகழ்ச்சியணி
- பிறிதுமொழிதல் அணி
- இரட்டுற மொழிதல் அணி
- சொல்பின்வரு நிலையணி
- பொருள் பின்வரு நிலையணி
- சொற்பொருட் பின்வரு நிலையணி
- மடக்குஅணி

ஆகியவை பற்றிப் படிக்க விருக்கிறீர்கள்.

**1. தற்குறிப்பேற்ற அணி**

**புல்லரைக் காணாமல் இப்புல்லும் நுனிசாய்ந்ததோ?**

மாணாக்கர்களே! இந்தப் பாடலடியைப் படியுங்கள். இதன் பொருள் என்ன?

இந்த நாட்டில் உள்ள கீழ் மக்களைக் காண விரும்பாமல் இந்தப் புற்கள் தம் நுனி சாய்ந்துள்ளதோ? எனப் புலவர் வியந்து கூறுகிறார்.

புற்களின் நுனி சாய்ந்து காணப்படுவது இயற்கை; இயல்பான நிகழ்வு. ஆனால் புலவர், நாட்டிலுள்ள கீழ் மக்களைக் காணப்பிடிக்காமல்தான், புற்கள் நுனி சாய்ந்திருப்பதாகக் கூறுகிறார்.

இவ்வாறு, இயல்பான இயற்கையான ஒரு நிகழ்வில் கவிஞர் அல்லது புலவர் தம் குறிப்பை (கருத்தை) ஏற்றி உரைப்பது **தற்குறிப்பேற்றம்** என்னும் அணியாகும்.

மேலும் ஓர் எடுத்துக்காட்டு:

**வாரல் என்பபோல் மறித்துக் கை காட்ட - (சிலப்பதிகாரம்)**

இந்தச் சிலப்பதிகாரச் செய்யுள் அடியைப் படித்துப் பாருங்கள்! இதன் பொருள் என்ன?

"இங்க வாராதீர்கள் மதுரை மாநகரில் உங்களுக்கு ஆபத்துக் காத்திருக்கிறது" என்று கூறுவது போல் (கோபுரத்தில் உள்ள கொடி அசைந்தது) என்பதாகும்.

**விளக்கம்:**

புகார் நகரத்திலிருந்து புறப்பட்டு வந்த கோவலும் கண்ணகியும் மதுரை நகர எல்லையை அடைகிறார்கள். தொலைவில், பாண்டிய மன்னன் அரண்மனைக் கொடி இவர்கள் கண்ணுக்குத் தெரிகிறது. அக்கொடி காற்றில் அசைகின்றது. இது

இயற்கை. ஆனால், புலவர் இளங்கோவடிகள் அந்த இயற்கையான நிகழ்வில் தம் கற்பனையை ஏற்றி, "கோவல கண்ணகியரே! நீவிர் மதுரை நகருக்குள் வாராதீர்! அங்கே, உங்களுக்கு ஆபத்துக் காத்திருக்கிறது." என்று கூறுவது போல் கொடி அசைந்ததாகக் கூறுகிறார். ஆதலின் இது, **தற்குறிப்பேற்ற அணி** ஆயிற்று.

தன் + குறிப்பு + ஏற்றம் = தற்குறிப்பு ஏற்றம்

மாணவர்களே!

உங்கள் செய்யுள் பாடப்பகுதியில் இந்த அணிக்கு எடுத்துக்காட்டுகள் உள்ளனவா? எனத் தேடிக் காண முற்படுங்களேன்.

**2. வஞ்சப்புகழ்ச்சி அணி**

பெரிதினிது பேதையார் கேண்மை பிரிவின்கண்
பீழை தருவதொன்று இல் - (திருக்குறள்)

மாணவ மாணவியரே! இக்குறட்பாவைப் படித்துப் பாருங்கள்! இதன் பொருள் யாது? "அறிவிலார் உறவு மிகவும் இனிமையைத் தரும்; ஏனெனில் அவரை விட்டுப் பிரியும்பொழுது எவ்விதத் துன்பமும் இல்லை" என்பது இக்குறட்பாவின் பொருள்.

மாணவ மாணவியரே!

திருவள்ளுவப் பெருந்தகை, இக்குறட்பாவில் அறிவிலார் உறவைப் புகழ்வது போல் பழித்துக் கூறுகிறார் என்ற, பொருட் சிறப்பை நீங்கள் அறியுங்கள். இவ்வாறு புகழ்வதுபோல் பழிப்பது **வஞ்சப்புகழ்ச்சி** எனப்படும்.

மேலும்,

பாரி பாரி என்று பலவேத்தி
ஒருவற் புகழ்வர் செந்நாப் புலவர்
பாரி யொருவனும் அல்லன்
மாரியும் உண்டு ஈண்டு உலகுபுரப் பதுவே. - (புறநானூறு)

இந்தப் பாடல் தரும் பொருள் :

"பாரி வள்ளல்! பாரி வள்ளல்! அவன் ஒருவனே பெரும் வள்ளல்! அவனால்தான் உலக மக்கள் காப்பாற்றப்படுகிறார்கள்! எனப் பலவாறு பாரி என்ற வள்ளலைப் புலவர்கள் புகழ்ந்து பாராட்டுகிறார்கள்! பாரி ஒருவனால்தான் இந்த உலகம் காக்கப்படுகிறதா? ஏன்? 'மாரியும் (மழையும்) இந்த உலகினைக் காப்பாற்றுமே' என்பதாகும்.

இப்பாடல், பாரி மன்னனை இகழ்வது போல் தோன்றினாலும், பாரி மன்னனைப் புகழ்வதே இப்பாடலின் உட்கருத்தாகும். இது பழிப்பதுபோல் புகழ்வதாகும்.

மாணாக்கரே!

மேற்காட்டிய இரண்டு எடுத்துக்காட்டுப் பாடல்கள் மூலம் நீவிர் அறிவது என்ன?

"புகழ்வது போலப் பழித்தலும், பழிப்பதுபோலப் புகழ்வதும் வஞ்சப்புகழ்ச்சியணி எனப்படும் என்பதை அறிக.

உங்கள் செய்யுள் பாடப்பகுதியில் அல்லது நீவிர் அறிந்த பிற பாடல்களில் **வஞ்சப்புகழ்ச்சியணிக்கான** எடுத்துக்காட்டுகள் இருப்பின் படித்து மகிழ்க!

**3. பிறிது மொழிதல் அணி**

மாணவ மாணவியரே!

**பீலிபெய் சாகாடும் அச்சிறும் அப்பண்டம்**
**சால மிகுத்துப் பெயின்- (திருக்குறள்)**

இக்குறட்பாவைக் கருத்தூன்றிப் படியுங்கள்!

இதன் பொருள் என்ன?

"மிகவும் எடை குறைவான, மயில் தோகையாக இருப்பினும், வண்டியின் கொள்ளளவுக்குமேல் வண்டியில் ஏற்றி வைத்தால், அவ்வண்டியின் அச்சு முறிந்து வண்டி செயல்பட இயலாததாகி விடும்." என்பது இதன் பொருள்.

**விளக்கம்:**

இத்திருக்குறள் இடம்பெற்றுள்ள அதிகாரம் வலியறிதல் என்பதாகும்.

"மக்கள் யாவரும் தத்தம் வலிமையறிந்தே செயற்பட வேண்டும்; அன்றேல் துன்புற்று அல்லல் உறுவர்" என்னும் கருத்தைக்கூற வந்த திருவள்ளுவ நாயனார், "மிகவும் எடை குறைந்த மயில் தோகையே யாயினும், வண்டியின் வலிமை அறியாது சுமை ஏற்றினால் வண்டி பழுதாகி விடும்" என்ற பிறிதொரு கருத்தைக் கூறித் தம் கருத்தை விளக்குகிறார்.

இவ்வாறு, "புலவர், தாம் வலியுறுத்த வந்த கருத்தை நேரடியாகக் கூறாது பிறிதொன்றைக் கூறி வலியுறுத்தும் அழகினை, பிறிதுமொழிதல் அணி என்பர்."

அன்பு மாணாக்கரே!

நும் செய்யுள் பாடப்பகுதியில் அல்லது நீவிர் அறிந்த பிற பாடலில் இந்த அணி வரப் பெறின் படித்து மகிழ்க.

**4.** இரட்டுற மொழிதல் அணி

(இரண்டு + உற + மொழிதல் + அணி)

இரட்டுற மொழிதல் - இரு பொருள் தரும்படியாகக் கூறுதல்.

"புலவரே ! வாரும் ! இரும்படியும் !"

இத்தொடரைக் கருத்தூன்றிப் படியுங்கள் ! இதிலுள்ள இரும்படியும் என்னும் தொடரானது, 'இரும் + படியும்" என்னும் இரு சொற்களாக நின்று, "புலவரே ! வருக ! நீவிர் ! அமரும் ! படியும் (அதாவது) (அமர்ந்து நூலைப்

படியுங்கள்) என்ற ஒரு பொருளைத் தருகின்றது ; இரும்பு + அடியும் எனப் பிரிந்து நின்று, “புலவரே ! இரும்பினை அடியுங்கள்” என மற்றொரு பொருளைத் தருகின்றது.

இவ்வாறு, செய்யுளில் ஒருசொல் அல்லது தொடர் தனித்து நின்றும், பிரிந்து நின்றும் இரண்டு அல்லது இரண்டிற்கு மேற்பட்ட பொருளைத் தரும் அழகினை, **இரட்டுற மொழிதல் அணி** என வழங்குவர்.

இந்த அணியை, வடமொழியாளர், சிலேடை எனக் கூறுவர். மேலும், சொல்லோ தொடரோ தனித்து நின்று பொருள் தருதலைச் **செம்மொழிச் சிலேடை** எனவும், பிரிந்து நின்று பொருள் தருதலைப் **பிரிமொழிச் சிலேடை** எனவும் வழங்குவர்.

மாணவத் தம்பி தங்கையரே ! கீழ்க்காணும் பாடலைப் படித்துப் பாருங்கள் !

செய்யுட் கிடைமறிக்கும் ; சேர்பலகை யிட்டுமுட்டும் ;
ஐயமுற மேற்றா ளடர்க்குமே - துய்யநிலை
தேடும் புகழ்சேர் திருமலைரா யன்வரையில்
ஆடும் கதவுநிக ராம்.

இப்பாடல் ஆடு, கதவு ஆகிய இருபொருள்களையும் உணர்த்தும் முறையில், இரட்டுற மொழிதல் அணியாக வந்துள்ளது. இதனைப் பின்வருமாறு அறிந்து மகிழ்க.

ஆடு

(செய்யுள்) ஆடு வயலில் மந்தை மந்தையாகக் கிடக்கும். (பல + கை) கைகள் பல சேர்ந்து தன்னைத் தடுக்கும் பொழுது தன் தலையால் முட்டும். (மேற்று + ஆள்) தன்னைத் தாக்க வருபவரைத் தானும் உறுதியாகத் தாக்கும். (துய்யநிலை தேடும்) தான் படுப்பதற்கேற்ற தூய்மையான இடத்தைத் தேடிப் படுக்கும்.

கதவு

வீட்டின் உள்ளிடத்தில் (இரண்டு அறைகளைத்) தடுத்து மூடும். (செய் + உள்+இடை+ மறிக்கும்) மரப்பலகைகளைச் சேர்த்துச் செய்யப் பெற்று வாயிலை மூடப் பயன்படும். (சேர் + பலகை) தூய்மையான (வாயில் நிலை) நிலைபொருந்தியதாக இருக்கும். நன்றாகப் பொருந்தி மூடுவதற்கு அதன், மேல் தாழ்ப்பாள் செறிவாகத் தடுக்கும். (மேல் + தாள் = தாழ்ப்பாள்)

இவ்வாறு, இச்செய்யுளில் உள்ள சொற்கள் தனித்து நின்று செம்மொழியாகவும், பிரிந்து நின்று பிரிமொழியாகவும் ஆடு-கதவு ஆகிய இரண்டனுக்கும் பொருந்த அமைதலின் இது, இரட்டுற மொழிதல் அணி ஆயிற்று.

5. சொல்பின்வரு நிலையணி

ஒரு செய்யுளில், முன்னர் வந்த சொல்லும் பொருளும் பல முறை பின்னரும் வருவது பின்வரு நிலையணி யாகும்.

பின்வரு நிலையணி மூன்று வகைப் பெறும். அவை :

- சொல் பின்வரு நிலை
- பொருள் பின்வரு நிலை
- சொற்பொருள் பின்வரு நிலை

சொல் பின்வரு நிலையணி

உள்ள முடைமை உடைமை பொருளுடைமை
நில்லாது நீங்கி விடும். (திருக்குறள்)

இக்குறட்பாவில், உடைமை என்னும் சொல் மீண்டும் மீண்டும் வந்துள்ளது. ஆனால், பெற்றிருத்தல், உடைய, செல்வம் என வெவ்வேறு பொருள்களில் வந்துள்ளது.

இவ்வாறு, ஒரே சொல் மீண்டும் மீண்டும் வந்து வெவ்வேறு பொருள் தருமாயின் அது சொல்பின்வரு நிலை அணி எனப்படும்.

பொருள் பின்வருநிலை அணி

கீழ்க்காணும் பாடலைப் படித்துப் பாருங்கள்.

அவிழ்ந்தன தோன்றி அலர்ந்தன காயா
நெகிழ்ந்தன நேர்முகை முல்லை - மகிழ்ந்திதழ்
விண்டன கொன்றை விரிந்த கருவிளை
கொண்டன காந்தள் குலை.

இப்பாடலில், அவிழ்தல், அலர்தல், நெகிழ்தல், விள்ளல், விரிதல் எனப் பல சொற்கள் வந்துள்ளன. ஆனால் அவையாவும், மலர்தல் என்ற ஒரே பொருளையே தருகின்றன.

இவ்வாறு, ஒரு செய்யுளில் ஒரே பொருள் தரும் பல சொற்கள் வருமாறு அமையப் பாடுவது **பொருட் பின்வரு நிலை அணி** ஆகும்.

**பாடல் பொருள் :**

பூஞ்சோலையில், தோன்றி, காயா, முல்லை, கொன்றை, கருவிளை, காந்தள் முதலான மலர்கள் மலர்ந்து செழித்து மணம் பரப்பின என்பதாம்.

சொற்பொருட் பின்வருநிலை அணி

சொல்லுக சொல்லிற் பயனுடைய சொல்லற்க
சொல்லிற் பயனிலாச் சொல். **(திருக்குறள்)**

மாணவ மாணவியரே !

இக்குறட்பாவில் சொல் என்னும் சொல் மீண்டும் மீண்டும் வந்துள்ளது. ஆயினும், சொல் என்ற ஒரே பொருளையே தருகிறது. இவ்வாறு, ஒரு செய்யுளில் வந்த சொல்லே வந்து, தந்த பொருளைத் தருமாயின், அது **சொற்பொருள் பின்வரு நிலையணி** எனப்படும்.

இவையேபோல், நீவிர் படித்த, அல்லது படிக்கும் பகுதியில் காணப்படும் சொல் பின்வரு நிலையணி, பொருள் பின்வரு நிலையணி, சொற்பொருட் பின்வரு நிலையணி ஆகிய அணிகளை இனங்கண்டு, படித்து மகிழ்க ! பயன் பெறுக !

**8. மடக்கு அணி**

கோவ ளர்ப்பன கோநக ரங்களே
கோவ ளர்ப்பன கோநக ரங்களே
மேவ ளர்க்கர் வியன்திரை வேலைசூழ்
கோவ ளர்ப்பன கோநக ரங்களே.

இப்பாடலில், "கோவளர்ப்பன கோ நகரங்களே" என்னும் தொடர் மூன்று அடிகளில் வந்துள்ளதைக் காணுங்கள்.

"கோ வளர்ப்பன கோ நகரங்களே" என்னும் அடி, மடங்கி மடங்கி வந்து, வேறு வேறு பொருள் தருகின்றன. அவையாவன :

(சோழ மன்னனின்) ஒளி (புகழ்) யை மிகுவிப்பன தலைமையுடைய நகரங்களாகும்.

கோவாகிய சோழன், பெருக்கிக் கொள்வன, பகை அரசர்களின் திறைப் பொருள்களையே யாகும்.

திரையாகிய கரையால் சூழப் பெற்ற இந்நிலவுலகத்தைக் காப்பன சோழ மன்னனின் கைகளேயாகும்.

[கோ - அரசன் ; கோ - ஒளி ; கோந-கரம் - அரசனின் கரங்கள் (கைகள்)]

இவ்வாறு, ஒரு செய்யுளில் ஒரு முறை வந்த சொற்களோ, சொற்றொடர்களோ, அடியோ மடங்கி (மீண்டும் வந்து) வந்து பொருள் தருவது மடக்கு அணி ஆகும்.

பிற பாடல்களில் மடக்கணி வருமாயின் படித்து மகிழுங்கள்.

**இரட்டுற மொழிதல் அணிக்கும் மடக்கு அணிக்கும் உள்ள வேறுபாடு :**

ஒரு சொல் அல்லது ஒரு சொற்றொடர் இரு பொருள் தந்து நிற்பது இரட்டுற மொழிதல் அணி.

ஆனால், ஒரு தொடரே, பன்முறை வந்து வேறு வேறு பொருள் தருவது மடக்கு அணி ஆகும்.

மாணவ மாணவியர் இவ்வாறு பாட்டை உணர்த்து படித்து மகிழ்க !

அணி

பயிற்சி - 1

**Exercise 1**

I. கீழ்க்காணும் தொடர்களைப் படிக்கவும். அவற்றைச் சரியா? தவறா? என அறிந்து கூறவும். விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Read the following and say whether they are right or wrong. For answers, press the answer button.

1 அணி என்னும் சொல்லுக்கு அழகு என்பது பொருள்.
(விடை: சரி)

2 அணி, சொல்லணி, பொருளணி என இருவகைப்படும்.
(விடை: சரி)

3 யமகம், மடக்கு முதலான அணிகள் பொருளணியின் பாற்படும்.
(விடை: தவறு)

4 இரட்டுறமொழிதல் அணியை, சிலேடை எனவும் கூறுவர்.
(விடை: சரி)

5 "இரும்படியும்" - என்பதை, இரும் + படியும், இரும்பு + அடியும் என இரு பொருள்படப் பிரிக்கலாம்.
(விடை: சரி)

6 பின்வருநிலை அணி நான்கு வகைப்படும்.
(விடை: தவறு)

7 ஒரே சொல் மீண்டும் மீண்டும் வந்து வெவ்வேறு பொருள் தருவது பொருட்பின்வருநிலையணி.
(விடை: தவறு)

8 அவிழ்தல், அலர்தல், நெகிழ்தல், விள்ளல், விரிதல் ஆகிய சொற்கள் மலர்தல் என்ற ஒரே பொருள் தரும்.

(விடை: சரி)

9 ஒரு தொடரே பன்முறை வந்து வேறுவேறு பொருள் தருவது இரட்டுற மொழிதல் அணி.

(விடை: தவறு)

10 புகழ்வது போலப் பழித்தலும், பழிப்பதுபோலப் புகழ்வதும் வஞ்சப்புகழ்ச்சி அணி.

(விடை: சரி)

அணி

பயிற்சி - 2

**Exercise 2**

II. கீழ்க்காணும் கோடிட்ட இடங்களை நிரப்பச் சரியான சொற்களைக் காண்க. விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Find the right words to fill in the blanks: For answers, press the answer button.

1 செய்யுளில் வரும் சொல்லும் பொருளும் அழகுற நின்ற செய்யுளை அழகுறச் செய்தலின் அது --------- எனப்பெறுகிறது.

(விடை: அணி)

2 யமகம், மடக்கு முதலான அணிகள் ---------.

(விடை: சொல்லணி)

3 உவமை, உருவகம் முதலான அணிகள் ---------.

(விடை: பிரிமொழிச் சிலேடை)

4 ஒரு சொல் அல்லது தொடர் பிரிந்து நின்று பொருள் தருவது--------.

(விடை: பிரிமொழிச் சிலேடை)

5 ஒரு செய்யுளில் வந்த சொல்லே வந்து, தந்த பொருளைத் தருவது --------- அணியாகும்.

(விடை: சொற்பொருள் பின்வருநிலை)

6 இயல்பான, இயற்கையான நிகழ்வில் கவிஞர் தம் குறிப்பை ஏற்றி உரைப்பது ------------ என்னும் அணியாகும்.

(விடை: தற்குறிப்பேற்றம்)

7 "புலவரே! வாரும்! இரும்படியும்"- இது -------- அணியின் பாற்படும்.

(விடை: இரட்டுறமொழிதல்)

8 புகழ்வது போல் பழித்தல் ----------- அணியாகும்.

(விடை: வஞ்சப்புகழ்ச்சி)

9 "புல்லரைக் காணாமல் இப்புல்லும் நுனி சாய்ந்ததோ?" - இப்பாடலடி ----------- அணியாகும்.

(விடை: தற்குறிப்பேற்றம்)

10 புலவர், தாம் வலியுறுத்த வந்த கருத்தை நேரடியாகக் கூறாமல் பிறிதொன்றைக் கூறி வலியுறுத்துவது -------- அணியாகும்.

(விடை: பிறிதுமொழிதலணி)

அணி

பயிற்சி - 3

Exercise 3

III. கீழ்க்காணும் வினாக்களுக்குச் சரியான விடையைத் தேர்ந்தெடுத்து எழுதவும். விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Choose the right answer for the following questions. For answers, press the answer button.

1 அணி என்னும் சொல்லின் பொருள்

அ) பழகு

ஆ) அழகு

இ) இன்பம்

ஈ) இசை

(விடை: ஆ) அழகு)

2 அணியின் வகை

அ) ஒன்று

ஆ) இரண்டு

இ) மூன்று

ஈ) நான்கு

(விடை: ஆ) இரண்டு)

3 செய்யுளில் ஒரு சொல் அல்லது தொடர் தனித்து நின்று இரண்டு பொருள் தருவது

அ) சிலேடை

ஆ) செம்மொழிச் சிலேடை

இ) பிரிமொழிச் சிலேடை

ஈ) மடக்கு

(விடை: ஆ) செம்மொழிச் சிலேடை)

4 “செய்யுட் கிடைமறிக்கும் ------ என்று தொடங்கும் பாடலில் சிலேடையாக அமைந்தவை

அ) பாம்பு - எள்

ஆ) ஆடு - கதவு

இ) வைக்கோல் - யானை

ஈ) சோலை - அரசன்

(விடை: அ) பாம்பு - எள்)

5 பின்வருநிலையணியின் வகை

அ) ஒன்று

ஆ) இரண்டு

இ) மூன்று

ஈ) ஐந்து

(விடை: இ) மூன்று)

6 “வாரல் என்ப போல் மறித்துக் கை காட்ட” - இச்செய்யுளடியில் வந்துள்ள அணி

அ) இரட்டுறமொழிதல்

ஆ) வஞ்சப்புகழ்ச்சி

இ) பிறிதுமொழிதல்

ஈ) தற்குறிப்பேற்றம்

(விடை: ஈ) தற்குறிப்பேற்றம்)

7 சொல்லுக சொல்லிற் பயனுடைய சொல்லற்க
சொல்லிற் பயனிலாச் சொல் - இக்குறட்பாவில் வந்துள்ள அணி

அ) சொல்பின்வருநிலை

ஆ) பொருள்பின்வருநிலை

இ) சொற்பொருள் பின்வருநிலை

ஈ) மடக்கு

(விடை: இ) சொற்பொருள் பின்வருநிலை)

8 “பெரிதினிது பேதையார் கேண்மை பிரிவின்கண்
பீழை தருவதொன்று இல்” - இக்குறட்பாவில் வந்துள்ள அணி

அ) வஞ்சப்புகழ்ச்சி

ஆ) சிலேடை

இ) உவமை

ஈ) உருவகம்

(விடை: அ) வஞ்சப்புகழ்ச்சி)

9 “பீலிபெய் சாகாடும் அச்சிறும் அப்பண்டம்
சால மிகுத்துப் பெயின்.” - இக்குறட்பாவில் இடம் பெற்றுள்ள அணி

அ) இரட்டுறமொழிதல்

ஆ) தற்குறிப்பேற்றம்

இ) பிறிதுமொழிதல்

ஈ) வேற்றுமை

(விடை: இ) பிறிதுமொழிதல்)

10 உள்ளம் உடைமை உடைமை; பொருளுடைமை
நில்லாது நீங்கி விடும் - இக்குறட்பாவில் உள்ள அணி

அ) பொருள் பின்வருநிலை

ஆ) சொற்பொருட் பின்வருநிலை

இ) வஞ்சப்புகழ்ச்சி

ஈ) சொல்பின்வருநிலை

(விடை: ஈ) சொல்பின்வருநிலை)

அணி

பயிற்சி - 4

**Exercise 4**

IV கீழ்க்காணும் வினாக்களுக்கு ஒருவரியில் விடை தரவும். விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Answer the following questions in a line each: For answers, press the answer button.

1 அணி என்றால் என்ன?

(விடை: செய்யுளில் வரும் சொல்லும் பொருளும் அழகுற நின்று செய்யுளுக்கு அழகு தருவது அணி எனப்பெறும்.)

2 அணி எத்தனை வகைபெறும்? அவை யாவை?

(விடை: அணி இரண்டு வகைபெறும். அவை
(1) சொல்லணி,
(2) பொருளணி.)

3 பொருளணியின்பாற்படும் நான்கு அணிகளின் பெயர் தருக.

(விடை: **(1) தற்குறிப்பேற்றம், (2) இரட்டுறமொழிதல் (3) உவமை, (4) உருவகம்)**

4 இரட்டுறமொழிதல் அணியின் மற்றொரு பெயர் யாது?

(விடை: **இரட்டுறமொழிதல் அணியின் மற்றொரு பெயர் சிலேடையணி.**)

5 சொற்பொருட் பின்வருநிலையணி என்றால் என்ன?

(விடை: **ஒரு செய்யுளில் வந்த சொல்லே வந்து, தந்த பொருளைத் தருவது சொற்பொருட் பின்வருநிலையணியாகும்.**)

6 இரட்டுற மொழிதல் அணி எவ்வாறு அமையும்?

(விடை: **ஒரு செய்யுளில், ஒரு சொல் அல்லது ஒரு தொடர் இருபொருள் தருமாறு அமைவது இரட்டுற மொழிதல் அணி.**)

7 "வாரல் என்ப போல் மறித்துக் கை காட்ட" - இதில் வந்துள்ள அணி யாது?

(விடை: **"வாரல் என்ப போல் மறித்துக் கை காட்ட" - இதில் வந்துள்ள அணி தற்குறிப்பேற்ற அணி.**)

8 "பெரிதினிது பேதையார் கேண்மை" - இதன்கண் வந்துள்ள அணி யாது?

(விடை: **"பெரிதினிது பேதையார் கேண்மை" - இதன்கண் வந்துள்ள அணி வஞ்சப்புகழ்ச்சி அணி.**)

9 "கோவளர்ப்ப கோ நகரங்களே" - இப்பாடலடியில் வந்துள்ளது எந்த அணி?

(விடை: **"கோவளர்ப்ப கோ நகரங்களே" - இப்பாடலடியில் வந்துள்ளது மடக்கு அணி.**)

10 பிறிதுமொழிதல் அணி என்றால் என்ன?

(விடை: **தாம் வலியுறுத்தவந்த கருத்தை நேரடியாகக் கூறாது, பிறிதொன்றைக் கூறி வலியுறுத்தும் அணி, பிறிதுமொழிதல் அணி ஆகும்.**)

# 17. பொருள்

பொருள் பொது அறிமுகம்

**General Introduction**

அன்புள்ள மாணவர்களே! வணக்கம்

பொருள் இலக்கணம் கூறும் இப்பகுதியில், அகப்பொருள், புறப்பொருள் பற்றிய விளக்கம், அவற்றின் உட்கூறுகளான முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் பன்னிரு புறத்திணைகள் ஆகியவை பற்றிக் காணவிருக்கின்றீர்கள்.

பொருள் பாட அறிமுகம்

**Introduction to Lesson**

அகப் பொருள் புறப்பொருள் இதன் விரிவான ஐந்து திணைவகைகள் முதல் கரு உரிப்பொருள் பன்னிரண்டு புறத் திணைகள் ஆகியனக் குறித்து இப்பாடத்தில் படிக்க இருக்கின்றிர்கள்

பொருள் பாடம்

**Lesson**

எழுத்தையும் சொல்லையும் கொண்டு அணிநயம் மிளிர யாப்பு இலக்கணம் சிதையாமல் பாடும் செய்யுள் பொருள் பொதிந்ததாக இருக்க வேண்டுமல்லவா? அப்பொருள் பற்றிக் கூறும் இலக்கணம் **பொருள் இலக்கணம்.** இது, **அகப்பொருள், புறப்பொருள்** என இரு வகைப்படும்.




திணை என்ற சொல்லுக்கு நிலம் - ஒழுக்கம் என இரண்டு பொருள் உண்டு.

| | | |
|---|---|---|
| 1. குறிஞ்சி | - | மலையும் மாலை சார்ந்த இடமும். |
| 2. முல்லை | - | காடும் காடு சார்ந்த இடமும் |
| 3. மருதம் | - | வயலும் வயல் சார்ந்த இடமும் |
| 4. நெய்தல் | - | கடலும் கடல் சார்ந்த இடமும் |
| 5. பாலை | - | மணலும் மணல் சார்ந்த இடமும் |

(பாலைக்குத் தனி நிலம் இல்லை. தத்தம் இயல்பில் குறைந்த குறிஞ்சியும் முல்லையும் பாலை என வழங்கப்பெறும்.)

பெரும் பொழுது

பெரும்பொழுது என்பது ஆண்டின் கூறுபாடுகள்.

(1) இளவேனிற் காலம்

(2) முதுவேனிற் காலம்

(3) கார் காலம்

(4) கூதிர் காலம்

(5) முன்பனிக்காலம்

(6) பின்பனிக்காலம்

சிறுபொழுது

சிறுபொழுது நாளின் கூறுபாடுகள்.

(1) வைகறை

(2) காலை

(3) நண்பகல்

(4) எற்பாடு (ஞாயிறு மறையும் நேரம்)

(5) மாலை

(6) யாமம்

| பெரும் பொழுது | | | உரிய திங்கள் |
|---|---|---|---|
| (1) | இளவேனிற் காலம் | - | சித்திரை, வைகாசி |
| (2) | முதுவேனிற் காலம் | - | ஆனி, ஆடி |
| (3) | கார்காலம் | - | ஆவணி, புரட்டாசி |
| (4) | குளிர்காலம் | - | ஐப்பசி, கார்த்திகை |
| (5) | முன்பனிக்காலம் | - | மார்கழி, தை |
| (6) | பின்பனிக் காலம் | - | மாசி, பங்குனி |

| | சிறுபொழுது | | உரிய நேரம் |
|---|---|---|---|
| (1) | வைகறை | - | இரவு 2 மணி முதல் காலை 6 மணி வரை |
| (2) | காலை | - | காலை 6 மணி முதல் முற்பகல் 10 மணி வரை |
| (3) | நண்பகல் | - | முற்பகல் 10 மணி முதல் பிற்பகல் 2 மணி வரை |
| (4) | எற்பாடு (எல்+படு | - | (ஞாயிறு மறையும் நேரம்) பிற்பகல் 2 மணி முதல் மாலை 6 மணி வரை |
| (5) | மாலை | - | மாலை 6 மணி முதல் இரவு 10 மணி வரை |
| (6) | யாமம் | - | இரவு 10 மணி முதல் நள்ளிரவு 2 மணி வரை. |

ஐந்து நிலங்களும் உரியப் பெரும் பொழுதுகளும் சிறுபொழுதுகளும் பின்வருமாறு :

(நிலமும் - பொழுதும்)

| எண் | நிலம் | பெரும்பொழுது | சிறுபொழுது |
|---|---|---|---|
| 1 | குறிஞ்சி | குளிர்காலமும் முன்பனிக்காலமும் | யாமம் |
| 2 | முல்லை | கார்காலம் | மாலை |
| 3 | மருதம் | பெரும்பொழுதுகள் ஆறும் | வைகறை |
| 4 | நெய்தல் | பெரும்பொழுதுகள் ஆறும் | எற்பாடு |
| 5 | பாலை | இளவேனில், முதுவேனில் | நண்பகல் |

கருப்பொருள் அட்டவணை

| கருப்பொருள் | குறிஞ்சி | முல்லை | மருதம் | நெய்தல் | பாலை |
|---|---|---|---|---|---|
| தெய்வம் | முருகன் | திருமால் | இந்திரன் | வருணன் | கொற்றவை |
| மக்கள் | வெற்பன், குறவர், குறத்தியர் | தோன்றல், ஆயர், ஆய்ச்சியர் | ஊரன், உழவர், உழத்தியர் | சேர்ப்பன், பரதர், பரத்தியர் | எயினர், எயிற்றியர் |
| உணவு | மலைநெல், தினை | வரகு, சாமை | செந்நெல், வெண்ணெய் | மீன், உப்புக்குப் பெற்ற பொருள் | சூறையாடலால் வரும் பொருள் |
| விலங்கு | புலி, கரடி, சிங்கம் | முயல், மான் | எருமை, நீர்நாய் | முதலை, சுறா | வலியிழந்த யானை, புலி |
| பூ | குறிஞ்சி, காந்தள் | முல்லை, தோன்றி | செங்கழுநீர், தாமரை | தாழை, நெய்தல் | குரவம், பாதிரி |
| மரங்கள் | அகில், வேங்கை | கொன்றை, கயா | காஞ்சி, மருதம் | புன்னை, ஞாழல் | இருப்பை, பாலை |
| பறவை | கிளி, மயில் | காட்டுக்கோழி, மயில் | நாரை, நீர்கோழி, அன்னம் | கடற்காகம் | புறா, பருந்து |
| ஊர் | சிறுகுடி | பாடி, சேரி | பேரூர், மூதூர் | பட்டினம், பாக்கம் | குறும்பு |
| நீர் | அருவி, சுனைநீர் | காட்டாறு | மனைக்கிணறு, பொய்கை | மணற்கிணறு, உவர்க்கழி | வற்றிய சுனை, கிணறு |
| பறை | தொண்டகம் | ஏறுகோட்பறை | மணமுழா, நெல்லரி கிணை | மீன்கோட்பறை | துடி |
| யாழ் | குறிஞ்சி யாழ் | முல்லை யாழ் | மருத யாழ் | விளரி யாழ் | பாலையாழ் |
| பண் | குறிஞ்சிப் பண் | சாதாரிப்பண் | மருதப்பண் | செவ்வழிப்பண் | பஞ்சுரப் பண் |
| தொழில் | தேன் எடுத்தல், கிழங்கு அகழ்தல் | ஏறு தழுவுதல், நிரை மேய்த்தல் | நெல்லரிதல், களை பறித்தல் | மீன் பிடித்தல், உப்பு விளைத்தல் | வழிப்பறி, நிரை கவர்தல் |

## புறப்பொருள்

ஒத்த அன்புடைய தலைவன் தலைவியரால் மட்டுமன்றி யாவராலும் துய்க்கப் பெற்று, பிறருக்கும் கூறப்படும் தன்மைவாய்ந்த பொருள் புறப்பொருள்.

இது, அறமும் பொருளும் அவற்றின் நிலையின்மையும் வீடுபேறும் பற்றிக் கூறுவது.

### புறப்பொருள் திணைகள் - 12

| எண் | திணை | விளக்கம் |
|---|---|---|
| 1 | வெட்சி | பசுக்களைக் கவர்தல் |
| 2 | கரந்தை | பசுக்களை மீட்டல் |
| 3 | வஞ்சி | வஞ்சினம் கூறி வஞ்சிப்பூச் சூடிப் போருக்குப் புறப்படுதல் |
| 4 | காஞ்சி | எதிர்த்துப் போர் புரிய நிற்றல் |
| 5 | உழிஞை | பகைவரின் மதிலை வளைத்தல் |
| 6 | நொச்சி | மதிலுக்குள் புகாதவாறு தடுத்துப் போர்ப் புரிதல் |
| 7 | தும்பை | நேர் நேர் நின்று போர்ச் செய்தல் |
| 8 | வாகை | வெற்றி பெற்றவர் வாகைப்பூச் சூடுதல். |
| 9 | பாடாண் | அரசனின் புகழ், கொடை, வலிமை, வீரம் முதலான பண்புகளைப் புகழ்ந்து பாடுதல். |
| 10 | பொதுவியல் | புறத்திணைகளுக்குப் பொதுவான செய்திகளைக் கூறுதல். |
| 11 | கைக்கிளை | ஒரு தலைக் காதல் |
| 12 | பெருந்திணை | பொருந்தாக் காதல் |

**Exercise 1**

I. கீழ்க்காணும் தொடர்களைப் படிக்கவும். அவற்றைச் சரியா? தவறா? என அறிந்து கூறவும். விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Read the following and say whether they are right or wrong. For answers, press the answer button.

1 பொருள் இலக்கணம் அகப்பொருள், புறப்பொருள் என இருவகைபெறும்.

(விடை: சரி)

2 காதலையும் வீரத்தையும் கூறுவது அகப்பொருள்.

(விடை: தவறு)

3 'திணை' என்ற சொல்லுக்கு நிலம் - ஒழுக்கம் என இரு பொருள் உண்டு.

(விடை: சரி)

4 மருதம் என்பது ஐவகை நிலங்களுள் ஒன்று.

(விடை: சரி)

5 கடலும் கடல் சார்ந்த இடமும் குறிஞ்சி எனப்பெறும்.

(விடை: தவறு)

6 பெரும்பொழுது என்பது ஆண்டின் கூறுபாடு.

(விடை: சரி)

7 சிறுபொழுது என்பது நாளின் கூறுபாடு.

(விடை: சரி)

8 சித்திரை, வைகாசி - இரண்டும் குளிர்காலம்.

(விடை: தவறு)

9 'கைக்கிளை' என்பது ஒருதலைக் காதல்.

(விடை: சரி)

10 பெருந்திணை என்பது அன்புடைக் காதல்.

(விடை: தவறு)

II. கீழ்க்காணும் கோடிட்ட இடங்களை நிரப்பச் சரியான சொற்களைக் காண்க.

விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Find the right words to fill in the blanks: For answers, press the answer button.

1 செய்யுளின் பாடுபொருள் பற்றிக் கூறும் இலக்கணம் -------- எனப்பெறும்.

(விடை: பொருள் இலக்கணம்)

2 பொருள் இலக்கணம் ------------, ------------- என இருவகை பெறும்.

(விடை: அகப்பொருள், புறப்பொருள்)

3 முல்லைத் திணை என்பது ----------- பகுதியாகும்.

(விடை: காடும் காடு சார்ந்த)

4 தத்தம் இயல்பில் குறைந்த குறிஞ்சியும் முல்லையும் -------- எனப்பெறும்.

(விடை: பாலை நிலம்)

5 மார்கழி, தை ஆகிய இரண்டு திங்களும் --------.

(விடை: முன்பனிக் காலம்)

6 குறிஞ்சி நிலக் கடவுள் -----------.

(விடை: முருகன்)

7 அறமும் பொருளும் அவற்றின் நிலையின்மையும் வீடுபேறும் பற்றிக் கூறுவது ---------.

(விடை: புறப்பொருள்)

8 வெட்சித்திணை என்பது -----------.

(விடை: பசுக்கூட்டங்களைக் கவர்தல்)

9 பகைவரின் மதிலை வளைத்தல் -----------.

(விடை: உழிஞைத் திணை)

10 அரசனின் புகழ், கொடை, வலிமை, வீரம் முதலானவற்றைப் பாடும் புறத்திணை ------------.

(விடை: பாடாண் திணை ஆகும்)

III. கீழ்க்காணும் வினாக்களுக்குச் சரியான விடையைத் தேர்ந்தெடுத்து எழுதவும். விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Choose the right answer for the following questions. For answers, press the answer button.

1 பொருள் இலக்கணத்தின் வகை

அ) இரண்டு

ஆ) பன்னிரண்டு

இ) ஐந்து

ஈ) ஆறு

(விடை: அ) இரண்டு)

2 அன்பின் ஐந்திணையின் வகை

அ) பத்து

ஆ) பதினொன்று

இ) ஐந்து

ஈ) பதினைந்து

(விடை: இ) ஐந்து)

3 புறத்திணைகளின் வகை

அ) 65

ஆ) 25

இ) 12

ஈ) 15

(விடை: இ) 12)

4 கருப்பொருள்கள் மொத்தம்

அ) நான்கு

ஆ) எட்டு

இ) பதினாறு

ஈ) பதினான்கு

(விடை: ஈ) பதினான்கு)

5 ஆனி, ஆடி ஆகிய இரண்டு திங்களும்

அ) முதுவேனிற்காலம்

ஆ) கார்காலம்

இ) குளிர்காலம்

ஈ) இளவேனிற்காலம்

(விடை: அ) முதுவேனிற்காலம்)

6 முல்லை நிலத்திற்குரிய சிறுபொழுது

அ) யாமம்

ஆ) மாலை

இ) வைகறை

ஈ) நண்பகல்

(விடை: ஆ) மாலை)

7 மருதநிலத்திற்கு உரிய பூ

அ) காந்தள்

ஆ) குரவம்

இ) தாழை

ஈ) தாமரை

(விடை: ஈ) தாமரை)

8 அருவி நீருக்கும் சுனை நீருக்கும் உரிய நிலம்

அ) பாலை

ஆ) நெய்தல்

இ) குறிஞ்சி

ஈ) முல்லை

(விடை: இ) குறிஞ்சி)

9 கரந்தைத் திணை என்பது

அ) பசுக்களைக் கவர்தல்

ஆ) பசுக்களை மீட்டல்

இ) மதிலை வளைத்தல்

ஈ) நேர்நின்று போரிடுதல்

(விடை: ஆ) பசுக்களை மீட்டல்)

10 நொச்சித் திணை என்பது

அ) மதிலை வளைத்தல்

ஆ) நேர் நின்று போரிடுதல்

இ) மதிலுக்குள் புகாதவாறு தடுத்துப் போரிடுதல்

ஈ) பசுக்களைக் கவர்தல்

(விடை: இ) மதிலுக்குள் புகாதவாறு தடுத்துப் போரிடுதல்)

பொருள் பயிற்சி - 4

**Exercise 4**

IV கீழ்க்காணும் வினாக்களுக்கு ஒருவரியில் விடை தரவும். விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Answer the following questions in a line each: For answers, press the answer button.

1 பொருள் இலக்கணம் என்பது யாது?

(விடை: செய்யுளில் பாடுபொருளாக அமையும் பொருள் பற்றிக் கூறுவது பொருள் இலக்கணம்.)

2 பொருள் இலக்கணம் எத்தனை வகை பெறும்? அவை யாவை?

(விடை: பொருள் இலக்கணம் இருவகை பெறும். அவை, அகப்பொருள், புறப்பொருள்.)

3 அகப்பொருள் என்றால் என்ன?

(விடை: ஒத்த அன்புடைய தலைவன் தலைவியின் காதல் வாழ்க்கை பற்றிக் கூறுவது அகப்பொருள்.)

4 புறப்பொருள் என்றால் என்ன?

(விடை: அறமும் பொருளும் அவற்றின் நிலையின்மையும் வீடுபேறும் பற்றிக் கூறுவது புறப்பொருள்.)

5 குறிஞ்சி நிலத்திற்குரிய நிலம் யாது?

(விடை: மலையும் மலைசார்ந்த இடமும் குறிஞ்சி நிலமாகும்.)

6 பொழுதின் வகைப்பாடு யாவை?

(விடை: பெரும்பொழுது, சிறுபொழுது என பொழுது இரு வகை பெறும்.)

7 எற்பாடு என்பதன் விளக்கம் யாது?

(விடை: ஞாயிறு மறையும் நேரம் (எல்+படு) எற்பாடு எனப்பெறும்.)

8 முல்லை நில மக்களுக்குரிய தொழில்கள் யாவை?

(விடை: முல்லை நில மக்களுக்குரிய தொழில்கள் ஏறு தழுவலும், நிரை மேய்த்தலும்.)

9 பொருத்தமற்ற காதலைப் புறத்திணை எவ்வாறு குறிப்பிடுகிறது?

(விடை: பொருத்தமற்ற காதலைப் புறத்திணை பெருந்திணை எனக் குறிப்பிடுகிறது.)

10 பாடாண் திணை என்றால் என்ன?

(விடை: ஓர் அரசனின் புகழ், கொடை, வலிமை, வீரம் பற்றிப் புகழ்ந்து பாடுவது பாடாண் திணை எனப்பெறும்.)

# 18.பொது

பொது | பொது அறிமுகம்

**General Introduction**

அன்புள்ள மாணவர்களே! வணக்கம்

இதுவரை எழுத்து, சொல், புணர்ச்சி, யாப்பு, அணி, பொருள் ஆகிய மரபு இலக்கணம் பற்றிக் கற்றுக் கொண்டீர்கள்.

இனி,. மொழியைக் கையாளும்விதமாக இலக்கணப் பகுதியில் சில பயிற்சிகளைக் கற்க இருக்கின்றீர்கள். அவை பொது என்ற தலைப்பில் வழங்கப் பெறுகின்றன.

பொது | பாட அறிமுகம்

**Introduction to Lesson**

இப்பகுதியில், எழுதும்முறை, மயங்கொலிகளின் பொருள் வேறுபாடுகள், மரபு, வாக்கிய வகைகள் ஆகியவை பற்றி அறிந்து கொள்ளவிருக்கிறீர்கள்.

அவற்றையொட்டிய பயிற்சிகளும் வழங்கப்பெற்றுள்ளன. கற்று மகிழ்க!

பொது | பாடம்

**Lesson**

எழுதும் முறைகளுள் மிகவும் கவனித்தற்பாலன இடம்விட்டு எழுதுதலும் சேர்த்து எழுதுதலும் ஆகும்.

பொருள் உணர்வுக்கு ஏற்ப, வரிக்குவரி இடம்விட்டு எழுதுதல் வேண்டும். பத்திக்குப் பத்தி இடைவெளிவிட்டுத் தொடங்குதல் வேண்டும்.

சொற்களுக்கு இடையே இடம்விட்டு எழுதுதலையும் சேர்த்து எழுதுதலையும் பற்றி இப்பகுதியில் அறிந்து கொள்க.

பாரதியார் என்று சேர்த்து எழுத வேண்டியதைப் பாரதி யார் என இடம்விட்டு எழுதின் ஏற்படும் பொருள் மாற்றத்தை நீங்கள் அறிவீர்கள்!

**“அவள் அக்காள், வீட்டிற்குச் சென்றாள்”** என்னும் தொடருக்கும் **“அவள், அக்காள்வீட்டிற்குச் சென்றாள்”** என்னும் தொடருக்கும் (இடம் விட்டு எழுதுவதால் ஏற்பட்டுள்ள) பொருள் வேறுபாட்டை அறிந்து கொள்க.

“மூலம் நட்சத்திரத்தில் பிறந்தான்” என்பதை “மூல நட்சத்திரத்தில் பிறந்தான்” – என இடம்விட்டு எழுதுவதால் தோன்றும், நகைச்சுவைப் பொருளை யாவரும் அறிவோம்.

எனவே, இடம்விட்டு எழுத வேண்டியதை இடம்விட்டு எழுதவும், சேர்த்து எழுத வேண்டியதைச் சேர்த்தும் எழுதிடவும் வேண்டும் என்பதையும் அறிந்து நினைவில் கொள்க.

**எழுதும்போது கருத்தில் கொள்ள வேண்டிய முறைகள்:-**

1. பண்புத்தொகை, வினைத்தொகை முதலானவை ஒருசொல் நீர்மைத்து. எனவே, அவற்றைப் பிரித்து எழுதுதல் கூடாது.

எடுத்துக்காட்டு:

| | | |
|---|---|---|
| செந்தமிழ் | (சரி) | |
| செந் தமிழ் | (தவறு) | - பண்புத்தொகை |
| சுடுசோறு | (சரி) | |
| சுடு சோறு | (தவறு) | - வினைத்தொகை |

**2. வேற்றுமை உருபுகளைப் பிரித்து எழுதல் கூடாது.**

எடுத்துக்காட்டு:

| | | |
|---|---|---|
| தாயோடு அறுசுவைபோம் | (சரி) | |
| தாய் ஓடு அறுசுவைபோம் | (தவறு) | ஓடு வேற்றுமையுருபு |

**3. இடைச்சொற்களைச் சேர்த்து எழுதுதல் வேண்டும்.**

எடுத்துக்காட்டு:

**சான்றோரும் உண்டுகொல்? (சரி)**

**சான்றோரும் உண்டு கொல் (தவறு)** கொல் இடைச்சொல்

**4. "துணை வினையைச்"** சேர்த்து எழுதுதல் வேண்டும்.

எடுத்துக்காட்டு:

**சென்றுவிடு (சரி)**

**சென்று விடு (தவறு)** 'விடு' - துணைவினை

**மறந்துவிட்டாள் (சரி)**

**மறந்து விட்டாள் (தவறு)** 'விட்டாள்' - துணைவினை

**5. உடம்படு மெய்களைச்'** சேர்த்து எழுதுதல் வேண்டும்.

எடுத்துக்காட்டு:

காண + இல்லை = காணவில்லை (சரி)

காண இல்லை (தவறு) 'வ்' - உடம்படுமெய்

நிலா + ஒளி = நிலாவொளி (சரி)

நிலா ஒளி (தவறு) 'வ்' உடம்படுமெய்

**6. 'கள்'** விகுதியைப் பிரிக்காமல் எழுதுதல் வேண்டும்.

எடுத்துக்காட்டு:

**மரங்கள் நட்டார்** (சரி)

**மரங் கள் நட்டார்.** (தவறு) 'கள்' விகுதி

**பூனைகள் குடித்தன.** (சரி)

**பூனை = கள் குடித்தன.** (தவறு) 'கள்' விகுதி

அன்பு மாணவ மாணவியரே!

மேற்கூறியவை தவிர, எழுதும்பொழுது கவனத்திற் கொள்ள வேண்டிய சில பொது முறைகளையும் அறிந்து கொள்க. அவையாவன:

- தாளின் தலைப்புறம், அடிப்புறம், இடப்புறம் ஆகியவற்றில் குறைந்தது ஓர் அங்குலம் இடம் விட்டு எழுதுக.
- பத்தி தொடங்கும்பொழுது, மற்ற வரிகளைக் காட்டிலும் சிறிது தள்ளிப் பத்தியைத் தொடங்குக.
- தலைப்புகளை மையத்தில் எழுதுக.
- முற்றுப்புள்ளி, வினாக்குறி, வியப்புக் குறிகள் வருங்கால் சிறிது இடைவெளி விட்டு அடுத்த வாக்கியத்தைத் தொடங்குக.
- செய்யுள்களை எழுதும்பொழுது, சீரும் அடியும் பிறழாமல் எழுதுதல் வேண்டும். ஒரு சீருக்கும் அடுத்த சீருக்கும் இடைவெளிவிட்டு எழுதுதல் வேண்டும்.

நம் தமிழ் மொழியில் ல-ள-ழ; ர-ற; ன-ண-ந; முதலான வரிவடிவங்களை ஒலிக்கும் பொழுது முறையாக ஒலிக்க வேண்டும். அவ்வாறு ஒலிக்காவிடில் பொருள் தடுமாற்றமும் ஏற்படும்.

இவை, இதுவோ அதுவோ என்ற மயக்கம் தரும் ஒலிகள். ஆதலால், இவற்றை **மயங்கொலிகள்** என வழங்குவர்.

முதலில் ல-ள-ழ ஆகியவற்றின் ஒலிவேறுபாடு அறிந்து ஒலிக்க. அவ்வாறு ஒலிக்காவிடில் எழுதுவதிலும் தடுமாற்றம் வரும்; பொருளும் வேறுபடும் என்பதைக் கீழ்க்காணுமாறு அறிந்து பயன்படுத்துக.

அலகு - பறவையின் மூக்கு

அளகு - பெண் மயில்

அழகு - எழில், வனப்பு, கவின்

அலை - கடல் அலை

அளை - புற்று

அழை - கூப்பிடு

இலை - மரம், செடி, கொடிகளின் இலை

இளை - (உடல்) இளைத்தல்

இழை - நூல்

கலை - 64 கவின் கலைகள்

களை - பயிர்களுக்கு இடையில் தோன்றும் களை

கழை - மூங்கில்

தலை - ஓர் உறுப்பு

தளை - விலங்கு

தழை - தழைத்தல்

வலி - வலிமை

வளி - காற்று

வழி - பாதை

II. அடுத்து, ர-ற ஒலிவேறுபாடு அறிந்து ஒலிக்கவும். பொருள் வேறுபாடு அறிந்து பயன்படுத்தவும். கீழ்க்காணும் முறையில் அறிந்து கொள்க:-

அரி - திருமால், அரிமா (சிங்கம்)

அறி - அறிந்து கொள், தெரிந்துகொள்

அலரி - அலரிப்பூ

அலறி - அழுது

இரத்தல் - பிச்சையெடுத்தல்

இறத்தல் - சாதல்

உரவு - வலிமை

உறவு - சுற்றம்

உரை - சொல்

உறை - தலையணை உறை

எரி - தீ

எறி - வீசு

கரி - யானை

கறி - மிளகு, காய்கறி

| | |
|---|---|
| குரங்கு | - வானரம் (ஒரு விலங்கு) |
| குறங்கு | - தொடை (ஓர் உறுப்பு) |
| கூரை | - வீட்டுக் கூரை |
| கூறை | - துணி |
| சீரிய | - சிறந்த |
| சீறிய | - சினந்த |
| பரவை | - கடல் |
| பறவை | - பறப்பனவாகிய உயிரினம் |
| மரை | - தாமரை, மான் |
| மறை | - வேதம் |

இவை போல்வனவற்றையும் கண்டறிந்து பயன்படுத்துக.

III. ந-ண-ன ஒலி வேறுபாடு அறிந்து முறையாக ஒலிக்கவும், பொருள் வேறுபாடு உணர்ந்து பயன்படுத்தவும் கீழ்க்காணும் முறையில் அறிந்து கொள்க.

| | |
|---|---|
| அணல் | - தாடி |
| அனல் | - நெருப்பு |
| ஆணி | - இரும்பால் ஆன ஆணி |
| ஆனி | - தமிழ் மாதங்களுள் ஒன்று |
| ஊண் | - உணவு |
| ஊன் | - இறைச்சி |
| கணம் | - கூட்டம் |
| கனம் | - பளு, பாரம் |
| பேண் | - காப்பாற்று |
| பேன் | - தலையில் வாழும் (ஓர் உயிரி) பேன் |
| மணம் | - நறுமணம் |
| மனம் | - உள்ளம் |
| மணை | - உட்காரும் பலகை |
| மனை | - வீடு |
| மாண் | - பெருமை |
| மான் | - புள்ளிமான் (ஒருவகை விலங்கு) |
| முந்நாள் | - மூன்று நாள் |

| | |
|---|---|
| முன்னாள் | - முந்தைய நாள் |
| தேநீர் | - தேயிலை நீர் |
| தேனீர் | - தேன்போலும் இனிய நீர் |
| திணை | - நிலம், ஒழுக்கம் |
| தினை | - தானிய வகையுள் ஒன்று, சிறிய |
| கணை | - அம்பு |
| கனை | - குதிரை கனைத்தல் |

இவை போல்வனவற்றைக் கண்டறிந்து பயன்படுத்துக.

## மரபு

அன்புக்குரிய மாணவ மாணவியரே !

'நம் முன்னோர்கள், எப்பொருளை, எச்சொல்லால் இயம்பினரோ, அப்பொருளை அச்சொல்லால் இயம்புதல் அல்லது வழங்குதல்' மரபு எனப்படும்.

அம்மரபுகள் சிலவற்றைத் தெரிந்து கொள்க.

**அ) பறவை - விலங்குகளின் ஒலி மரபுகள்**

| பறவை | விலங்கு |
|---|---|
| சேவல் கூவும் | நாய் குரைக்கும் |
| கூகை குழறும் | பன்றி உறுமும் |
| மயில் அகவும் | குதிரை கனைக்கும் |
| கிளி பேசும் | எருது எக்காளமிடும் |
| வண்டு முரலும் | சிங்கம் முழங்கும் (கர்ஜிக்கும்) |
| | யானை பிளிறும் |
| | எலி கீச்சிடும் |

**ஆ) பறவை, விலங்குகளின் இளமைப் பெயர்கள்**

| பறவை | விலங்கு |
|---|---|
| கோழிக் குஞ்சு | நாய்க் குட்டி |
| கிளிக் குஞ்சு | புலிப் பறழ் |

| | |
|---|---|
| அணிற்பிள்ளை | சிங்கக் குருளை |
| கீரிப்பிள்ளை | யானைக் கன்று |
| | பசுவின் கன்று |

இ) தாவர உறுப்புகள் பற்றிய மரபுகள் :

| | |
|---|---|
| வேப்பந்தழை | தாழை மடல் |
| ஆவரங் குழை | முருங்கைக் கீரை |
| நெல்தாள் | தென்னங் கீற்று |
| வாழைத் தண்டு | கம்பந்தட்டு (தட்டை) |
| கீரைத் தண்டு | சோளத் தட்டு |
| | கரும்புத் தோகை |

ஈ) பறவை - விலங்குகளின் உறைவிட மரபுகள் :

| | |
|---|---|
| கோழிப் பண்ணை | ஆட்டுப் பட்டி |
| குருவிக் கூடு | நண்டு வளை |
| சிலந்திவலை | கறையான் புற்று |
| எலிவளை | |
| (எலிப் பொந்து) | மாட்டுத் தொழுவம் |
| | குதிரைக் கொட்டில் |

உ) பெயருக்கு ஏற்ற வினை

வீடு கட்டினார்

சுவர்எழுப்பினார்

கூரைவேய்ந்தார்

குடம்வனைந்தார்

கூடை முடைந்தார்

செய்யுள் இயற்றினார்

நூல் எழுதினார்

சிற்பம் செதுக்கினார்

ஓவியம் வரைந்தார்

வண்ணம் தீட்டினார்

பாட்டுப் பாடினார்

நாடகம் நடித்தார்

நாட்டியம் ஆடினார்

தண்ணீர் குடித்தார்

பால் பருகினார்

உணவு உண்டார்

முறுக்குத் தின்றார்

எப்பொருள் எச்சொலின் எவ்வாறு உயர்ந்தோர்
செப்பினர் அப்படிச் செப்புதல் மரபே - (நன்னூல்-388)




**கருத்து வகை வாக்கியம்**

1) செய்தி வாக்கியம் - "திருமுருகாற்றுப் படை பத்துப்பாட்டில் முதன்மையானது."

2) வினா வாக்கியம் - "மாணாக்கர் கடமை யாது-?"

3) விழைவு வாக்கியம் - (அ) கட்டளை, (ஆ) வேண்டுகோள் (இ) வாழ்த்தல், (4) வைதல்

(அ) கட்டளை - "தமிழை முறையாகப் படி."

(ஆ) வேண்டுகோள் - "நல்ல நூற்களை நாளும் கற்க."

(இ) வாழ்த்தல் - "வாழ்வாங்கு வாழ்க."

(ஈ) வைதல் (அ) சபித்தல் - "தீமைகள் அழிக."

4) உணர்ச்சி வாக்கியம் - "என்னே தமிழின் இனிமை!"

**அமைப்பு வகை வாக்கியம்**

1) தனிவாக்கியம் - "பாண்டியர் தமிழை வளர்த்தனர் ஓரெழுவாய் அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட எழுவாய் ஒரே பயனிலையைக் கொண்டு முடிவது.)

2) தொடர் வாக்கியம் - "சமயம் என்பது நன்னடத்தை ; வெறும் நம்பிக்கை அன்று." (இவ்வாறு, தனி வாக்கியங்கள் பல தொடர்ந்து வருவது.)

3) கலவை வாக்கியம் -"ஆண்மக்களே ! பெண்ணினத்திற்கு மதிப்புக் கொடுங்கள் ; உரிமை கொடுங்கள் !" (ஒரு முதன்மை வாக்கியம், பல சார்பு வாக்கியங்களுடன் பொருந்த வருவது.)

**ஒரே கருத்தைப் பல வடிவ வாக்கியங்களில் அமைத்தல்**

அன்பு மாணவர்களே! ஒரே கருத்தைப் பலவித வாக்கியங்களில் அமைத்து எழுதுவது ஒரு சிறந்த மொழித் திறன். அதனை அறிந்து கொள்க.

| எண் | தன்வினை | பிறவினை |
|---|---|---|
| 1. | அ) திருக்குறள் கற்றேன். | திருக்குறளைக் கற்பித்தேன் |
| | ஆ) "நண்பர்கள் வீட்டில் விருந்து உண்டேன். | "நண்பரை விருந்து உண்பித்தேன்." |
| | இ) "கொள்ளையர் கொட்டம் அடங்கினர்." | "காவலர் கொள்ளையர் கொட்டத்தை அடக்கினர். |

| | | |
|---|---|---|
| 2 | செய்வினை<br><br>அ) "கரிகாலன் கல்லணையைக் கட்டினான்.<br><br>ஆ) "தமிழக அரசு இணையப் பல்கலைக்கழகத்தை நிறுவியுள்ளது.<br><br>இ) "சோழன், சேக்கிழாரை வரவேற்று வணங்கினான்." | செயப்பாட்டு வினை<br><br>"கல்லணை கரிகாலனால் கட்டப்பட்டது.<br><br>இணையப் பல்கலைக்கழகம் தமிழக அரசால் நிறுவப்பட்டது.<br><br>சேக்கிழார், சோழனால் வரவேற்கப் பட்டு வணங்கப்பட்டார். |
| 3 | உடன்பாட்டு வாக்கியம்<br><br>அ) "மொழிகள் சிலவே இலக்கிய வளம் உள்ளவை."<br><br>ஆ) "பேதை தனக்குத் தானே கேடு செய்து கொள்கிறான்."<br><br>இ) "திருக்குறளில் எல்லாக் கருத்துகளும் உள." | எதிர்மறை வாக்கியம்<br><br>"மொழிகள் பல இலக்கிய வளம் அற்றவை."<br><br>"பேதைக்குக் கேடு செய்ய வேறொருவர் வேண்டியதில்லை."<br><br>"திருக்குறளில் இல்லாத கருத்துகள் இல்லை." |
| 4 | செய்தி வாக்கியம்<br><br>அ) "நாம் கல்வி பயில்வது வேலை பெறுவதற்கு மட்டுமன்று."<br><br>ஆ) "முயன்றால் அனைத்தும் ஆகும்."<br><br>இ) தமிழின் இனிமையை ஒருவரும் மறுக்கார் | வினா வாக்கியம்<br><br>"நாம் வேலை பெறுவதற்கு மட்டுமா கல்வி பயில்வது?"<br><br>"முயன்றால் ஆகாததும் உண்டோ?"<br><br>தமிழின் இனிமையை எவரும் மறுப்பரோ. |

| | | |
|---|---|---|
| 5 | செய்தி வாக்கியம்<br><br>அ) "வைகறையில் துயில் எழுதல் வேண்டும்."<br><br>ஆ) "உலகத் தமிழர் ஒன்றுபட வேண்டும்."<br><br>இ) "ஒன்று செய்தாலும் நன்று செய்தல் வேண்டும்." | கட்டளை வாக்கியம்<br><br>"வைகறைத் துயில் எழு."<br><br>"உலகத் தமிழர் ஒன்று படுக."<br><br>"ஒன்றே செய்க ; அதுவும் நன்றே செய்க." |
| 6 | செய்தி வாக்கியம்<br><br>அ) கணினியின் செயற்பாடுகள் சிறப்பாக உள்ளன.<br><br>ஆ)ஆழிப்பேரலையால் பேரழிவு ஏற்பட்டது.<br><br>இ) நான் அமைச்சரானால் நன்றாக இருக்கும். | உணர்ச்சி வாக்கியம்<br><br>என்னே ! கணினின் செயற்பாடுகள் !<br><br>ஐயகோ ! ஆழிப் பேரலையால் ஏற்பட்ட அழிவுதான் என்னே !<br><br>ஆகா ! நான் மட்டும் அமைச்சரானால் எப்படி இருக்கும் ! |

பொது

பயிற்சி - 1

**Exercise 1**

I. கீழ்க்காணும் தொடர்களைப் படிக்கவும். அவற்றைச் சரியா? தவறா? என அறிந்து கூறவும். விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Read the following and say whether they are right or wrong. For answers, press the answer button.

1 பண்புத்தொகை, வினைத்தொகை ஆகியவற்றைப் பிரித்து எழுதுதல் கூடாது.
(விடை: சரி)

2 துணைவினையைச் சேர்த்து எழுதக் கூடாது.
(விடை: தவறு)

3 தலைப்புகளை மையத்தில் எழுதுதல் வேண்டும்.
(விடை: சரி)

4 ல-ள-ழ - இவற்றின் ஒலிகள் 'மயங்கொலிகள்' எனப் பெறும்.
(விடை: சரி)

5 ‘அளை’ என்னும் சொல்லின் பொருள் ‘கூப்பிடு’ என்பதாகும்.

(விடை: தவறு)

6 ‘விலங்கு’ என்னும் பொருள் தரும் சொல் தழை.

(விடை: தவறு)

7 ‘பரவை’ என்னும் சொல்லின் பொருள் ‘கடல்’ என்பதாகும்.

(விடை: சரி)

8 மான் என்ற பொருள் தரும் சொல் ‘மரை’ ஆகும்.

(விடை: சரி)

9 ‘நெருப்பு’ என்ற பொருளைத் தரும் சொல் ‘அணல்’ ஆகும்.

(விடை: தவறு)

10 ‘யானை கத்தும்’ - என்று கூறுவது மரபு பிழை.

(விடை: சரி)

பொது

பயிற்சி - 2

**Exercise 2**

II. கீழ்க்காணும் கோடிட்ட இடங்களை நிரப்பச் சரியான சொற்களைக் காண்க. விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Find the right words to fill in the blanks: For answers, press the answer button.

1 பண்புத்தொகையை எழுதும் போது --------- எழுதுதல் வேண்டும்.

(விடை: சேர்த்து)

2 சொல்லுடன் ‘கள்’ விகுதியை ------------ எழுதுதல் வேண்டும்.

(விடை: பிரிக்காமல்)

3 செய்யுளை எழுதும் பொழுது சீரும் அடியும் ------- எழுத வேண்டும்.

(விடை: பிறழாமல்)

4 ல-ள-ழ; ன-ண முதலான ஒலிகள் --------- என வழங்க பெறுகின்றன.

(விடை: மயங்கொலிகள்)

5 நம் முன்னோர் எச்சொல்லை எவ்வாறு சொன்னார்களோ, அவ்வாறே சொல்லுதல் -------- எனப் பெறும்.

(விடை: மரபு)

6 சிங்கத்தின் இளமைப் பெயர் ----------- என்பதாகும்.

(விடை: சிங்கக் குருளை)

7 மயிலின் குரலை -------- என்பது மரபு.

(விடை: அகவுதல்)

8 'உலகத் தமிழரே ஒன்றுபடுக!' என்பது ---------- வாக்கியம்.

(விடை: கட்டளை)

9 'குதிரைக் கொட்டில்' என்று கூறுவது விலங்கின் ------- மரபாகும்.

(விடை: உறைவிட)

10 என்னே! தமிழின் இனிமை! என்பது ---------- வாக்கியமாகும்.

(விடை: உணர்ச்சி)

பொது

பயிற்சி - 3

**Exercise 3**

III. கீழ்க்காணும் வினாக்களுக்குச் சரியான விடையைத் தேர்ந்தெடுத்து எழுதவும். விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Choose the right answer for the following questions. For answers, press the answer button.

1 தலைப்புகளை எழுது வேண்டிய இடம்

அ) ஓரம்

ஆ) கீழ்

இ) மையம்

ஈ) இடப்புறம்

(விடை: இ) மையம்)

2 'கழை' - என்ற சொல்லின் பொருள்

அ) கவின்கலை

ஆ) மூங்கில்

இ) பயிர்களுக்கு இடையில் தோன்றுவது

ஈ) செடி

(விடை: ஆ) மூங்கில்)

3 'கரி'------------ என்ற சொல்லின் பொருள்

அ) யானை

ஆ) காய்கறி

இ) மிளகு

ஈ) கூட்டு

(விடை: அ) யானை)

4 'மாண்' - என்பதன் பொருள்

அ) புள்ளிமான்

ஆ) பெருமை

இ) மானம்

ஈ) வானம்

(விடை: ஆ) பெருமை)

5 பசுவின் இளமை மரபு பெயர்

அ) குட்டி

ஆ) குருளை

இ) பறள்

ஈ) கன்று

(விடை: ஈ) கன்று)

6 நண்டுக்குரிய உறைவிட மரபு பெயர்

அ) பொந்து

ஆ) வளை

இ) கூடு

ஈ) வலை

(விடை: ஆ) வளை)

7 தமிழை முறையாகப் படி. - என்று கூறுவது

அ) செய்தி வாக்கியம்

ஆ) கட்டளை வாக்கியம்

இ) உணர்ச்சி வாக்கியம்

ஈ) வினாவாக்கியம்

(விடை: ஆ) கட்டளை வாக்கியம்)

8 இணையப் பல்கலைக்கழகம் தமிழக அரசால் நிறுவப் பெற்றது. - இது

அ) செயப்பாட்டு வினை

ஆ) தன்வினை

இ) செய்வினை

ஈ) எதிர்மறை வினை

(விடை: அ) செயப்பாட்டு வினை)

9 “தமிழின் இனிமையை ஒருவரும் மறுக்கார்.’ என்பது

அ) செய்தி வாக்கியம்

ஆ) வியப்பு வாக்கியம்

இ) உணர்ச்சி வாக்கியம்

ஈ) கட்டளை வாக்கியம்

(விடை: அ) செய்தி வாக்கியம்)

10 ‘திருக்குறளில் எல்லாக் கருத்துகளும் உள.’ - இது

அ) செய்வினை

ஆ) செயப்பாட்டுவினை

இ) தன்வினை

ஈ) உடன்பாடு

(விடை: ஈ) உடன்பாடு)

பொது

பயிற்சி - 4

**Exercise 4**

IV கீழ்க்காணும் வினாக்களுக்கு ஒருவரியில் விடை தரவும். விடை காண விடைத் தொடர்பை அழுத்தவும்.

Answer the following questions in a line each: For answers, press the answer button.

1 எழுதுமுறைகளுள் மிகவும் கவனித்தற்பாலன யாவை?

(விடை: எழுதும் முறைகளுள் மிகவும் கவனித்தற்பாலன, இடம்விட்டு எழுதுதலும் சேர்த்து எழுதுதலும் ஆகும்.)

2 சேர்த்தே எழுத வேண்டியவை இரண்டனைக் கூறுக.

(விடை: சேர்த்தே எழுத வேண்டியவை

1. பண்புத்தொகை

2. வினைத்தொகை

3 செய்யுளை எழுதும்பொழுது கவனத்திற் கொள்ள வேண்டுவன யாவை?

(விடை: சீரும் அடியும் பிறழாமலும் சீருக்கு இடையில் இடைவெளி விட்டும் எழுதுதல் வேண்டும்.)

4 தமிழில் மயங்கொலிகள் எனப்பெறுபவை எவை? ஏன்?

(விடை: ல-ள-ழ; ன-ண; ர-ற இவை மயங்கொலிகள் எனப்பெறும். இதுவோ அதுவோ என்ற மயக்கத்தைத் தரும் ஒலிகளாதலால் மயங்கொலிகள் எனப் பெறுகின்றன.)